

# நாட்டுக்கோட்டை நகரத்தார்
# செந்தூல், கோலாலம்பூர்
# அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்

எண். 332, ஜாலான் ஈப்போ, 2 மைல், 51200 கோலாலம்பூர்



# குடமுழுக்கு விழா மலர்

## குரோதி ஆண்டு தைத்திங்கள் 21ஆம் நாள் (3.2.2025)

அரசமரத்தடி விநாயகர் - செந்தூல்

## ஸ்ரீ விநாயகர் துணை

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகந்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே!





முருகன்என்று பேர்சொன்னால் மூளுவினை மாளாதோ?
முருகன்என்று பேர்சொன்னால் மூடமனம் தெளியாதோ?
முருகன்என்று பேர்சொன்னால் முதிர்கருவும் தொலையாதோ ?
முருகன்என்ற பேர்சொன்னால் முத்தியின்பம் வாராதோ?

25/5



**MENTERI DIGITAL**
***Minister of Digital***



BEST WISHES FOR THE 7TH CONSECRATION
CEREMONY OF KUALA LUMPUR, SENTUL
SRI THANDAYUTHAPANI TEMPLE.
MAY LORD MURUGA BLESS US ALL

**YB GOBIND SINGH DEO**
MINISTER OF DIGITAL MALAYSIA



உ
சிவமயம்

# ஆலய காரியக்காரர் பழ. சிதம்பரம்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி



நகரத்தார்கள் 150 ஆண்டுகளுக்கு முன்னர் மலேயா தீபகத்திற்கு தொழில் துவங்க வந்தபோது கப்பலில் வேல் எடுத்து வந்தனர். பினாங்கு, சிங்கப்பூருக்கு பிறகு 125 ஆண்டுகளுக்கு முன் கோலாலம்பூரில் அம்பாங் தெருவில் கிட்டங்கி அமைப்பில் தொழில் துவங்கி செந்தூல் ஈப்போ ரோட்டில் முதலில் வேல் வழிபாடு செய்து தற்போது உள்ள கோவில் கட்டினார்கள் எங்கள் அய்யா திரு.ஆவி ப முரு மு முருகப்ப செட்டியார் அவர்களும் ஆரம்ப கால முதல் இந்த கோவிலில் ஈடுபாடு கொண்டு வெள்ளி ரதம் 1924 வருடம் காரைக்குடியில் செய்து அனுப்பியிருக்கிறார்கள். 100ம் ஆண்டு நடக்கும் சமயத்தில் எங்கள் குடும்பத்திற்கு காரியத்தனம் பார்க்கும் வாய்ப்பு கொடுத்த ஸ்ரீதண்டயுதபாணி பெருமானுக்கும் குடமுழுக்கு செய்ய அனுமதி அளித்த நகரத்தார் பெருமக்கள் அனைவருக்கும் நன்றி.

1977 ஆண்டு முதல் தடவை காரியத்தனம் பார்த்தபோது திரு.மு க பெரி பழனியப்ப செட்டியார், அ க சித அழகப்ப செட்டியார், க வி அழ மு இராமநாதன் செட்டியார், சுப மு நா வீரப்ப செட்டியார், ப சு ராம அண்ணாமலை செட்டியார், ராம ப அழகப்ப செட்டியார், சி மெசுப்பையா செட்டியார், S O K காசி செட்டியார், நா அ நா நாச்சியப்ப செட்டியார், மு ராம மு முத்தையா செட்டியார் மற்றும் பெரியவர்கள் அனைவரும் மிகவும் அன்பாகவும் உதவியாகவும் இருந்ததை இன்று 5 ம் முறை காரியத்தனம் பார்க்கும் சமயம் நினைவு கூர்ந்து நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த மலர் மிகவும் சிறப்பாக கொண்டு வர உதவிய மாண்புமிகு டத்தோ ஸ்ரீ சரவணன் அவர்கள், கரு கார்த்திக், ராதாகிருஷ்ணன் (சிராகி), சோலை பாஸ்கரன் ஆகியோருக்கு என் மனம் கனிந்த நன்றி.

திருக்குட நன்னீராட்டு விழாவிற்குத் தலைமை ஏற்று 3ம் முறையாக சீரும் சிறப்பாக செய்து வைத்த பிள்ளையார்பட்டி விகாஷ்ரத்னா டாக்டர் பிச்சைக் குருக்கள், சோமு குருக்கள் மற்றும் யாகசாலை பொறுப்பு எடுத்து எல்லாம் வேலையில் உதவியாக இருந்த என் அன்பு தம்பிகள் சுப பழனியப்பன், நடப்பு பிள்ளையார்பட்டி காரியக்காரர் சித பழனியப்பன் இருவருக்கும் மனம் நிறைந்த நன்றி.

எங்கள் கடை ஏஜண்டாக 30 ஆண்டுகளாக பார்த்து வரும் மா மெய்யப்பன், பெரி. சோம. மாணிக்கம் சிறப்பான ஏற்பாடுகள் செய்து திருக்குட நன்னீராட்டு விழா நடைத்தியதற்காக என் மனம் நிறைந்த வாழ்த்துக்களும் நன்றியும் தெரிவித்துக் கொள்கிறேன். கோவில் நவநீத குருக்கள், மணிவண்ணன் பண்டாரம், கண்ணன் மற்றும் அனைத்து ஊழியர்களுக்கும் என் மனமார்ந்த வாழ்த்துக்கள்.

எனக்கு இந்த பொன்னான வாய்ப்பினை நல்கி திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற வைத்த எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவடி பணிந்து வணங்குகிறேன்.

நன்றி .வணக்கம்

**பழ. சிதம்பரம்**



உ
சிவமயம்
ஓம் சரவணபவ

# செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயத்தலைவர்
# S O K சிங்காரம் செட்டியார்
# அவர்களின் வாழ்த்துச் செய்தி



**என் கடன் பணி செய்துகிடப்பதே**

குரோதி ஆண்டு தை மாதம் 21-ம் நாள் (ஆங்கிலம் 3.2.2025) கோலாலம்பூர் செந்தூலில் அமைந்திருக்கும் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயத்தின் ஏழாவது குடமுழுக்கு நன்னீராட்டு விழா நடைபெறுவதை முன்னிட்டு குடமுழுக்கு சிறப்பு மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்

அருள்மிகு தண்டாயுதபாணி அருளால் நான் பலமுறை ஆலயத்தலைமைப் பொறுப்பை ஏற்று, சேவை யாற்றியிருக்கிறேன். மேலும் ஆலயத் தலைமைத்துவம் தருணம் ஆலயத்தின் அடுத்தடுத்த இரண்டு குடமுழுக்கு விழாகளில் தலைவராக பங்கு பெற்ற பேற்றினை திருக்குமரன் எமக்கு அருளியிருக்கிறான்.

ஆலயம் என்பது வழிபாட்டிற்கும், சமயச்சடங்குகளுக்கும் எழுப்பப்பட்ட ஓரிடம் என்று கொள்ளாமல், கால மாற்றத்திற்கு ஒப்ப மக்களின் ஒற்றுமைக்காவும், கலை கலாச்சார மேம்பாட்டிற்கும், மொழி இலக்கிய முன்னேற்றத்திற்கும் உறுதுணையாக விளங்க என்ற நன்நோக்கத்தோடு அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம் செயல்பட்டு வருகிறது என்பதில் பெருமை கொள்கிறேன்.

குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற அர்பணிப்பு உணர்வோடு பணியாற்றிய காரியக்காரர் முரு. பழனியப்பன் சிதம்பரம் அவர்கள், செயலாளர், பொருளாளர், மா. மெய்யப்பன் அவர்கள், மற்றும் உறுதுணையாக சேவையாற்றிய காரியக்காரர்கள், ஆலய நிர்வாகக் குழுவினர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புடன்,

**SOK சிங்காரம் செட்டியார்**
தலைவர்




**IBU PEJABAT MALAYSIAN INDIAN CONGRESS**
**மலேசிய இந்தியர் காங்கிரஸ் தலைமையகம்**

# டான்ஸ்ரீ டத்தோஸ்ரீ ச. விக்னேஸ்வரன்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி



திரைகடல் ஓடியும் திரவியம் தேடு என்பதற்கேற்ப பெற்ற தாயையும் கட்டிய மனைவியையும் தமிழகத்தில் விட்டு விட்டு கப்பலேறி வாணிபம் செய்ய வந்தவர்கள் நகரத்தார் பெருமக்கள் வந்தவர்கள் தங்களோடு வேல் ஒன்றையும் கொண்டு வந்து தான் வணங்கும் தண்டாயுதபாணிக்கு கோவிலும் அமைத்தார்கள் அப்படி மலேசியத் திருநாட்டில் அனேகமான நகரத்தார்கள் நிறுவிய ஆலயங்கள் நூற்று ஐம்பது ஆண்டுகளைக் கடந்தே நிற்கிறது. தாங்கள் நிறுவிய ஆலயங்களுக்கு 12 ஆண்டுக்கு ஒருமுறை குடமுழுக்கும் செய்து வருகிறார்கள்.

அப்படி சுமார் நூற்றைம்பது ஆண்டுகளைக் கடந்து சீரும் சிறப்புமாக அருள் கொண்ட தண்டாயுதபாணி வீற்றிருக்கும் ஆலயம் நமது கோலாலம்பூர் செந்தூல் செட்டியார்கள் கோவில்.

2025 ம் ஆண்டு பிப்ரவரி 3 ஆம் நாள் தண்டாயுதபாணிக்கு மகா குடமுழுக்கு சிறப்பாக நடைபெறுகிறது.

அரசாங்கத்திற்கும் வணிகர்களுக்கும் கடன் கொடுத்த பெருமை நகரத்தார் பெருமக்களுக்கு உண்டு. மென்மேலும் அவர்களது பணி, தொண்டு சிறக்க வேண்டும். செந்தூல் வட்டாரத்தில் முதன்முறையாக கொண்டாடப்பட்ட ஒரு விழா பங்குனி உத்திரம் தான் அந்த முருகப் பெருமானின் அருளை இந்து மக்கள் அனைவரும் பெற்று சிறப்பாக வாழவேண்டும்.

நன்றி வணக்கம்

**டான்ஸ்ரீ டத்தோஸ்ரீ ச. விக்னேஸ்வரன்**
ம.இ.கா. தேசியத் தலைவர்



# DATUK SERI M. SARAVANAN
## Ahli Parlimen Tapah

## மாண்புமிகு டத்தோ ஸ்ரீ டாக்டர் எம்.சரவணன்
### அவர்களின் வாழ்த்துச் செய்தி



சிறப்புமிக்க கோலாலம்பூர் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தின் திருக்குட நன்னீராட்டு விழா மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் மட்டற்ற மகிழ்ச்சி.

திரைகடல் ஓடியும் திரவியம் தேடு என கடல் கடந்து வணிகத்திற்காக வந்த நகரத்தார் தங்களோடு தண்டாயுதபாணியையும் உடன் கொண்டு வந்தனர். அந்த வகையில் மலேசியாவில் மட்டும் மொத்தம் 14 நகரத்தார் கோயில்கள் உண்டு. அதில் கோலாலம்பூர் செந்தூலில் அமைந்திருக்கும் தண்டாயுதபாணி ஆலயம் மிகச் சிறப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறது.

அவனிடம் சொன்னேன் என் அஞ்சுதலை
அந்த அண்ணலே தந்து வைத்தான் ஆறுதலை!

என்று கூப்பிட்ட குரலுக்குச் செவி சாய்ப்பான் முருகன். எந்த நிலையிலும் என்ன வேண்டுமானாலும் அவனிடம் கேட்டால் அருள் தருவான்.

146 ஆண்டுகளைக் கடந்த இந்த ஆலயத்திற்கும் எனக்கும் கடந்த 46 வருடங்களாக நெருக்கம் உண்டு. எனது பத்தாவது வயதில் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் உரையை முதன் முதலில் இந்த ஆலயத்தில்தான் கேட்டேன். கண்ணதாசனின் மேல் ஈர்க்கப்பட்டதும் செந்தூல் செட்டியார் மண்டபத்தில் நடந்த கண்ணதாசன் விழாவில்தான். தமிழையும் சமயத்தையும் இரு கண்களாகப் பாவிப்பதற்கும், என் இலக்கிய ஆர்வத்திற்கும், இலக்கிய சேவைக்கும் செந்தூல் தண்டாயுதபாணி ஆலயம்தான் அடித்தளம் அமைத்தது என்றால் அது மிகையாகாது.

சமயம் மட்டும் என்றில்லாமல் பக்தி, கல்வி, வியாபாரம் என பல்வேறு துறைகளிலும் சுற்றுவட்டார மக்கள் மேம்பாடடைய செந்தூல் தண்டாயுதபாணி ஆலயமும் அதன் வளாகமும், அதன் நிர்வாகத்தினரும் பல்வேறு வகைகளில் உதவி வருகிறார்கள். அதற்கான தளம் அமைத்து வருகிறார்கள்.

அந்த வகையில் பக்தர்கள் குறைதீர்க்கும் மாபெரும் சக்தி வாய்ந்த தண்டாயுதபாணி ஆலயத்தைச் சீரோடும் சிறப்போடும் மிக நேர்த்தியாக நடத்தி வரும் காரியக்காரர் திரு.பழ சிதம்பரம் செட்டியார் அவர்களுக்கும் அவர்தம் குழுவினருக்கும் எனது மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா பக்தர்களுக்கும் சகல செல்வமும் வழங்க இறைவனை வேண்டுகிறேன்.

சரவணப் பொய்கையில் நீராடி
துணை தந்தருள் என்றேன் முருகனிடம்!

வாழ்த்துகளுடன்,

**டத்தோ ஸ்ரீ டாக்டர் எம். சரவணன்**
ம.இ.கா தேசியத் துணைத்தலைவர்




# ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் தேவஸ்தானம்
## SRI MAHA MARIAMMAN TEMPLE DHEVASTHANAM

163, ஜாலான் துன் எச். எஸ். லீ, 50000 கோலாலம்பூர். 163, Jalan Tun H.S. Lee, 50000 Kuala Lumpur.
Tel: 20785323/20317250 Fax: 20310272 E-mail: srimaha163kl@gmail.com Website: www.batucavesmuruga.org

| | | | |
|---|---|---|---|
| SRI MAHA MARIAMMAN TEMPLE, KUALA LUMPUR | TEL: 20783467 | BATU CAVES TAMIL SCHOOL | TEL: 61890354 |
| SRI GANESAR TEMPLE, JALAN PUDU LAMA, KUALA LUMPUR | TEL: 20789825 | APPAR TAMIL SCHOOL | TEL: 26984792 |
| SRI SUBRAMANIASWAMY TEMPLE, BATU CAVES | TEL: 61896284 | | |


## டான்ஸ்ரீ டத்தோ டாக்டர் ஆர். நடராஜா
## அவர்களின் வாழ்த்துச் செய்தி



அஞ்சு முகம் தோன்றின் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சல் என வேல் தோன்றும் – நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இரு காலும் தோன்றும்
முருகா என்று ஓதுவார் முன்

எண்ணுவார் நெஞ்சில் நண்ணுவான் ஈசன்" என்பது நம் மூத்தோர் மொழி.

இறைவன் தனது அகண்டாகரமான சக்தியை ஒரு விக்கிரகத்திற்குள் நிலைபெறச் செய்து கொண்டு அடியவர்களுக்கு அருள் பாலிக்கின்றான். எல்லா இடங்களிலும் பரந்து விரிந்து இருக்கின்ற இறைவனுடைய சக்தியை ஈர்த்து கோர்த்து அனுப்புகிறது மூலஸ்தானத்தில் உள்ள மூர்த்தி ஆலயத்தில் உள்ள மூர்த்தி முன் வழிபட்டால் வினைகள் வெந்து போகும் ஆகவே நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஞானிகளும் இந்த உலகம் உய்ய அமைந்தவை ஆலயங்களாகும்.

மந்திர ஒலிக்கு ஆற்றல் அதிகம் ஆகையினால் பெரியவர்கள் வேத மந்திரத்தாலே இறைவனை வழிபட்டார்கள். இறைவனுடைய அருளைப்பெற்ற மகான்களாக இருந்தாலும் ஆலய வழிபாடு செய்ய வேண்டும் கல்லினால் திருவுருவத்தை அமைத்து தானிய வாசம், ஜலவாசம் வைத்து அந்த இறைவனுடைய மந்திரங்களை எழுதி மந்திர தந்திரத்தை 48 நாட்கள் வழிபாடு வைத்து அந்த மந்திரசக்தி மேலே வரும். அந்த வேத சிவாகமத்திலே வல்லவர்களாக இருக்கின்றவர்கள் யாகசாலை அமைத்து இனிய மந்திரங்களை ஓதி காலங்கள் தோறும் யாக அக்னி வளர்த்து இதில் ஜோதியை விளையுமாறு செய்து அந்த ஜோதியை கும்பத்துக்குள் சேர்த்து கல்லினாலும் மண்ணினாலும், சுதையினாலும் உருவாக்கப்பட்ட விக்கிரங்களுக்கு கும்ப அபிசேகம் மூலம் சக்தி கிடைக்கிறது.

ஆகம விதிகளுக்கு அமைய ஆலயங்கள் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை புனரமைப்பு செய்யப்பட்டு கும்பாபிசேகம் செய்யப்பட வேண்டும் என்பது நமது மரபாகும். அந்த வகையில் நூற்றாண்டு கால வரலாற்றுப் பெருமை வாய்ந்த செந்தூல் மாநகரில் அமைந்துள்ள ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் தற்பொழுது மீண்டும் புதிய மெருகுடன் புதிய தோற்றத்துடன் 03.02.2025 குடமுழுக்கு காணவிருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

இத்திருப்பணிகளில் உள்ளார்ந்த பக்தியுடன் உழைத்த அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி கோவிலின் நிர்வாகத்தினருக்கும் கும்பாபிசேக மலர் வெளியீட்டுக் குழுவினருக்கும், ஆதரவளித்தவர்களுக்கும் எனது பாராட்டுகளையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். மகா கும்பாபிசேகம் மிகச் சிறப்பாக நடைபெறுவதோடு இச்சிறப்பு மலர் சிந்தனை மலராக வெளிவந்து அருள் மணம் நிறைக்க வேண்டி எல்லாம் வல்ல பத்துமலை முருகப்பெருமானின் திருவருளை வேண்டிக் கொள்கிறேன்.

என்றும் இறைபணியில்.

**டான்ஸ்ரீ டத்தோ டாக்டர் ஆர், நடராஜா**
தலைவர், அறங்காவலர்
ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் தேவஸ்தானம்
கோலாலம்பூர்.



**TIMBALAN MENTERI PERPADUAN NEGARA**
*(DEPUTY MINISTER OF NATIONAL UNITY)*



# செனட்டர் சரஸ்வதி கந்தசாமி
## அவர்களின் வாழ்த்துச் செய்தி

வணக்கம்

சிறப்புமிக்க கோலாலம்பூர் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயத்தின் திருக்குட நன்னீராட்டு விழா மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் மட்டற்ற மகிழ்ச்சி.

ஆகம விதிகளுக்கு அமைய ஆலயங்கள் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை புனரமைப்பு செய்யப்பட்டு திருக்குட நன்னீராட்டு செய்யப்பட வேண்டும் என்பது நமது மரபாகும். அந்த வகையில் நூற்றாண்டு கால வரலாற்றுப் பெருமை வாய்ந்த செந்தூல் மாநகரில் அமைந்துள்ள ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் தற்பொழுது மீண்டும் புதிய மெருகுடன் புதிய தோற்றத்துடன் குடமுழுக்கு காணவிருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

சமயம் மட்டும் என்றில்லாமல் பக்தி, கல்வி, வியாபாரம் என பல்வேறு துறைகளிலும் சுற்றுவட்டார மக்கள் மேம்பாடடைய செந்தூல் தண்டாயுதபாணி ஆலயமும் அதன் வளாகமும் அதன் நிர்வாகத்தினரும் பல்வேறு வகைகளில் உதவி வருகிறார்கள்.

நகரத்தார்கள் உலக ரீதியில் வியாபார நோக்கத்தில் பரவி வாழ்ந்துக்கொண்டிருந்தாலும் அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்த இடங்களிலெல்லாம் ஆலயத்தோடு பக்தியையும் கல்வியையும் ஒருங்கிணைத்து பேணி வருவதை தங்களது கடமையாக வைத்துக் கொண்டார்கள். இந்த நிலை எல்லா இடங்களிலும் நிலைத்து விட்டால் நம்மவர்களின் வாழ்க்கை மேம்பாட்டு சூழ்நிலை ஒரு உன்னதமான நிலையை அடைந்து விடலாம் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

இத்திருப்பணிகளில் உள்ளார்ந்த பக்தியுடன் உழைத்த அருள்மிகு தண்டாயுதபாணி கோவிலின் நிர்வாகத்தினருக்கும் மலர் வெளியீட்டுக் குழுவினருக்கும், எனது பாராட்டுகளையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். திருக்குட நன்னீராட்டு விழா மிகச் சிறப்பாக நடைபெறுவதோடு இச்சிறப்பு மலர் சிந்தனை மலராக வெளிவந்து அருள் மணம் நிறைக்க வேண்டி எல்லாம் வல்ல முருகப்பெருமானின் திருவருளை வேண்டிக் கொள்கிறேன்.

வாழ்க தமிழ், வெல்க தமிழ் சமுதாயம்
நன்றி.

**செனட்டர் சரஸ்வதி கந்தசாமி**
துணையமைச்சர்,
தேசிய ஒருமைப்பாடு துறை அமைச்சு

உ




# SIVASRI K. PITCHAI GURUKKAL

**Chief Priest, Sri Karpaga Vinayagar Temple**
**Principal, Karpaga Vinayagar Veda Agama Vidhyalayam**
**Founder, Sivaneri Kazhakam**
**Secretary, Karpaga Vinayagar School,**
**Founder, Global Hindu Spiritual & Cultural Center**
Pillaiyarpatti - 630 207, Sivagangai District, Tamilnadu, South India




ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

## வாழ்த்துரை

அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்(பு)அ(து)ஓர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய - கந்தபுராணம்

எழில் மிகுந்த மலை வளமும், கடல் வளமும், இயற்கை நில வளமும் ஒருங்கே சேர்ந்து மிளிரும் நமது மலேசியத் திருநாட்டின் செந்தூல் பகுதியில் அமைந்துள்ள ஸ்ரீ முருகப் பெருமான் ஆலயம் அனைத்து மக்களின் பிரதான ஆன்மீக மையமாக மிகவும் பிரசித்தி பெற்றதாக விளங்குகிறது. மலேசிய மண்ணில் சைவத்தையும், தமிழையும் வேரூன்றச் செய்வதையே பெரும் பொருட்டாகக்கொண்டு நமது நகரத்தார் பெருமக்கள் இத்திருக்கோயிலை அரும்பாடுபட்டு நிறுவியுள்ளனர் என்று கூறினால் அது மிகையாகாது. எங்கெல்லாம் சைவமும், தமிழும் இருக்கிறதோ அங்கெல்லாம் முருகப் பெருமானின் பேரருள் நிறைந்து இன்பத்தைப் பெருக்கும். மிகவும் அழகிய கோபுரங்களையும், கலைநயமிக்க சிற்பங்களையும் கொண்டு விளங்கும் இத்திருக்கோவிலில் முருகப்பெருமான் எழுந்தருளி வேண்டுவோருக்கு வேண்டியதைக் கொடுத்து அருள்பாலிக்கிறார். ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தை குடி கொண்டோன் செந்திற்கந்தனின் எழில்மேவும் இத்திருக்கோயிலில் மஹா கும்பாபிஷேகம் சிறப்புடன் நிகழவும், மஹாகும்பாபிஷேக விழா மலர் வெளிவந்து பக்திமணம் பரப்பவும், கோவில் நிர்வாகத்தைச் சார்ந்த அன்பர்கள் மற்றும் அனைத்து பக்தப் பெருமக்களும் வாழ்வில் எல்லா வளமும், நலமும் பெற்று வாழ்வாங்கு வாழவும் எல்லாம் வல்ல ஸ்ரீ கற்பக விநாயகப் பெருமான் திருவடிகளைப் பிரார்த்தித்து வாழ்த்துகிறோம்.




அன்புடன்

சிவஸ்ரீ K. பிச்சைக்குருக்கள்
பிள்ளையார்பட்டி


Ph: 04577 - 290591 | H/P: 00919443362320 | E-mail: pitchaianna@gmail.com



KOPERASI NLFCS BERHAD

தேசிய நில நிதி கூட்டுறவு சங்கம் லிமிடெட்
National Land Finance Co-operative Society Limited

Level 10, Wisma Tun Sambanthan, No. 2, Jalan Sultan Sulaiman, Peti Surat 12133, 50768 Kuala Lumpur, Malaysia
Tel: 03-22731250 / Fax: 03-22740826 / Email: info@nlfcs.com.my

# மதிப்புமிகு டத்தோ பா. சகாதேவன்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி



சுமார் இருநூற்று ஐம்பது ஆண்டுக்கால வரலாற்றைக்கொண்ட கோலாலம்பூர் ஸ்ரீதண்டாயுதபாணி ஆலயத்தின் மகா கும்பாபிஷேகத்தை முன்னிட்டு தயாரிக்கப்படும் மலருக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதோடு ஆலயத்திற்கும் தமக்கும் ஏற்பட்ட நிகழ்ச்சியை இங்கு குறிப்பிடுவதில் மகிழ்ச்சியையும் என் மனத்தில் ஏற்பட்டிருந்த நெகிழ்ச்சியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

1974ஆம் ஆண்டு காலக்கட்டத்தில் தேசிய நில நிதி கூட்டுறவு சங்கத்தில் பணியை மேற்கொள்வதற்காக கோலாலம்பூருக்கு வந்தபோது ஜாலான் ஈப்போ சாலையில் அமைந்திருந்த 'மதராஸ் கபே' உணவு விடுதியில் தங்க நேர்ந்தது.

அப்போதுதான் அந்த விடுதியின் எதிரே ஸ்ரீ தாண்டாயுதபாணி என்ற நகரத்தார் ஆலயம் கம்பீரமாக அமைந்திருந்ததைப் பார்த்தேன் மனதில் ஒரு விதமான மகிழ்ச்சி காலையில் எழுந்தவுடன் முதல் காரியமாக திருமுருகனைத் தரிசித்து விடுவோம் என்ற முடிவில் தூக்கத்தில் மூழ்கி விட்டேன். மறுநாள் காலையிலேயே ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தின் முன் வாசலுக்கு நுழைந்து விட்டேன். முருகன் சன்னதியில் வழிபாடு நடந்து கொண்டிருந்தது.

பக்தர்கள் கூட்டம் நிறைந்திருந்தது. அந்த வழிபாட்டில் வரிசைப் பிடித்து நின்றுக் கொண்டிருந்தேன் மறுபக்கம் சற்று தள்ளி நீண்ட வெளியில் அமைந்துள்ள பள்ளிக்கூடத்தில் மாணவ மாணவிகள் படித்துக் கொண்டிருந்தார்கள் வேறொரு பக்கத்தில் பச்சைப் பசேலென வளர்ந்திருந்த புற்கள் மீது நடனமாடிக்கொண்டிருந்த அழகான மயில்களின் கூட்டம் இப்படி காணக்கிடைக்காத இந்த காட்சிகளை யெல்லாம் பார்த்தவுடனேயே என் மனம் அதில் லயித்து விட்டது.

நகரத்தார்கள் உலக ரீதியில் வியாபார நோக்கத்தில் பரவி வாழ்ந்துக்கொண்டிருந்தாலும் அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்த இடங்களிலெல்லாம் ஆலயத்தோடு பக்தியையும் கல்வியையும் ஒருங்கிணைத்து பேணி வருவதை தங்களது கடமையாக வைத்துக் கொண்டார்கள் என்பது வரலாறு.

இந்த நிலை எல்லா இடங்களிலும் நிலைத்து விட்டால் நம்மவர்களின் வாழ்க்கை மேம்படும் சூழ்நிலையும் ஒரு உன்னதமான நிலையையும் அடைந்து விடலாம் என்பதில் பரவலான நம்பிக்கை ஏற்படும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது என்பதை நானும் உணர்ந்தவன்.

கால ஓட்டத்தில் இருநூற்றைம்பது ஆண்டுகளை உள்ளடக்கிய காலக்கட்டத்தி ல் பல கும்பாபிஷேகங்களைக் கண்டிருக்கும் மகா இந்த ஆலயத்தின் திருப்பணிக்கு இப்போது வாழ்த்து கூறுவதையும் பாக்கியமாக நினைத்து மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
நல்வாழ்த்துகள்.

**டத்தோ பா. சகாதேவன்** PJN.,SSA.,PPT.,ANS
நிர்வாக இயக்குநர்
தேசிய நில நிதி கூட்டுறவு சங்கம்



# அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்

## ARULMIGHU THANDAYUTHAPANI TEMPLE

No. 332, Jalan Ipoh, Batu 2½, 51200 Kuala Lumpur.



## செயலரின் முன்னுரை...

1893ம் ஆண்டு தோற்றம் கண்ட செந்தூல் ஸ்ரீ தாண்டாயுதபாணி ஆலயத்தின் ஏழாவது திருக்குட நன்னீராட்டு விழா சோபகிருது ஆண்டு தை மாதம் 21ஆம் தேதி (3.2.2025) நடைபெற திருவருள் கூடி வந்துள்ளது.

கடந்த 30 ஆண்டு காலமாக கோவில் நிர்வாகத்தில் பல பொறுப்புகள் வகிக்க வாய்ப்பு கிடைத்த எனக்கு, இவ்வாண்டு திருப்பணிகள் வேலைகளிலும் பங்கு பெற வாய்ப்பு கிடைத்ததை எண்ணி பெரு மகிழ்வு கொள்கிறேன். இதற்கு காரணமாக இருந்த கோவில் அறங்காவலர் திரு. ஆவி. ப. முரு. மு. முரு பழ சிதம்பரம் செட்டியார் அவர்களுக்கு எனது மனம் நிறைந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

நம் நாட்டின் தலைநகரில் அமையப்பெற்றுள்ள இவ்வாலயம் நாட்டின் பழமையான ஆலயங்களில் ஒன்றாகும். இறைப்பணியை தங்கள் தலையாய கடமையாக கொண்டுள்ள நகரத்தார்களின் முயற்சியால் நிறுவப்பெற்றுள்ள இவ்வாலயம் தினசரி ஆறு கால பூஜையுடன் சிறப்பாக செயல்பட்டுவருகிறது. முருகப் பெருமானுக்கு உகந்த நாட்களிலும் மற்ற பண்டிகை நாட்களிலும் சிறப்பு வழிபாடுகள் அனுசரிக்கப்பட்டு வருகிறது. பங்குனி உத்திர திருவிழவுக்கு முருகப் பெருமான் வெள்ளி இரதத்தில் பவனித்து பக்தர்களுக்கு அருள்பாலித்துவருகிறார்.

இவ்வாலயத்தில் கோசாலை, மயில் கூடம் முதலியவைகள் சிறப்பாக பராமரிக்க பட்டு வருகிறது. மிகுந்த கலை வேலைபாடுகளுடன் எல்லா வசதிகளுடன் பல நூறு பேர்கள் அமரக் கூடிய வகையில் அமைக்கப்பட்டுள்ள திருமண மண்டபம் பல தம்பதிகளின் வாழ்க்கை பயணத்தை தொடங்கி வைக்கும் இடமாக அமைந்துள்ளது.

இம்முறை திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு ஆலயத்துக்கு தேவையான சீரமைப்பு பணிகளும் வர்ண வேலைகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. மேலும் பக்தர்களின் வசதிக்காக அரச மரத்தடி விநாயகர் கோவில் விரிவு படுத்தப்பட்டுள்ளது.

ஆலயத்தின் திருப்பணியில் பணியாற்றிய சிற்ப கலைஞர்களுக்கும் மற்ற பணிகளை மேற்கொண்ட அனைத்து நிறுவனங்களுக்கும், பணியாளர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆலய திருப்பணிகள் சிறப்பாக நடைபெற பல ஆலோசனைகளும் உதவிகளையும் வழங்கிய அறங்காவலர் குழுத்தலைவர், நிர்வாக அறங்காவலர்கள், அறங்காவல் குழு உறுப்பினர்கள், ஆலய பணியாளர்கள், சிவாச்சாரியார்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இம் மலருக்கு வாழ்த்து செய்தி வழங்கிய அனைத்து பெருமக்களுக்கும், மலர் தயாரிப்பு பணிகளை ஒன்றிணைப்பாளராக பணியாற்றிய திரு. கரு. கார்த்திக் அவர்களுக்கும், கண்ணதாசன் அறவாரியத்துக்கும் என் நன்றி உரித்தாகுக.

"மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்"
தண்டாயுதபாணி துணை!

**மா. மெய்யப்பன்**
ஆவி. ப. முரு. மு. முரு கடை
செயலாளர் மற்றும் பொருளாளர்






# மலேசிய இந்து சங்கம்
# MALAYSIA HINDU SANGAM
Company No. 196501000015(5859-M)


அருள்மிகு தண்டாயுதபாணி கடவுள் துணை!

அருள்நலமும் பொருள்வளமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற இந்த மலைத்திரு நாட்டில் நகரத்தார் பெருமக்களின் பராமரிப்பில் எண்ணற்ற திருமுருக தலங்கள் இருந்தாலும் செந்தால் முருகன் கோவில் என்று அழைக்கப்படும் கோலாலம்பூர் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம், புகழ்பெற்ற கௌமார வழிபாட்டுத் தலமாக விளங்குகிறது.

அருள்மிகு தண்டாயுதபாணி கோயில் 1893ம் ஆண்டு தொடங்கப்பட்டதாக தலவரலாறு தெரிவிக்கிறது. இவ்வாலயத்தில் முதல் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா 1902-இல் நடைபெற்றுள்ளது. அதுமுதல், காலக் கணக்கு தப்பாமல் மாமாங்கம்தோறும் ஒருமுறை என ஆலயத்தில் திருப்பணி மேற்கொள்ளப்பட்டு குடமுழுக்குத் திருவிழாவும் நடைபெற்று வந்துள்ளது.

அன்று முதல் இன்று வரை கோவில் நல்ல முறையில் நிருவகிக்கப்பட்டு வரும் நிலையில், கடந்த கும்பாபிஷேகம் 1.3.2013இல் நடைபெற்றது. இந்தக் கோயிலின் பெருமை, அருமையாக அமையப்பெற்ற கருவறையாகும். பக்தப் பெருமக்களை கவர்ந்திழுக்கும் வண்ணம், அருளாட்சி நிறைந்த திருமுருக திருக்கடவுளின் திருத்தோற்றம் அமைந்துள்ளதால், ஈப்போ சாலையின் வெளியே இருந்தவாறே மெய்யன்பர்கள் இறைவனை தரிசிக்க முடியும்.

ஆண்டு முழுவதும் இத்திருக்கோவிலில் திருவிழாக்கள் நடைபெற்றாலும், பங்குனி உத்திரத் திருவிழா மிகவும் கோலாகலமானது. இந்த ஆலயத்தின் வரலாறு நூற்றாண்டைக் கடந்தது; அதைப்போல, இந்த ஆலயத்தின் ரதமும் நூற்றாண்டு வரலாற்றைக் கொண்டுள்ளது என்பதை அறிந்து மிகவும் மகிழ்கிறோம்.

இந்த நிலையில், சுற்று வட்டார இறையன்பர்களுக்கு மிகவும் அணுக்கமான இந்த அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயத்தில் அடுத்தத் திருக்குட நன்னீராட்டு விழாவிற்கான திருப்பணிகள் சீராக நடைபெற்று 2025, பிப்ரவரித் திங்கள் 3-ஆம் நாள் குடமுழுக்கு விழா நடைபெற இருப்பதை அறிந்து, மலேசிய இந்து சங்கத்தின் சார்பில் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் அதேவேளை, நடைபெற இருக்கின்ற இத்திருக்குட புனித விழா, எல்லாச் சிறப்புடன் இனிதே நிறைவேறிட கந்த பெருமானின் திருவடி போற்றுகிறேன்.

தவிர, இந்த விழாவை நல்ல வண்ணம் நிறைவேற்றிய ஆலயப் பொறுப்பாளர்களுக்கு மேலும் ஆற்றலையும் ஊக்கத்தையும் வழங்கி அருள்பாலிக்கும்படியும் அருள்மிகு தண்டபாணி கடவுளை நினைந்து அவன்தாள் பணிகிறேன்.

**தங்க கணேசன்**
தலைவர்


No. 67, Jalan PJS 1/48, Taman Petaling Utama 7, 46150 Petaling Jaya Selangor.
Tel : 603-7784 4244 / 4668 / 4245 | Email : admin@malaysiahindusangam.org | Website : www.malaysiahindusangam.org

MAJLIS KEBANGSAAN BAGI HAL EHWAL AGAMA HINDU



உ
சிவ சிவ

# செந்தூல் முருகனை சேவிப்போம் வாருங்கள்

## குருக்கள் எஸ். நவநீதகிரி சிவாச்சாரியார் ஆசியுரை



உலகில் பிறந்த யாவருக்கும் கடவுள் ஒரு வாழ்க்கையை கொடுக்கிறான். சிலர் படித்துப் பட்டம் பெற்று அரசு அலுவலகங்களிலும் தனியார் துறையிலும் பணி செய்து வாழ்க்கை நடத்துகிறார்கள்.

அடியேனை ஆறுமுகன் ஆட்கொண்டு தெய்வீகத் தொண்டாற்ற வைத்-துள்ளான். அதில் எனக்கு கிடைத்த ஊக்கமிகு வரங்களை உங்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

எங்கள் குல தெய்வம் அங்காள பரமேஸ்வரி. அந்த தேவியுடன் முருகனும் எங்கள் குல தெய்வமே. முருகன் சற்று சோதிப்பான் பிறகு எல்லா நலங்களும் தருவான். அவன் பக்தர்களுக்கு இது நன்கு தெரியும்.

செந்தூல் முருகன் நம்முடன் பேசும் தெய்வமாக இருக்கிறான். ஒரு முறை நான் விரதமாக இருந்த போது, சந்நிதியில் அர்ச்சனை படிக்கும் போது, பசி வந்தது முருகா எனக்கு என்ன கொடுப்பாயோ? என எண்ணினேன் அடுத்த கணம் உதவிப் பண்டாரம் காளாஞ்சி தட்டு எடுத்துப் போனார் அதில் இருந்த ஆப்பிள் பழம் எப்படியோ தவறி என் பக்கத்தில் விழுந்தது, ஆமாம் நான் நினைப்பதை முருகன் அறிந்து உடன் செயல் படுகிறான்.

மற்றொரு முறை நான் சகஸ்ரநாமம் படிக்கும்போது சின்ன எழுத்துக்கள் தெரியாது, அதனால் கண்ணாடி அணிந்தே அர்ச்சனை படித்துவந்தேன். ஒரு நாள் கண்ணாடி எடுத்துவர மறந்து விட்டேன் ஆனாலும் முருகனை வேண்டிக் கொண்டு சகஸ்ரநாம புத்தகத்தை கஷ்டப்பட்டு படிக்க ஆரம்பித்தேன், சில நேரங்களில் அதிசயம் நடந்தது. சின்ன சின்ன எழுத்துக்கள் எல்லாம் தெளிவாகத் தெரிய ஆரம்பித்தன. நான் சகஸ்ர நாமம் முழுவதையும் படித்து விட்டேன். அன்று முதல் இன்றுவரை அடியேன் கண்ணாடியே அணிவதில்லை. கண்ணுக்கு ஒளி கொடுத்துவிட்ட-ான் கந்தன். இது போன்று பல அதிசயங்கள் என்வாழ்வில் நடந்தது உண்டு.

எங்கள் தந்தையார் சிவஸ்ரீ சுப்பிரமணிய சிவாச்சாரியார் கந்த உபாசகர். அவர் கந்தன் அருளால் பலரின் கஷ்டங்களைத் தீர்த்து வைத்துள்ளார். முருகனை மனதார வணங்குங்கள் நிச்சயம் அவன் ஆட்கொண்டு அருள் புரிந்து சகல சௌபாக்கியங்களும் தருவான், நிச்சயமாக!

ஓம் சரவணபவாய நமஹா.
செந்தூல் முருகன் திருவடிகள் போற்றி போற்றி.








# டான் ஸ்ரீ டத்தோ ஆர். துரைசிங்கம் பிள்ளை
## அவர்களின் வாழ்த்துரை

செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலய புனித குடமுழுக்கு விழா மிகச்சிறப்பாக நடைபெற நானும், எங்கள் குடும்பத்தாரும் லோட்டஸ் குழுமமும் இதய பூர்வமாக வாழ்த்துகிறோம்.

சைவமும், தமிழும், சமய நெறியையும் வளர்த்துவரும் நகரத்தார் சமூகத்தினரோடு எங்கள் தந்தையார் தெய்வத்திரு வள்ளல் என். ரெங்கசாமி பிள்ளை அவர்கள் அணுக்கமான தொடர்பு வைத்திருந்தார்கள்.

ஆலய நிர்வாகத்தினரான நகரத்தார்களும் விழாவில் கலந்துகொள்ளும் அன்பர்களும், விழாக்குழுவினரும் எல்லா நலமும் வளமும் பெற்றுச் சிறக்க முருகப்பெருமானின் திருவருளைச் சிந்தித்துப் போற்றுகிறோம்

**டான் ஸ்ரீ டத்தோ ஆர். துரைசிங்கம் பிள்ளை**



Wisma Lotus, Lot 1 A, Jalan 51A/223 A, Off Jalan Utara, Kawasan Perindustrian
46100 Petaling Jaya, Selangor







# டத்தோ சுரேஷ் குமார் நாசுரன்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி

நெற்றியிலே நீறணிந்து
நெறியாக உனை நினைத்து
பற்றினேன் உள்ளமதில் உன்னடி
முருகா !!! முருகா !!!

கோலாலம்பூர் செந்தூல் வட்டாரத்தில் கம்பீரமாக வீற்றிருக்கும் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் 1893ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது என்பதை நினைக்கும் போதே மெய்சிலிர்கின்றது. நூறாண்டு காலத்திற்கும் மேற்பட்டு தொன்று தொட்டு நம் பாரம்பரியத்தையும் கலாச்சாரத்தையும் பேணிக்காத்து இன்றளவும் அருள் பாலிக்கின்றார் முருகப்பெருமான்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பேறுகளையும் அருள வல்லது கும்பாபிஷேகம். பன்னிரெண்டு ஆண்டுகள் ஆலயத்திற்கு சென்று இறைவனை மனதார வழிபட்டவருக்கு கிடைக்கும் அருள் அத்தனையும் கும்பாபிஷேகம் கண்டவருக்கு ஒரு விநாடியில் கிட்டும் என்பார்கள். இந்த ஆலயத்தை நகரத்தார் சொந்தத்தில் திருப்பணி செய்து 1902 ஆம் ஆண்டு கும்பாபிஷேகம் செய்தார்கள். பல தலைமுறைகளைத் தாண்டி 2025ல் நடைப்பெறும் கும்பாபிஷேகத்தில் நானும் ஒருவன் என்று எண்ணும்போது உள்ளம் பூரிக்கின்றது. என் தாய் தந்தையர் வழி ஸ்ரீ தண்டாயுதபாணியாரின் அருள் பெற்று இதுகாறும் நானும் முருகனின் சேவையில் திளைத்து வருகிறேன்.

அறிவு, ஞானம், பொருள், உயர்வு போன்றவற்றை அருளும் மாபெரும் சத்தியாக விளங்கும் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் பல துறைகளில் ஆற்றி வரும் சேவைகள் மென்மேலும் ஓங்குவிக்க எம் வாழ்த்துகள். இப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த கும்பாபிஷேக விழாவிற்கான ஏற்பாடுகளை முழு ஈடுபாட்டுடனும், அர்ப்பணிப்புடனும் முன் நின்று நடத்தி வரும் ஆலயத் தலைவர், அறங்காலவர்கள் மற்றும் செயற்குழு உறுப்பினர்கள் அனைவருக்கும் எனது நெஞ்சார்ந்த பாராட்டுதலை தெரிவித்துக் கொள்வதுடன், சிறப்பாக நடந்தேற திருமுருகனின் பாதம் பற்றி நல்வாழ்த்துகள் சமர்பிக்கின்றேன்.

வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா !!!

இக்கண்,

டத்தோ சுரேஷ் குமார் நாசூரன் DPSM,AMN,PPN
தலைவர்
திருமுருகன் ஆலயம் பரிபாலன சபை கோலாலம்பூர்



# தலைமை ஸ்தபதி
# வாழ்த்துச் செய்தி



மலேசியா தலைநகர் கோலாலம்பூரில் நடுநாயகமாக, அமைந்துள்ள அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில் திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன்.

கோலாலம்பூர் செந்தூலில் 130ஆண்டுகளுக்கு மேலாக அருள்பாவித்து வரும் ஸ்ரீ தண்டாயுதபாணி திருக்கோவல் நாட்டுக்கோட்டை நகரத்தார் முயற்சியாலும் உழைப்பினாலும் தீருப்பணிகள் செய்யப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது.

கல்வி, கோவில், சமுதாயம், என அறப்பணிகள் செய்து வரும், நகரத்தார் பெருமக்கள் மேன் மேலும் உயர்வுகளைப் பெற ஸ்ரீ தண்டாயுதபாணி அருள்புரிய வணங்கி வேண்டுகின்றேன்.

இவ்வேளையின் இத்திருப்பணியின் இரண்டாவது முறையாக பங்குபெற வாய்பளித்த, மதிப்பிற்குரிய காரியதரிசி திரு. பழ. சிதம்பரம். அவர்களுக்கும், மதிப்பிற்குரிய திரு ராம.அ. மீனாட்சிசுந்தரம் அவர்களுக்கும் மதிப்பிற்குரியதிரு சுப.சு.சு.ராமசாமி அவர்களுக்கும் மதிப்பிற்குரிய திரு மா. மெய்யம்பன் அவர்களுக்கும் மற்றும் அனைத்து அறங்காவலர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியினையும் வாழ்த்துக்களையும் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

எல்லா வல்ல ஸ்ரீ தன்டாயுதபானி திருவருளும் ஆசியும் அனைவருக்கும் கிடைக்க வேண்டி வணங்குகின்றேன்.

என்றும் இறைபணியில்,

**G.R. நடராஜன்** Exmc
ஸ்தபதி
தியாகராஜ நகர், சீர்காழி
தமிழகம்



## மலேசிய முத்தமிழ்ச் சங்கம்
PERTUBUHAN MUTHAMIZH SANGAM MALAYSIA

பதிவு எண் / No. Pendaftaran: PPM-018-14-12042023

2-5-2, Block B, 5th Floor, Jalan Semarak Api 2, Diamond Square, Off Jalan Gombak, 53000 Setapak, W.P. Kuala Lumpur, Malaysia.

Tel: 03-4022 0800 Fax: 03-4022 9800 Email: muthamizhsangam2023@gmail.com


# மனோகரன் மாரிமுத்து
## மலேசிய முத்தமிழ்ச்சங்கத் தலைவர்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி



கோலாலம்பூர் செந்தூல் தண்டாயுதபாணி கோயிலின் 7 வது மகா கும்பாபிஷேக மலருக்கு வாழ்த்துச்செய்தி வழங்குவதில் மகிழ்ச்சி அடைகிறேன். கோலாலம்பூர் மாநகரின் மையப்பகுதியில் எழுந்தருளியிருக்கும் இந்தக்கோயில் நாட்டில் மட்டுமின்றி, புலம் பெயர்ந்து வாழும் இந்துக்களிடையே மிகவும் பிரசித்து பெற்றதாகும்.

3.2.25 அன்று கும்பாபிஷேகம் காணும் இந்தக்கோயில் ஒரு நீண்ட நெடிய வரலாற்றினைக்கொண்ட ஆலயமாகும். நகரத்தார் நிர்வாகத்தில் மிகதிறம்பட இயங்கிவரும் இந்த கோயில் ஏராளமான பக்தர்களை தன் வசம் கொண்டுள்ளது.

வெள்ளி ரதமும் ஒருங்கே அமையப்பெற்ற இந்த ஆலயத்தின் திருவிழாக்களும் மற்ற விழாக்களும் மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. நகரத்தார் அமைப்பில் பள்ளிக்கூடமும் ஆலய மண்டபமும் மிக நேர்த்தியாக அமைக்கபட்டு பயன்படுத்தப்பட்டுவருகின்றன.

1850களில் முற்றிலும் காடாக இருந்த ஈப்போ சாலை பகுதியில் அமைக்கப்பட்ட இந்தக்கோயில் 1902 ஆம் ஆண்டில் முதல் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது. மறு கும்பாபிஷேகம் 1961 ஆம் ஆண்டிலும், 1971 ஆம் ஆண்டிலும் 1984 ஆம் ஆண்டிலும், 1998 ஆம் ஆண்டிலும் மகா கும்பாபிஷேகம் நடைபெற்று வந்துள்ளது.

கோலாலம்பூர் செந்தூல் மற்றும் அதனைச்சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் பக்தர்களுக்கு பக்தி அருள் பாலித்து வரும் இந்த தண்டாயுதபாணி ஆலய நிர்வாகம் மிகச்சிறப்பாகவும் செம்மையாகவும் நடைபெற்று வருகிறது.

இந்த தண்டாயுதபாணி கோயிலின் மகா கும்பாபிஷேகம் சீருடனும் சிறப்புடனும் நடைபெற எல்லாம் வல்ல அந்த முருகப்பெருமானின் அருள் கிடைக்கவேண்டும் என வேண்டுகிறேன்.

அன்புடன்,

**மனோகரன் மாரிமுத்து**
தலைவர்,
மலேசிய முத்தமிழ்ச்சங்கம்

# முன்னோடி ஆலயம் முன்மாதிரி நிர்வாகம்!



நாட்டின் முன்னோடி ஆலயங்களுள் ஒன்றாக செந்தூல் தண்டாயுதபாணி ஆலயம் திகழ்கிறது. 1893ஆம் ஆண்டு, ஆலயம் நிர்மாணிக்கப்பட்டு, முதலாவது குடமுழுக்கு 1902ஆம் தேதி நடத்தப்பட்டுள்ளது.

அந்தக் குடமுழுக்கு விழாவில் நம் முன்னோர்கள் கலந்து கொண்டிருப்பர். இந்த வரலாற்று சிறப்புமிக்க குடமுழுக்கு விழா, நாம் வாழும் காலத்தில் நிகழ்வதும் அதில் கலந்து கொள்வதும் அரிய வாய்ப்பு. குடமுழுக்கு விழா மலருக்குச் செய்தி வழங்கி கிடைத்த வாய்ப்பு, வரம்.

செந்தூல் வட்டாரத்தின் அடையாளங்களுள் தலையாயச் சின்னமாக விளங்குகிறது தண்டாயுதபாணி ஆலயம். இது தமிழர்களுக்குப் பெருமை.

ஆலயம் நிர்மாணிக்கப்பட்ட காலம் தொடங்கி இன்று வரை, சமய நெறியுடன் நேர்த்தியாக இயங்கி வருகிறது. இந்த ஆலயத்திற்கு பல்வேறு சிறப்புகள் உண்டு. நிர்வாகத்தின் கட்டொழுங்கும் கண்ணியமும் அவற்றுள் தலையாயதாகப் பார்க்கிறேன்.

ஆலயங்கள் மட்டுமின்றி பொது அமைப்புகளும்கூட கற்க வேண்டிய பாடம் அது.

தண்டாயுதபாணி ஆலய நிர்வாகம், சமயப் பணிகள் மட்டுமின்றி, தமிழ் மொழி, கலை, இலக்கியம், பண்பாடு என அனைத்து நிலைகளிலும் பங்களிப்பு செய்துள்ளது.

மலேசிய இந்தியர்களின் அரசியல் கட்சியான ம.இ.கா. தொடங்கப்படுவதற்கு இங்குதான் வித்திடப்பட்டது.

ஆலயத்திற்கு அருகில் தமிழ்ப் பள்ளி நிர்மாணிக்க முயன்று, அரசின் அனுமதி கிடைக்காத காரணத்தால், தேசியப் பள்ளியை உருவாக்கி நடத்தி வந்துள்ளனர்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் முன்னெடுத்த பல நிகழ்ச்சிகளுக்கு ஆலயம் துணை புரிந்துள்ளது.

தொடக்க காலத்தில், சங்கத்தின் பெரும்பாலான நிகழ்ச்சிகள் இங்கும், ஆலய ஆதரவுடன் நடந்துள்ளது.

சங்கத்தின் அகப்பக்கத் தொடக்க விழாவிற்கு தமிழ் நாட்டின் அன்றைய சபாநாயகர் காளிமுத்து சிறப்பு வருகை புரிந்தார். அந்த நிகழ்ச்சிக்கு மண்டபத்தை வழங்கி ஆதரவளித்ததை நன்றியோடு பதிவு செய்கிறேன். இன்னும் பல நிகழ்ச்சிகளைப் பட்டியலிட முடியும். சமயப் பணிகளுடன் இத்தகைய நற்காரியங்களும் தொடரும் என நம்புகிறேன். தொடர வேண்டும். ஆலய நிர்வாகத்திற்கும் குடமுழுக்குக் குழுவினருக்கும் மனமார்ந்த வாழ்த்துகள்.

**பெ.இராஜேந்திரன்,**
முன்னாள் தலைவர்,
மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்



# PERSATUAN ARULNERI MALAYSIA
## மலேசியா அருள்நெறி திருக்கூட்டம்
MALAYSIA ARULNERI THIRUKKOOTAM



## டத்தோ டாக்டர் வ. கதிரேசன்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி

"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"

மலேசியாவிலுள்ள மிகப் புராதனமான பிரசித்திபெற்ற இந்துக்கோயில்களில் ஒன்றாய் விளங்கும் கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலய சீரமைப்புத் திருப்பணி வேலைகள் சிறப்புற பூர்த்தியாகி குரோதி ஆண்டு தைத் திங்கள் 21-ம் நாள், (3-2-2025) திங்கட்கிழமை காலையில் திருக்குட நன்னீராட்டு விழா (அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்) நடைபெற விருப்பது குறித்தும், இவ்விழாவினை முன்னிட்டு சிறப்பு மலர் ஒன்றினை வெளியிடவிருப்பது பற்றியும் மலேசியா அருள்நெறித் திருக்கூட்ட அங்கத்தினர்களும் பரிபாலன சபை உறுப்பினர்களும் மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றோம்.

இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெறவும், சிறப்புமலர் எல்லோரும் மெய்நெறி உணர்வு பெறத்தக்க முறையில் அமையவும் திருவருள் புரிய அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணியைப் பிரார்த்திக்கின்றோம்.

நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் கப்பல் போக்குவரத்து வசதி குறைவாக இருந்த காலம் தொடங்கியே "செட்டி கப்பலுக்குச் செந்தாரான் துணை" என்ற முழு நம்பிக்கையுடன் "திரை கடலோடியுந் திரவியம் தேடு என்பதற்கு இணங்கத் தென்கிழக்கு ஆசிய நாடுகள் பலவற்றுக்குச் சென்று வாணிபம் செய்து, நேர்மையான முறையில் பொருள் ஈட்டி வந்திருப்பதும், அத்தகைய பொருளைக் கொண்டு சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க பாரத நாட்டிலும், வெளி நாடுகளிலும் ஏராளமான சிவாலயத்திருப்பணிகளும், ஆரம்பக் கல்வி, இடைநிலைக்கல்வி, உயர்தரக் கல்வி அறத்துறைகளும், சத்திரங்களும் நிறுவி யாவரும் போற்றத்தக்க முறையில் அவற்றைப் பரிபாலனம் செய்து வந்திருப்பதும், திருக்கோயில்களில் சைவத்திருமுறைகள் ஓதுவதற்கான ஏற்பாடுகளும் செய்து வந்திருப்பதும், அவர்களின் மிகச்சிறந்த பண்பாடாக விளங்குகின்றது என்றால், அது மிகையாகாது.

பொதுவாக மலேசியா அருள்நெறித் திருக்கூட்டத்தின் ஆரம்ப காலம் முதலே கோலாலம்பூர் நகரத்தார் திருக்கூட்டத்திற்கு மிக மிக ஆதரவாக இருந்து வந்திருப்பது குறித்தும், குறிப்பாக மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்த தத்துவத்துறை நிறுவுவதற்கும், இரண்டாவது அனைத்துலக சைவ சித்தாந்த மாநாடு கோலாலம்பூரில் மிகச் சிறப்பாக நடைபெறுவதற்கும் கணிசமாக நிதி உதவி செய்து அருள்நெறித்திருக்கூட்டத்திற்கு உறுதுணையாக இருந்து வந்ததையும் நினைவிற்கொண்டு திருக்கூட்டத்தினர் இந்த சந்தர்ப்பத்தில் இதயம் கனிந்த நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

"மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்"

**டத்தோ டாக்டர் வ. கதிரேசன்**



SP.முத்துராமன்
திரைப்பட இயக்குநர்

# திரைப்பட இயக்குநர்
# எஸ். பி. முத்துராமன்
## அவர்களின் வாழ்த்துச் செய்தி



**கோலாலம்பூர் நகரத்தார் நடத்திடும்**
**குடமுழக்கு சிறப்பாக நடைபெற**
**தண்டாயுதபாணி அருள்புரிவாராக**

டத்தோஸ்ரீ எம். சரவணனை விருந்தினராக வந்திருந்து அப்போதெல்லாம் கோவிலுக்கு அருகே அமைந்துள்ள தனவசிக விடுதியில் தங்கி இருந்து காலை பூஜைக்கு சென்று கவியரசு பாடிய 'ஆலோலம் பாடுகிற வள்ளி ' பாடலையும் முணுமுணுப்பது பழகிப்போனது.

நான் 'பிரியா' படப்பிடிப்பிற்காக முதன் முதலில் மலேசியா வந்த போதிலிருந்து செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணியை பார்க்காமல் வருவதில்லை.

என்னோடு அண்ணன் பஞ்சு அருணாசலம் சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த், ஸ்ரீ தேவி இவர்களும் ஆலயத்திற்கு வந்திருக்கிறார்கள்.

இந்த படப்பிடிப்பிற்குப் பிறகு பல முறை கோலாலம்பூர் வந்திருக்கிறேன்.

செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலய குடமுழக்கு விழா சீரும் சிறப்புமாக நடைபெற எல்லாம் வல்ல இறையருளை வேண்டுகிறேன்.



எஸ். பி. முத்துராமன்
திரைப்பட இயக்குநர்




திருக்கயிலாய ஸ்ரீ கந்தப்பரம்பரை

சூரியனார் கோயில் ஆதீன ஸ்ரீ கார்யம்

தவத்திரு ஸ்ரீமத் சிவாக்கர தேசிக சுவாமிகள்

சிவாக்கர யோகி திருஞானசம்பந்தர் திருமடம்

கோபிசெட்டிபாளையம், ஈரோடு - 648476 | Ph: 95859 84321




## அருளாசி வாழ்த்துரை

**உருவாய் அருவாய் உளதாய் இலதாய்**
**மறுவாய் மலராய் மணியாய் ஒளியாய்**
**கருவாய் உயிராய் கதியாய் விதியாய்**
**குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!**

எல்லாம் வல்ல செந்தமிழ் முருகப்பெருமானின் திருவருள் கருணையால், மலேசிய திரு நாடு கோலாம்பூர், நகரத்தார் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் மஹா கும்பாபிஷேக பெருவிழா வருகின்ற தை மாதம் 21-ம் நாள் (3.2.2025) திங்கள் கிழமை ஷஷ்டி அன்று மிகச்சிறப்பாக நடைபெற உள்ளது. இத்திருகோயில் மலேசியா நாட்டின் பழநிக்கு நிகரான ஸ்தலம் ஆகும் "மலேசியா பழநி" என்ற அனைவராலும் அழைக்கப்படுகின்றது. எங்கும் இல்லாத சிறப்பு உருத்திராட்ஷ மரம் இவ்ஆலயத்தில் உள்ளது.100 ஆண்டுகள் பழமையான வெள்ளிரதம் இத்திருக் கோயிலின் வரலாற்றுச் சிறப்பு ஆகும்.

வாரியார் சுவாமிகள் சொற்பொழிவு பல செய்து அருளாசி வழங்கிய சிறப்பு பெற்றது இத்திருகோயில். கந்த ஷஷ்டி பெருவிழா, கார்த்திகை சோமவாரம் சங்காபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. தமிழ்நாட்டில் நாட்டுக் கோட்டை நகரத்தார் சிவாலயப் பணிகளை மிகச் சிறப்பாக செய்து தொண்டாற்றி உள்ளனர் அந்த வகையில் மலேசியா நாட்டில் நகரத்தார் பெருமக்கள் இத்திருக்கோயிலில் பல திருப்பணிகள் மற்றும் தொண்டுகளை பல நூற்றாண்டு காலமாக செய்து வருகின்றனர். நகரத்தார் செய்து வருகின்ற சமய, சமுதாய பணிகள் அளவிட முடியாது இவர்களின் சைவப்பணிகள் மேலும் சிறக்க வாழ்த்துகின்றோம்.

மலேசியா நாட்டில் பழநிக்கு நிகரான நகரத்தாருக்கு சொந்தமான தண்டாயுதபாணி திருக்கோயில் மிக சக்தி பெற்ற திருக்கோயில் அன்பர்கள் அனைவரும் இக்கும்பாபிஷேக விழாவில் கலந்துகொண்டு முருகப்பெருமானின் கருணையை பெற்று உய்யுமாறு வேண்டி அமைகின்றோம் இத்திருக் கோயில் மேன்மேலும் வளர்ச்சியடைய வாழ்த்தி வணங்குகின்றோம்.

**ஸ்ரீமத் சிவாக்கர தேசிக சுவாமிகள்.**



## கோலாலம்பூர் செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலய காரியக்காரர்



ஆவி.ப.முரு.மு.முரு. பழனியப்பன் சிதம்பரம்

### நிறைந்திடுக

வேலைத் தந்திடுக வினையை வீழ்த்திடுக
காலைத் தந்திடுக கருணை பொழிந்திடுக
கோலைத் தந்திடுக கொடுமை களைந்திடுக
பாலைத் தந்திடுக பவத்தை ஒழித்திடுக
தேனைத் தந்திடுக தேட்டைப் பெருக்கிடுக
சீலந் தந்திடுக சிந்தை நிறைந்திடுக
மாலை தந்திடுக மாயை அழித்திடுக
வாளைத் தந்திடுக வாழ்வைச் சிறப்பிடுக
ஆணை தந்திடுக ஆறுதலை அளித்திடுக
அடியை தந்திடுக அருளைப் பொழிந்திடுக.



## கோலாலம்பூர் செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலய அறங்காவலர்கள்



SOK சிங்காரம் செட்டியார்



மா. மெய்யப்பன்



சுப.சு.சு. இராமசாமி செட்டியார்



சுப. கிருஷ்ணப்பன் செட்டியார்



தெ. தெய்வராயன்



சோம. முத்தையா



# கோலாலம்பூர், செந்தூல் தண்டாயுதபாணி கோவில் அறவாரிய உறுப்பினர்கள்

முறிவிற்குக் குமரன்வேல் முன்னிற்கும் காப்பாகும்.
அறிவுக்கு ஆறுமுகன் பன்னிருகை காப்பாகும்.
செறிவுக்கு. செட்டிக்குச் சேயோன்பேர் காப்பாகும்.
பரிவுக்குப் பாலன்தன் பதமலரே காப்பாகும்.



**கோலாலம்பூர், செந்தூல் தண்டாயுதபாணி கோவில்**
**நவநீத குருக்கள், தலைமைப் பண்டாரம் மணிவண்ணன்**
**மற்றும் உதவிப் பண்டாரங்கள்**

உள்ளத்தில் நீறுகனி உருவத்தை உடன்வைத்து
வெள்ளத்தில் தோணியென விளங்குமவன் அடிபணிவாய்.



**வடிவேல்**
மடப்பள்ளி பண்டாரம்



**சுப்பையா**
நாதஸ்வரக் கலைஞர்



**பாஸ்கரன்**
மேளவாத்தியக் கலைஞர்



**ஆலயச்சிப்பந்திகள்**



**வயிரவன்**





**சங்கர்**

கணக்கப் பிள்ளை (மேலாளர்)



**அன்பரசன்**

பாதுகாவலர்



**வேலு**

பாதுகாவலர்

## ஆலயத்தில் மேளாராக, பணியாற்றியவர்கள்

1. புதுவயல் வீரப்ப செட்டியார்
2. பட்டமங்களம் திருஞானம்
3. உலகம்பட்டி சுப்பிரமணியம்
4. வயிரவன் செட்டியார்
5. கோனாபட்டு பக்தன் சுப்பிரமணியம்
6. கீளசெகப்பட்டி அழகப்பன்
7. காரைக்குடி ராமநாதன்
8. கடியாபட்டி முத்தையா
9. நெய்குப்பை சங்கர்
10. உலகபட்டி. அழ. கண்ணன்

இவர்களை நன்றியுடன் நினைத்துப் பார்க்கிறோம்

வேலைத் தந்திடுக வினையை வீழ்த்திடுக
காலைத் தந்திடுக கருணை பொழிந்திடுக
கோலைத் தந்திடுக கொடுமை களைந்திடுக
பாலைத் தந்திடுக பாவத்தை ஒழித்திடுக

# தோரண வாயில்

## பாவடித்தேன், நின்னடிக்கே

ஆறுமுகன் ஓர் முகத்தால் எனை
நோக்க ஆர்ப்பரிக்கும்
அடியேனின் துயர் தீரும்
ஈராறு விழிகளிலே கருணையுற்று அருளீந்தால்
என் கவலை தீர்ந்திடுமே.
திருமையா தண்டபாணி கரையேற்றும் செட்டியானே
தீங்ககற்றும் குருபரனே
பாருமையா பழனிவேலோய் செவ்வேளனே
சரணவணனே
பாவடித்தேன், நின்னடிக்கே!

சீராகி



மலர்குழுவிற்கு ஒன்றிணைந்தவர்கள்
- கரு. கார்த்திக்
- கவிஞர் சீராகி @ சீ. இராதாகிருஷ்ணன்
- சோலை பாஸ்கரன்
- மாணிக்கம் மெய்யப்பன் செட்டியார்
- சிதம்பரம் நாச்சியப்பன்
- திருமதி ஜெயந்தி சிதம்பரம்
- தினேஷா சிவபாலன்

## கந்தனுக்கு செந்தூலில் அமைந்த ஆலய வரலாறு
## கோலாலம்பூர், அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம்





மலேசியத் தலைநகரான கோலாலம்பூர் ஜாலான் ஈப்போ 2வது மைலில் எழுந்தருளியுள்ள மலேசியப்புகழ்பெற்ற அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் 125 ஆண்டுகள் பழமை வாய்ந்த ஆலயம் என நம்பப்படுகிறது.

தொன்றுதொட்டு நகரத்தார் திரை கடலோடியும் திரவியம் தேடும் பொருட்டு பாய்மரக்கப்பல்கள் மூலம் இலங்கை, பர்மா, மலாயா, வியட்னாம் (செய்கோன்) மேடான் ஆகிய இடங்களுக்கு தொலைதூரப் பயணத்தினை மேற்கொண்ட நகரத்தார் பெருமக்கள் தங்கள் குடும்பத்தாரை விடுத்து தனியார்களாகப் வந்தவர்களைப் புறப்பட்டு பற்றிக் குறிப்பிடும்போது தொலைக்குப் போயிருக்கிறார்கள்" என்று குறிப்பிடுவதுண்டு.

தங்கள் குடும்பத்தினை விட்டுத் தனியாகப் பிரிந்து வந்த இத்தகையோர் தங்களைப் போல தாய் தந்தையை விட்டுப் பிரிந்து தனியனாக அமர்ந்த தண்டாயுதபாணிப் பெருமானை தங்களோடு கொண்டு வந்து தங்களுடனேயே வைத்துக் கொண்டனர்.

கொண்டு விக்கப் போன எங்கள் கொள்கையே உனைக் கொண்டு வைக்கப் போன கொள்கையல்லவா" எனப்பாடி மகிழ்ந்தார்.

மலேசியாவில் மட்டுமல்லாமல் தமிழகம் நீங்கலான நாடுகளிலும் நகரத்தார்கள் என அழைக்கப்பெறும் செட்டியார் சமூகத்தினரால் நிர்வாகிக்கப்பெறும் அனைத்துக் கோவில்களுமே அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயங்களாகவே விளங்குவது இந்தக் கருத்தினை உறுதிப்படுத்துவதாகும்.

கோலாலம்பூர் ஜாலான் ஈப்போவில் 1880-1890 ஆம் ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலகட்டத்தில் இச்சிறப்புமிக்க ஆலயம் தோற்றுவிக்கப்பட்டிருக்க வேண்டும் என மதிப்பிடப்படுகிறது.

சின்னஞ்சிறிய ஆலயமாக இவ்வாலயம் எழுந்தருளிய வேளையில் "வேல்" வடிவில் வேலவன் வீற்றிருந்து அருள் பாலித்தான் என்றும் தெரியவருகின்றது.

இரண்டாம் உலகப் போருக்கு முன்னைய காலகட்டத்தில் ஏற்பட்டிருந்த பயங்கரமான பொருளாதார மந்தம் உலகப்போருக்குப் பின்னர் மேற்கொள்ளப்பட்ட பொருளாதாரச் சீரமைப்புப்பணி ஆகியவை காரணமாக மீண்டும் திருக்குட நன்னீராட்டு விழாவிற்கான வாய்ப்பினை 30-6-1961ல் தான் இறையருள் வழங்கியது.

இதனையடுத்து 1-11-1971ல் மீண்டும் ஆலயத் திருப்பணிக்குப் பின்னர் மகா கும்பாபிஷேகத் திருவிழா நடைபெற்றது.

தொடர்ந்து 12 ஆண்டுகளுக்குப் பின்னர் ஆலயத்தின் மறு சீரமைப்புபணி மேற்கொள்ளபட்ட மின்னர் 8-6-1984 ஆம் ஆண்டு திருக்குட நன்னீராட்டு விழா மேற்கொள்ளப்பட்டது.

1850களில் ஈப்போ ரோடு முற்றிலும் காடாக இருந்தது. இப்போது உள்ள அந்த முருகன் கோவிலுக்குப் பக்கத்தில் எந்தக் கட்டடமும் இல்லை. லெட்சுமி நாராயண் கோவில் கம்போங் காசிப்பிள்ளை, மலேசிய நண்பன் அலுவலகம் இருக்கும் இடம், அதைத் தாண்டி ரெயின்போ கார்டன், பெம்பு காரடர்ன் என எதுவும் இல்லை. ஈப்போ ரோட்டிலே லாட் நம்பர் ஒன்று இந்த ஆலயம்தான். இன்று மூலவர் (மூலஸ்தானம்) இருக்கும் அளவுதான் இந்தக் கோவில். தமிழ் நாட்டிலிருந்து வேலினைக் கொண்டு வந்து ஸ்தாபனம் செய்து பிறகு பக்கத்தில் வேல் விக்ரகம் அமைக்கப்பெ-பற்றது. கோவிலைச் சுற்றி வாழைத் தோப்பும் தென்னந் தோப்புமாக இருந்திருக்கிறது. அதன்பிறகு 1883இல் அங்கிருந்த காடுகளை சீரமைத்து கோவில் பெரிதானது.



1902 ஆவணி மாதம். முதல் கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. அதற்குப் பிறகு உலகப் போரின் காரணத்தால் பொருளாதார நெருக்கடியில் மந்தம் ஏற்பட்டது. போருக்குப் பிறகு 1901இல் தான் மறு சீரமைப்புடன் கும்பாபிஷேகம் நடைபெற இறையருள் காட்டியிருக்கிறது. இந்த கும்பாபிஷேகம் 30-10-1961இல் நடைபெற்றிருக்கிறது. அதன் பிறகு 1971 நவம்பர் 11இல் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. அதனைத் தொடர்ந்து 1984லிலும் 1998லுமாக மகா கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

ஆனை முகத்தானுக்கு அழகு ஆலயம் 84ஆம் ஆண்டு வரை கோவிலுக்கு வெளியே மரத்தடிப் பிள்ளையாராக இருந்தவரை சிறிய கோவிலுக்குள் அமைத்தவர்கள் 75ஆம் நம்பர் கிட்டங்கி (K.V.AL.M.) நிறுவனம். அதன் தலைமை மேனேஜராக இருந்த ஐயா கண்ணப்ப செட்டியாரும் அடுத்து துணை மேனேஜராக இருந்த சுந்தரம் செட்டியாரும் இந்த ஆலயத்தை நிறுச்ச் செயல் பட்டவர்கள். இப்போது அதற்கு என பல சிறப்பு பூசைகளும் விநாயக சதுர்த்தி விசேஷங்களும் மிக மிக சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

**வெள்ளி ரதம்**

பினாங்கு. சிங்கப்பூர் மற்றும் கோலாலம்பூரில் வீற்றிருக்கும் தண்டாயுதபாணி கோவிலுக்கு என மூன்று வெள்ளி இரதங்களும் காரைக்குடி ஆசாரியால் செய்யப்பட்டு தருவிக்கப்பட்டன. கொண்டு வந்து இறக்கியபோது இரதாங்கள் இடம் மாறின.

இந்த இரதங்களின் வயது 120க்கு மேல் ஆகிறது. என்றாலும். கடந்த 2008இல் அதனை மறுசீரமைத்து அந்த இரதம் செய்த ஆசாரியின் கொள்ளுப் பேரன் ஆசாரியாக வந்து பணி செய்து வெள்ளோட்டம் செய்தார்கள் 38 ஆம் நம்பர் கிட்டங்கி இராமசாமி செட்டியார் சகோதரர்கள்.இர-தாங்களும் காரைக்குடி ஆசாரியால் செய்யப்பட்டு தருவிக்கப்பட்டன. கொண்டு வந்து இறக்கியபோது இரதாங்கள் இடம் மாறின.

இந்த இரதங்களின் வயது 120க்கு மேல் ஆகிறது. என்றாலும். கடந்த 2008இல் அதனை மறுசீரமைத்து அந்த இரதம் செய்த ஆசாரியின் கொள்ளுப் பேரன் ஆசாரியாக வந்து பணி செய்து வெள்ளோட்டம் செய்தார்கள் 38 ஆம் தம்பர் கிட்டங்கி இராமசாமி செட்டியார் சகோதரர்கள்.



**ஸ்ரீ தண்டாயுதபாணி பள்ளிக்கூடம்**

ஆலயம் அமைத்துள்ள பகுதியும் அதன் சுற்றுப்புறப் பகுதியும் சேர்ந்த எட்டு ஏக்கர் நிலப்பரப்பு ஆலயத்தினைச் சார்ந்ததாகும்.

**ஆலயத்தின் மூலவர் அருள்மிகு தண்டாயுதபாணி கருவறையில் திருக்கோலம் காட்டி வீற்றிருக்கிறார்.**

கருவறையின் முன்கட்டின் வலப்புறம் வேழமுகத்தானின் அருட்கோலம் இடப்புறம் நடராசர், நாயன்மார்கள், கருவறைக்கு வெளியே இடும்பன், மண்டப நுழைவில் வேலும், மயிலும் சுற்றுப்பிரகாரத்தில் இடப்புறத்தில் தும்பிக்கையான் சந்நிதி சுற்றுக்கட்டு. அதன் இடப்புறம் மடப்பள்ளி, சமயச் சொற்பொழிவுக்கான ஒரு தாழ் வாரம், சாமான்கள் சேகரித்து வைக்கும் பகுதி, வலப்புறம் அலுவலகம், திருமணக் காலங்களில் மணமகன் மணமகள் தங்கியிருக்க உடை மாற்ற வசதியான அறைகள், கோவிலுக்கு வெளிப்புற சுற்றுச்சுவரை அடுத்து உட்புறமாக அரசமரத்தடியில் இருந்து அரசோச்சும் விநாயகப் பெருமான், இவரது பக்தர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

ஆலயமும் மண்டபமும் அமைத்திருக்கும் ஏறத்தாழ 5 ஏக்கர் நிலப்பரப்பும், தண்டபாணித் தெய்வத்தின் திருப்பெயர் தாங்கி கல்விக்கண் திறக்கும் பள்ளி அமைந்துள்ள 3 ஏக்கருக்கு மேற்பட்ட நிலப்பரப்பும் இதில் அடங்கும்.

மலேசிய இந்தியர் காங்கிரஸ் 1946-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பெற்ற புனித தலமாகப் பெருமை கொண்டது ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலய செட்டியார்கள் மண்டபம். வீர வரலாறு படைத்த தியாகிகளில் எஞ்சியோர் கூடி சமுதாய மானம் காக்க, மாண்பு காக்க காங்கிரசைத் தோற்றுவிக்கக் கூடிய களமாக விளங்கியது இம்மண்டபம்.

கோலாம்பூர் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தின் ஒரு சிறப்பு என்னவென்றால் பங்குனி உத்திர திருவிழாவின்போது லெபோ அம்பாங்கிலிருந்து வெள்ளிரதத்தில் ஸ்ரீ முருகப் பெருமான் பவனி வந்து இரவு ஜகஜோதியாய் அலங்கார புருடராய் பல்லாயிரக் கணக்கானோருக்கு அருள் புரிகிறார்.

திரு உலாக் காட்சியின் மாட்சி வருணனைக்காப்பாற்பட்டது.

ஏறத்தாழ 5000ற்கும் மேற்பட்ட பக்தப் பெருமக்களுக்கு அன்று அன்னதானம் வழங்கப்படும்.

**தண்டாயுதபாணி பள்ளிக்கூடம்**

1960க்கு முன் கட்டப்பட்டு அந்த ஆண்டிலேயே அரசாங்கத்திடம் 'செயல்பாட்டு உரிமை' கொடுத்தார்கள் அன்றைய நகரத்தார்கள். தாங்கள் செய்கிற சமயப் பணியுடன் கல்விக்குப் பெரிய உதவி செய்ய வேண்டும் என்பதற்காக இரண்டாம் லாட் (LOT 2) அதனை வாங்கி இந்த பள்ளிக்கூடத்தைக் கட்டினார்கள்.

அரசாங்கமும் அதற்கு Sekolah Sri Thandayuthapani என்றே பெயர் வைத்து நடத்தியது. இப்போது அதன் கால அவகாசம்



முடிந்ததால் கோவிலுக்கு எதிர்ப்புறத்தில் உள்ள மார்க்கெட்டுக்குப் பக்கத்தில் அமைந்திருந்த திடலில் அரசு பள்ளிக்கூடம் செயல்படுகிறது.

கோவில் பக்கத்திலே 1920-ல் நிர்மாணிக்கப்பட்ட மண்டபம். செட்டிநாட்டு வீடுகள் போல தோற்றம் கொண்ட பளிங்குத்-தரை, பெரிய தூண்கள் கொண்ட பிரமாண்ட மண்டபம். அதற்கு பின்புறம் 1981இல் சீரமைத்து கட்டப்பட்ட மற்றொரு மண்டபம் பக்கத்திலே சிற்றுண்டி சாப்பாட்டு மண்டபம். அதற்கு வெளியே சமையல் கூடம்.

முதல் மகிகா கூட்டம் 1946-ல் இந்த மண்டபத்தில்தான் நடைபெற்றிருக்கிறது. நவசக்தி நவராத்திரி விழாக்கள், பேரறிஞர்களின் பேச்சுகள், புத்தக வெளியீட்டு விழாக்கள் எண்ணற்ற திருமணங்கள், விருந்துபசரிப்புகள் என பலவாறு நடைபெற்றுள்ள இந்த மண்டபத்தில் 1987ஆம் ஆண்டு தொடங்கி ஆண்டு தோறும் கவியரசு கண்ண-தாசன் விழா நடைபெற்று வருகிறது.

இப்போது அமைக்கப்பட்டுள்ள கோவில், அதன் சுற்றுப்புறம், மண்டபம் அருகில் கார் நிறுத்தும் இடம், பின்புறம் பள்ளிக்கூடம் இவைகளின் நிலப்பரப்பு ஏழு ஏக்கர் இருக்கும். ஆலயத்திற்கு நேர் எதிர்ப்புறமுள்ள மங்களதீபம் பல்பொருள் அங்காடி உள்ள இடம், கட்டடம் ஆலயத்திற்குச் சொந்தமானது. அதற்கு அருகில் முன்பு காலியாக இருந்த இடத்தில் பங்குனி உத்திரத் திருவிழாக் காலத்தில் ராட்டினம் சுற்றுதல் மற்றும் சிறு கடைகள் தமிழர்களால் நடத்தப்படும்.

**ஆலயத்தின் சிறப்பம்சங்கள்**

இந்த ஆலயத்தின் முக்கியமான சிறப்பம்சம் மூலவரின் திருத்தோற்றம் கவர்ந்திழுக்கும் காந்தசக்தி, திருக்கார்த்திகை வெள்ளிக்கிழமைகளில் விசேஷ கால நேரங்களில் இவர்



தரும் வெவ்வேறான கொள்ளை அழகுமிக்க தோற்றம் ஈப்போ சாலையில் இருந்தவாறே தரிசிக்க வழி செய்கின்ற அளவில் அமைந்த பீடம்.

கோலாலம்பூர் முருகன் கோலாகலமானவர் மட்டுமல்ல. எந்த மூலவருக்கும் இல்லாத ஓர் ஈர்ப்பு சக்தியைத் தன்பால் கொண்டவர் என்பதும் இங்குக் குறிப்பிட்டுக் கூறத் தக்கதாகும்.

ஆலய வரலாற்றோடு ஒன்றித்து விட்டது போன்று இங்குள்ள மகிழமரம் பக்தப் பெருமக்களை வெகுவாகக் கவர்ந்துள்ளது.

100 ஆண்டுகளுக்கு மேலாக அம்மரம் ஆலயத்தையொட்டி இருந்து வருகிறது.

ஆலய எதிர்புறத்தில் முன்பு ஷெல் (Shell) நிறுவனம் இருந்தது. இப்போது பளிங்குக்கல் செய்யும் நிறுவனம் செயல்படுகிறது. இந்த இடமும் இதற்கு பின்னே உள்ள கம்பமும் கோவிலைச் சார்ந்த நிலங்களே. இந்த ஆலயத்தில் நடைபெற்ற திருமணம், சாந்தி (60ஆம் கல்யாணம்) முதன் முதலாக இங்குதான் மலாக்காவைச் சேர்ந்த திரு.நாராயணன் செட்டியார் 35 ஆண்டுகளுக்கு மேலாக தண்டாயுதபாணி கோவிலில் மேலாளராக பணியாற்றிய (அமரர்) திரு. பழ. வீரப்ப செட்டியார், இப்பொழுது மேலாளராக இருந்த திரு. சித. வீரப்ப செட்டியார் அவர்கள் செய்து கொண்டார். பிறகு அவரது சதாபிஷேகமும் இங்கே நடைபெற்றது. இவர் டத்தோ காசியின் ஐயா (தாத்தா) ஆவார்.

ஆரம்ப கால கட்டங்களில் நிறைய திருமணம் சன்னதியிலே நடைபெற்றது. பின்னர் மண்டபத்தில் மட்டுமே திருமணம் செய்வது என்று முடிவு செய்யப்பட்டது. முன்பு இருந்த மண்டபத்தின் பின்புறம் செட்டிநாடு வீடுகள் போல் முற்றம் அமைத்து சுமார் 40 ஆட்டுக் கல்கள் அமைக்கப்பட்டு ஒரே நேரத்திற்கு 500 நபர்கள் பந்தியில் சாப்பிடக்கூடிய சாப்பாடு மண்டபம் அமைந்திருந்தது. இப்போது அந்த இடத்தில்தான் மற்றொரு குளிர் சாதன வசதியுடன் மண்டபமும், மேடையும் அமைந்துள்ளது.

மண்டபத்தில் ஆண்டுக்கு 400 திருமணங்கள் வரை நடைபெற்றதும் உண்டு.

**ஆலயச் சிப்பந்திகள்**

எனக்குத் தெரிந்த வரையில் இந்த ஆலயத்தில் (அமரர்) மகாதேவ ஐயர், சிங்கப்பூர் ராஜாமணி குருக்கள், அடுத்து 'கண்டதேவி' சந்திரசேகர் தமிழகம் போய் மீண்டும் வந்து 3 ஆண்டுகள் வரை இருந்து தமிழகத்தில் காலமானார்.

**கண்ணதாசன் வருகை**

வாரியார் சுவாமிகள், குன்றக்குடி அடிகளார், மதுரை ஆதீனம் ஆகியோர் உரைகள் இங்கே சிறப்பாக நடைபெற்றிருக்கின்றன. 1975இல் கவிஞர் கண்ணதாசன் மண்டபத்திற்கு உரையாற்ற வந்தபோது மண்டபம் ஆலயத்திற்கு உட்புறம் மற்றும் வெளிப்புறம் ஆயிரக்கணக்கான மக்கள் வெள்ளம் வழிந்தோடியது. இங்கு ஆலயம் நிறுவப்பட்டது போலத்தான் முன்னம் குறிப்பிட்ட நகரத்தார் கோவில்களிலும் வேலுக்கே பிரதானம். ஆலயங்கள் பல கட்டியும் சைவ சமயத்தை தொழில் செய்யச் சென்ற நாடுகளிலெல்லாம் நல்ல முறையிலே வளர்த்து தமிழ் இசைக்கும் கல்விக்கும் தங்களை செந்தூல் தண்டாயுதபாணி ஆலயத்தின் முதற் குட முழுக்கு 1902ல், இரண்டாவது 1961ல், மூன்றாவது 1971ல், நான்காவது 1984ல், ஐந்தாவது 1998லும் ஆறாவதாக 2013 பிப்ரவரி முதல் தேதியில் நடைபெற்றது ஆறாவது குட முழுக்கை கடந்த பிப்ரவரி முதல் தேதி 2013இல் மிகச் சிறப்பாக செய்து முடித்து 2012ல் ஆலய திருப்பணிகளையும் செவ்வன செய்து முடித்திருக்கும் ஆலய நிர்வாகஸ்தர் 38 நம்பர் கிட்டங்கியைச் சேர்ந்த திரு.அண்ணாமலை மீனாட்சி சுந்தரம் செட்டியார் அவர்கள்.




## செட்டித் தெரு நாயகன்

### எஸ். நவநீதகிரி சிவாச்சாரியார்

செட்டித்தெருவெங்கும் சிங்காரத் தோரணங்கள்
கட்டிவைத்து ரசிப்பார் கலைமிகுந்த நகரத்தார்
மட்டிலா மகிழ்ச்சியுடன் பங்குனி உத்திரத்தில்
கெட்டி மேளம் முழங்க வெள்ளிரதம் ஓடிவரும்.

கிட்டங்கி நகரத்தார் கீர்த்தியுடன் தானும்
திட்டங்கள் தீட்டி கோயிலை நடத்துகிறார்
அட்டமாசித்திகளை அருள்கின்ற வேலன்
மட்டற்ற மகிழ்ச்சியில் மங்கலமே தருகின்றான்.

"செந்தூல்" முருகனின் சிங்காரப்பேரழகை
அந்தாதி பாடினாலும் அதில் எழுதமுடியாது
எந்தாயுமானவன் எல்லாம் கடந்தவன்
வந்தார்கள் யாவரையும் வாழவைக்கும் வேலனவன்.

கையிலே வேலேந்தி கந்தன் வருகின்றான்
கர்மவினைஎல்லாம் கனிவோடு தீர்க்கின்றான்
தையில் பூசம் கண்டு பங்குனியில் தேசம் கொண்டு
தணிகாசலன் நம்மை தளராது காத்திடுவான்.



# குறையாத செல்வம் மிகும் நலம்யாவும் வீடு வரும்

## கவியரசு கண்ணதாசன்



ஆலோலம் பாடுகிற வள்ளயம்மை கழுத்தில்
அணியாரம் இட்ட பெருமான்
ஆகாயம் பூமியிடை நீராவிபோல வடிவில்
ஆதாரமான பெருமான்

மேலாளர் கீழாளர் பேதங்கள் இல்லாது
மெய்யாள வந்த பெருமான்
மின்னாகி இடியாகி மழையாகி காற்றாகி
விளைவாக நின்ற பெருமான்

கோலாலம்பூரில் வளர்கோன் 'தண்டபாணி இவன்
கோவில் கொண்டாடு மனமே
கூற்றேதும் வாராது கொடுநோயும் சேராது
குறையாது வாழ்வு மிகுமே!

"ஓ"மென்ற சிறுமுட்டை உள்வீடு அவன்வீடு
உன்வீடும் அந்த இடமே
ஓசைக்கு மணியுண்டு பூசைக்கு மணமுண்டு
உன்வாழ்வு கந்தன் வசமே

நாமென்ற ஆங்காரம் நமதென்ற எக்காளம்
நடவாது வேலனிடமே
நடக்கட்டும் பார்ப்போ மென்றிருக்கட்டும் உன் உள்ளம்
நலம்யாவும் வீடுவருமே

கோமன்னன் வாழ்கின்ற கோலாலம்பூர் செந்தால்
கொடிகட்டி ஆளவிடுமே
கொண்டாடு கொண்டாடு தண்டாயுதத்தானை
குறையாத செல்வமிகுமே

1971இல் கவியரசு கண்ணதாசன் மலேசிய வருகையின்போது 79ஆம் நம்பர் கிட்டங்கியில் ஆத்தாங்குடி (பேங்கர்) சித. நாச்சியப்ப செட்டியார் அவர்களின் ஏற்பாட்டில் ஒரு விருந்து உபசரிப்பு நடைபெற்றது. அதில் நகரத்தார் பெருமக்களும் கலந்து கொண்டனர். மறுநாள் காலை மக்கள் தொண்டர் வி. டேவிட் அவர்கள், போலீஸ் அதிகாரி வழக்கறிஞர் DPP சம்பந்தமூர்த்தி அவர்கள், வள்ளல் ரெங்கசாமிப் பிள்ளை அவர்கள். சித. கணேசா அவர்கள் இவர்களுடன் கோவிலுக்கு வருகை தந்த கவிஞர் தண்டாயுதபாணியின் சன்னதியில் நின்று பாடிய கவிதை இது. இதை உடனிருந்து எழுதியவர் அவரின் உதவியாளர் அரசு நாச்சியப்பன் அவர்கள்.



# பன்னிருகை வேலவனுக்கு பார்போற்றும் பங்குனி உத்திரம்

## தொகுப்பு: சீராகி



**செம்மையாய்க் கொண்டாடும் பங்குனி உத்திரம்**
**செந்தூல் முருகனுக்கு மங்கல உற்சவம்**
**சங்கடம் தீர்க்க நடந்திடும் வைபவம்**
**சிங்கையில் வைப்பின் சேர்ந்திடும் புண்ணியம்.**

இந்துக்களால் மிகப் பெரிதாகக் கொண்டாடப்படும் விழாக்களில் ஒன்று, பங்குனி உத்திர விழாவாகும். சங்ககாலம் தொட்டே பங்குனி உத்திரத்திருவிழா கொண்டாடப்பட்டு வருகிறது என்பதை அகநானூறு பாடல் வழி அறிகிறோம்.

உருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழிற் பங்குனி முயக்கம் கழிந்த வழி நாள் அழகிய வெண்மையான மணலையுடைய குளிர்ச்சி பொருந்திய சோலையில் முருகனுக்காக பங்குனி உத்திர விழா நடைபெறுமாம்!

பண்டிகை, திருநாள், விழவு, சாறு என விழாவிற்கு பண்டைகாலம் முதல் தமிழர்கள் பெயர் சூடி ஒன்று கூடி, ஆன்மீகத்தையும், ஒற்றுமையையும், விருந்தோம்பலையும் வளர்த்தனர். விழா எனும் சொல் 'விழை' என்ற சொல்லின் அடியாகத் தோன்றியது. இதற்கு விருப்பம், பற்று ஆகிய பொருள்கள் உள்ளன.

பங்குனி உத்திரம் என்பது அறுபடை ஆளும் ஆறுமுகக் கடவுளுக்குரிய சிறப்பு விரததினமாகக் கொண்டாடப்படுகிறது.

மாதந்தோறும் உத்திர நட்சத்திரம் வந்தாலும், பங்குனி மாதத்தில் வரும் உத்திரத்திற்கு அதிக மகிமைகள் உண்டு. பன்னிரண்டாவது மாதமான பங்குனியும், பன்னிரண்டாவது நட்சத்திரமான உத்திரமும் இணையும் புண்ணியத் திருநாள்தான் பங்குனி உத்திரம். இந்தத் திருநாளில்தான் மிக அதிகமான தெய்வத்திருமணங்கள் நடைபெற்றுள்ளதாக புராணங்கள் கூறுகின்றன.

* சிவபெருமான் பார்வதி தேவியோடு மணக் கோலத்தில் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு மதுரையில் காட்சி தந்தருளிய திருநாள் இதுதான்.

* அன்னை மீனாட்சியை திருமணம் செய்து மீனாட்சி சுந்தரேஸ்வராக சிவன் காட்சி தந்ததும் இந்நாளில்தான்.

* சிவனின் தவத்தைக் கலைத்த மன்மதன் நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்டான். மீண்டும் மன்மதன் உயிர்பெற்றதும் இந்நாளில் தான்.

* முருகப்பெருமான் தெய்வானையை இந்நாளில் தான் திருமணம் புரிந்து கொண்டார்.



* அரங்கநாதர் - ஆண்டாள் திருக்கல்யாண வைபவம் நடந்த நாளும் இதுதான்.

* மகாலெட்சுமி பங்குனி உத்திர விரதத்தை அனுசரித்து, மகாவிஷ்ணுவின் மார்பில் உறைந்து மகாலெட்சுமியின், அவதார நாளும் இதுவே.

* இராமச்சந்திர மூர்த்தி - சீதை திருமணம் பங்குனி உத்திரத்தில் மதிலையில் நடைபெற்றது.

கோலாலம்பூர் செந்தூலில் உள்ள அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் நகரத்தார் சமூகத்தினர் எழுப்பிய கோயிலாகும். அருகில் மலேசிய இந்தியர் காங்கிரஸின் துவக்கக் கூட்டம் கண்ட வரலாற்றுச் சிறப்பு மிக்க செட்டியார்கள் மண்டபம் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது. இதில் திருமணங்கள், கண்ணதாசன் விழா, கலை விழா, நவராத்திரி விழா, மற்றும் சமய விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

பங்குனி உத்திரம் முதல் நாள் செட்டித் தெரு என்று பொதுவாக அழைக்கப்படும் லெபோ அம்பாங்கில் உள்ள கிட்டங்கி ஒன்றில் முருகப் பெருமான் எழுந்தருளியிருப்பார். ஆறு ஆண்டுகளுக்கு ஒரு முறை கூடும் ஆலய நிர்வாகக் குழுவினர் சுழற்சி முறையில் தகுந்த கிட்டங்கியைத் தேர்வு செய்வர்.





ஈப்போ சாலை, செந்தூலிலிருந்து அருள் வந்தவாறு திரு. மணிவண்ணன் பண்டாரம் புனித வேலை ஏந்தி சுமார் 9 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கிட்டங்கிக்கு நடந்து மின்னலாக வந்தடைவார். இதற்கு முன்பு வைரவப் பண்டாரம், அதன்பின் சிதம்பரம் பண்டாரம், பிறகு ராகவன் பண்டாரம் இப்பக்திப்பணியை செய்தனர் என்பது வரலாறு. அங்கு வேலைச் செலுத்தி அபிஷேக ஆராதனை நடைபெறும் ஐதீகப்படி 'வினாயகர் பானை' என்று அழைக்கப்படும் பொங்கல் வைத்து, யானை முகத்தானுக்குப் படைக்கப்படும். அருள்மிகு கார்த்திகேயனுக்கு, கார்த்திகேயன் (கரு. கார்த்திக்) மற்றும் மீனாட்சி சுந்தரம் அண்ணாமலை இணைந்து அலங்காரம் செய்து, தெய்வீகத் தோற்றத்தை ஏற்படுத்துவார்கள். வழிபாடுகள் நிறைவடைந்ததும், அருள்மிகு தண்டபாணி, வெள்ளி இரதத்தில் எழுந்தருளி, வழக்கம் போல் தாய் கோயிலான அருள்மிகு மகா மாரியம்மன் ஆலயம் சென்று, தலைநகரின் பிரதான சாலைகள் வழியாக அதிகாலை செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம் சென்றடையும். பாதயாத்திரையாக ஆயிரக்கணக்கான பக்தர்கள் பால் குடம் ஏந்தி பக்தியோடு நடந்து வரும் காட்சி மெய் சிலிர்க்கும். முன்பு ஒரு காவடியோடு தொடங்கிய நடைப்பயணம், இப்போது பக்தர்கள் நூறுக்கும் மேலானவர்கள் காவடி ஏந்துகிறார்கள்.

பங்குனி உத்திர தினத்தன்று இலட்சக்கணக்கான பக்தர்கள் குவிந்தாலும், சம்பிரதாயமான அன்னதானம் முறையாக வழங்கப்பட்டு வருவது மிகச்சிறப்பு.

வேலும் மயிலும் உண்டு
வினை தீர்க்க வழி உண்டு.





# மெய் சிலிர்க்கவைக்கும் அனுபவப் பகிர்வு

## கோவில் தலைமை பண்டாரம் மணிமன்னன்



1977 ஆம் ஆண்டு முதல் ஒரு சிறுவனாக என்னுடைய தெய்வ திருப்பணி தொடங்கியது. இந்த சன்னிதானத்தில் தான் என் திருமணமும் நடந்தது.

இந்த 49 ஆண்டு கால பணியில் 25 பங்குனி உத்திரங்களை கண்டேன். வேல் புறப்பாடுகளில் பங்கு கொண்டேன். எத்தனை எத்தனை தெய்வீக நிகழ்ச்சிகள்... எத்தனை எத்தனை அற்புதங்கள்... எல்லாம் வல்ல பரம் பொருள் துணை கொண்டு கடந்த 49 ஆண்டுகளாக (1977) இல் கோலாலம்பூர் செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில் பண்டாரமாக பணியாற்றி வருகிறேன். எனக்கு முன்னதாக தலைமை பண்டாரமாக பணியாற்றிய அமரர் வைரவ பண்டாரம், அமரர் சிதம்பர பண்டாரம், அமரர் ராகவன் பண்டாரம் ஆகியோரை இவ்வேளையில் என் நெஞ்சத்தில் நிறுத்தி நினைவு கூறுகிறேன்.

1977 ஆம் ஆண்டு சிறு பையனாக அமரர் சிதம்பர பண்டாரம், அமரர் ராகவ பண்டாரத்தின், அடுத்த உதவி பண்டாரமாக இத்திருகோவிலில் பணி ஆற்ற நியமிக்கப்பட்டேன். இன்று இதே கோவிலில் தலைமை பண்டாரமாக பணியாற்றி கொண்டு இருக்கிறேன். நான் தலைமை பண்டாரமாக பணியாற்ற உதவி புரிந்த ஸ்ரீ தண்டாயுதபாணி திருவடிபோற்றி நன்றி சொல்ல கடமை பட்டு இருக்கிறேன். என்னுடன் என் மகன் ராம்குமார் உதவியாக இருந்து வருகிறார். நான் கடந்து வந்த பாதை தண்டாயுதபாணி துணையுடன் நடந்தது.

**20 நிமிடங்களில் நடந்து சென்ற அதிசயம்**

இந்த கோவிலில் வருடம் தோறும் பங்குனி உத்திர திருவிழா மிக சிறப்பாக கொண்டாடப்பட்டு வருகிறது. பங்குனி உத்திர திருவிழா முதல் நாள் ஸ்ரீ தண்டாயுதபாணி கோவிலில் இருந்து வேல் புறப்பட்டு கிட்டிங்கி சென்று அடையும். அந்த வேலை நான் எடுத்து கொண்டு கால் நடையாக லெபோ அம்பாங் கிட்டங்கிக்கு என்னை அறியாமல் பக்தி பரவசத்தில் 20 நிமிடங்களில் போய் சேர்ந்து விடுவேன். இது எப்படி நடந்தது. எனக்கே தெரியாது.எல்லாம் அவன் அருள். என் வாழ்வோடு ஒன்று கலந்த முருகனின் தாழ் வணங்கியதால் இது நடந்தது என்ற முது மொழிக்கு ஏற்ப சேவையாற்றி கொண்டு இருக்கிறேன்.



# கோலாலம்பூர் நகரில் பங்குனி உத்திர நாளில் அருள்மிகு தண்டாயுதபாணி உலா வரும் வெள்ளி இரதம்

கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமிக்கு வெள்ளி இரதம் செய்வதென்று 1922இல் முடிவு செய்து காரைக்குடி ராம.ப.மெ.சொ., ஆ.வி.ப. மு. முருகப்ப செட்டியார் மேற்பார்வையில், காரைக்குடி ஏ. அருணுசல் ஆசாரியின் தலைமையில் வேலையைத் துவக்கி, சுமார் இரண்டு ஆண்டுகளில் பூர்த்தி செய்து பாரம்பரிய முறைப்படி காரைக்குடி அருள்மிகு கொப்புடைய நாயகி அம்மன் வெளிச்சுற்று வீதியில் (தற்சமயம் கல்லுக்கட்டி என்று அழைக்கப்படும் வெளி வீதியில் முதலில் வெள்ளோட்டம் காணப்பெற்று, பின்பு எல்லா பாகங்களையும் பிரித்து வரிசைப்படுத்தி பெட்டிகளில் 1924) குரோதன ஆண்டு பங்குனித் திங்கள் ஏ. அருணாசல ஆசாரியின் சகோதரர் ஏ. காளிமுத்து ஆசாரியின் தலைமையில் மீண்டும் எல்லா பாகங்களையும் சேர்த்து இணைத்து கோலாலம்பூரில் வெள்ளோட்டம் செய்யப்பெற்றது.



**இரதத்தில் உள்ள மொத்த அடுக்குகள் (பாகங்கள்) 21**

1) தங்க மூலாம் பூசிய ஸ்தூபி நாசி தலையுடன்.
2) பண்டி, எட்டு திருவாச்சியுடன்
3) சிறிய கொடுங்கை, தங்க முலாம் பூசிய சிறிய ரசக்குண்டுகள், தங்க முலாம் பூசிய எட்டு சூரிய காந்தி பூக்கள் உள்ளன.
4) சிறிய புறாக்கூடு
5) சிறிய வியாழ வேதியியழ், இதன் மேல் எட்டு சாலைகள், பதினாறு மயில்கள்,எட்டு பூத கலைகள் வர்ணம் பூசப்பட்டுள்ளது.
6) நடுக் கொடுங்கை. இதில் தங்க முலாம் பூசிய நடுத்தர ரசக் குண்டுகள் உள்ளன. இதில் வர்ணம் பூசிய எட்டு சிறிய காந்தர்வ பொம்மைகள் உள்ளன.
7) பெரிய புறாக்கூடு
8) பெரிய வியாழ வேதியியழ். இதில் வர்ணம் பூசிய எட்டு சாலகரத் தூண்கள் மற்றும் எட்டு இரதக் கூடுகள் உள்ளன.
9) பெரிய கொடுங்கை. இதில் ஆகப் பெரிய ரசக் குண்டுகளுக்கு தங்க முலாம் பூசி இருக்கிறது. மற்றும் வர்ணம் பூசிய எட்டு பெரிய காந்தர்வ பொம்மைகள் உள்ளன.
10) வெள்ளிச்சட்டம்
11) வெள்ளித் தூண்கள் எட்டு, வெள்ளி பூண் பிடிக்கப்பட்ட நாகராஜ் இலுவைக் கம்பிகள் எட்டு. தூண்களின் மேல் வெள்ளி காமன் வளைவு பலகை எட்டு, வெள்ளி யாழி சிங்கம் எட்டு. மற்றும் வண்ண வெல்வெட் துணிகளால் செய்யப்பட்ட பொம்கைள் எட்டு மாட்டப்பட்டு உள்ளது.
12) முதலாவது வெள்ளி கொரட்டு வர்க்கம். இதில் பச்சை முத்து கட்டி இருக்கிறது. இதில் வெள்ளியினால் ஆன சாமிபீடம் மற்றும் எட்டு தூண்கள். வெள்ளிப் பூண் பிடிக்கப்பட்ட எட்டு நாகராஜ் இலுவைக் கம்பிகள் இதன்மேல் வைக்கப்பட்டு இருக்கிறன.
13) இரண்டாவது வெள்ளி கொரட்டு வர்கம் இதில் தங்க முலாம் பூசிய வெள்ளி நெல்லிக்காய் மணி கட்டி இருக்கிறது.
14) முதலாவது வெள்ளி அரண்மனை பத்மம்
15) இரண்டாவது வெள்ளி அரண்மனை பத்தம்
16) சிகப்பு மற்றும் பச்சை முத்து கட்டிய வெள்ளி பத்மாசன பீடம்
17) வெள்ளி உபபீடம்
18) மரத்தில் வர்ணம் பூசிய மிதிலைப்பார் - இதன் மேல் பித்தளை தகடு போட்டிருக்கிறது. இதில் வெள்ளி பீடத்தில் பிரம்மா சாரதியாகவும் மற்றும் வர்ணம் பூசிய நான்கு வெஞ்சாமர பொம்மைகள் உள்ளன.

19) மரத்தில் வர்ணம் பூசிய யானைகள் -இதில் யானைகள் மற்றும் புராண வரலாறுகளைச் சித்தரிக்கும் பொம்மைகள் உள்ளன.

20) மரத்தில் வர்ணம் பூசிய தாமரை பூக்கள் உள்ள பார் இருக்கிறது.

21) வர்ணம் பூசிய மரத்தில் பூதப் பெரிய பித்தளைத் தகடு பிடிக்கப்பட்ட பலகை மேல் வர்ணம் பூசிய இரண்டு குதிரைகள் உள்ளன. நான்கு மரபார்களும் சக்கரத்துடன் சேர்ந்து சகடை என்று அழைக்கப்படுகிறது. சகடையில் இரண்டு தண்ட வாகளங்களும் இரண்டு தெப்பக் கட்டைகளும் (அச்சு) உள்ளன. இந்த தெப்பக் கட்டைகைகளில் இரும்பிலான சக்கரங்கள் பூட்டப்பட்டு உள்ளது. முன்தெப்பக் கட்டையில் போல் மரத்துடன் டர்ன் டேபில் (Steering) மாட்டப்பட்டு உள்ளது.

84 ஆண்டுகளுக்குப் பிறகு 2008 செப்டம்பர் மாதம் இந்த இரதத்தைச் செய்த காரைக்குடி ஏ. அருணாசல ஆசாரியின் பெயரன் ஏ.ஆர்.எஸ். நடராஜ ஆசாரி தலைமையில் புதுப்பிக்கும் வேலையை காரியக்காரர் சுப.சு. சு. இராமசாமி அவர்கள் துவக்கி சுமார் 6 மாத காலத்திற்குள் முடித்து 1.2.2009இல் இரண்டாவது வெள்ளோட்டம் சிறப்பாக நடைபெற்றது.

ஸ்தூபியில் இருந்து உபபீடம் வரை 17 பாகங்களையும் பிரித்து பழுதுகள் நீக்கி மீண்டும் கோர்த்து இருக்கிறது. சகடையும் மரத்தில் ஆன பார்களையும் பிரிக்கவில்லை.









பங்குனி உத்திரத் திருவிழா
பாங்கான இரதப் பெருவிழா













# குடமுழுக்கு விழா



இத்தகைய திருக்கோயில்களை ஆகம முறைப்படி ஏற்படுத்தி அவற்றில் திருவருட் பிரகாசம் நிறையச் செய்யும் விழாவே குடமுழுக்கு விழா, முறைப்படி செய்யப்படும் குடமுழுக்கு விழாக்களாலே ஆலயங்களில் அருட்சக்தி பொங்கிப் பிரவகித்து நிற்கும். கும்பாபிஷேகம், குடநீராட்டு, பெருஞ்சாந்தி என்பன குடமுழுக்கின் வேறு பெயர்கள். கும்பத்திலுள்ள புனித நீரைக் குறிப்பிட்ட நாளிலும் நேரத்திலும் அபிஷேகம் செய்வதாலேயே இவ்விழாவிற்குக் கும்ப அபிஷேக விழா என்று பெயர். திருக்கோயிலின் கோபுரம், விமானம் ஆகியவற்றின் மீது இப்புனித நீர் தெளிக்கப்படும். இறைவன் முயற்சியின் மாங்களமான முடிவாகவே இவ்விழா அமைகின்றதெனலாம்.



இக்குடமுழுக்கு விழா இரு சமயங்களில் அமையும். ஒரு திருக்கோயில் கட்டி முடிக்கப்பட்ட நிலையில் இது அமையலாம். அன்றேல், அது புதுப்பிக்கப்படும் போதும் இவ்விழா நடைபெறலாம். ஒரு மாமாங்க காலமான பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இவ்விழா நடப்பது மிக மிகச் சிறப்பானது.



திருக்கோயில்கள் இறைவன் எழுந்தருளி இருக்கும் இடங்கள். எனவே, அவற்றுக்கு எக்குற்றமும் நேராமல் பார்த்துக் கொள்வது இன்றியமையாதது. ஆலய விமானங்களும், கட்டடங்களும் பழுதடைதல், திருவுருவங்கள் சின்னமடைதல், அஷ்டபந்தனம் இல்லாதுபோதல் முதலியன திருக்கோயிலுக்கு ஏற்படும் குற்றங்கள். இவற்றையெல்லாம் நீக்கித் திருக்கோயில்களைப் புனரமைத்தல் புண்ணியமாகும். புதியதாக ஒன்றைச் செய்வதைப் பார்க்கிலும் இத்தகைய புனர் நிர்மாணம் ஆயிரம் மடங்கு புண்ணியமுடையது எனச் சமண நூல்கள் கூறுகின்றன. இவ்வாறு திருக்கோயில்களுக்கு ஏற்படும் குறைகளைத் திருப்பணி மூலம் நீக்கிக் குடமுழுக்கு விழாவையும் நடத்தும்போது, திருவுருவங்களில் தெய்வ சந்நித்தியம் நீடித்து நிற்க வழியேற்படுகிறது. எனவே, இறைவன் திருவருள் குறைவின்றிப் பொலிய வகுத்தளிக்கப்பட்ட கிரியைகளின் தொகுதியே குடமுழுக்கு பெருவிழாவாக அமைகின்றது எனலாம்.





திருக்கோயில்களில் காணப்படும் மூர்த்திகளில் மூன்று அம்சங்கள் பொருந்தியுள்ளன. அவை மந்திரம் யந்திரம் திருவடிவம் எனப்படும். இவற்றில் யந்திரன் என்பது காரண சரீரம். யந்திரங்களில்வரையப்படும் பீஜ மந்திரக்களாலும் ரேகைகளாலும் இது அமையும். மந்திரம் என்பது சூக்கும சரீரம். சிவாச்சாரியாரின் தியானம் புறக்கிரியைகள் ஆகியவற்றால் திருவடிவத்தில் ஆவாகனம் செய்யப்பட்ட மந்திரமூர்த்தியின் சரீரம் இது. திருவடிவம் என்பது சிற்பிகளினால் அமைக்கப்படும். தூல சரீரம். இத்தூல சரீரம், மந்திர யந்திரங்களினாலேயே தெய்வ சந்நித்தியம் அடைகிறது. கல், வெள்ளி, செம்புகளிலே பதிவினது விளக்கம் மந்திர நியாசத்தின் பின்னன்றி முன்னில்லை" என்ற ஆறுமுக நாவலரின் சொற்களால் இதனைத் தெளியலாம்.



இவ்வாறு பதி விளக்கம் பெற்ற மூர்த்திகள் இருக்கும் இடங்களைப் புதுப்பிக்க நேரும்போது அவற்றை அப்புறப்படுத்த நேரும். முறைப்படி அவற்றை அப்புறப்படுத்தித் தெய்வ சாந்நித்தியத்தோடு மறுபடியும் அவற்றை உரிய இடத்தில் நிறுவுவதே குடமுழுக்கு விழாவின் அடிப்படை முதலில் திருக்கோயிலில் உள்ள மூர்த்தியின் சந்நித்தியத்தைக் கும்பத்தில் எழுந்தருளச் செய்வர். கும்பம் என்பது இறைவனுடைய வடிவமே ஆகும். கும்பத்தை உடலாகவும், சிவந்த நிறம் ஏறப் பூசிய மண்ணைக் குருதியாகவும், கும்பம் ஆக்கப்பட்ட பொருளை மாமிசமாகவும். சுற்றப்பட்ட ஆடையைத் தோலாகவும், நிறைக்கப்பட்ட நீரை நிணமாகவும். தருப்பையை எலும்பாகவும். சுற்றப்பட்ட நூலை நரம்புகளாகவும் கும்பத்தில் இடப்படும் பொன் மணி முதலியவற்றை வீரியமாகவும் மந்திரத்தை உயிராகவும் நெல் முதலிய தானியங்களை ஆசனமாகவும் தேங்காயைத் தலையாகவும் மாவிலையை சடையாகவும் கொண்டு இத்திருவடிவம் அமைகின்றது.

இவ்வாறு அமைகின்ற கும்பம் உருவத் திருமேனியாகிய பிம்பத்தின் அருகில் வைக்கப்படும். பின்னர் தர்ப்பை மாவிலை முதலியவற்றைக் கொண்டு மந்திரங்கள் ஓதிப் பிம்பத்தில் உள்ள மூர்த்தியைக் கும்பத்தில் ஆவாகனம் செய்வர். இவ்வாறு ஆவாகனம் செய்யப்பட்ட மூர்த்தியை மங்கள முழக்கத்துடன் யாகசாலைக்கு எடுத்துச் சென்று, அங்கு முறைப்படி செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து, மீண்டும் கும்பத்திலுள்ள புனித நீரைத் தர்ப்பையின் வழியாகப் பிம்பத்தில் சேர்ப்பதன் மூலம் அதனை முன்போல தெய்வ சாந்தித்தியம் பொருந்தியதாகச் செய்வர். சுருங்கச் சொன்னால் இதுவே குடமுழுக்கு விழா எனலாம்.

குடமுழுக்கின் கிரியைகள் அனைத் தையும் பூர்வாங்கம், உத்திராங்கம் என் இரு என்னும் வகைகளில் அடக்கி விடலாம். ஆசார்ய வர்ணம் முதல் மண் எடுத்தல் வரையிலான கிரியைகள் பூர்வாங்கம் எனப்படும். இவை குடமுழுக்கின் வகை பொறுத்து வேறுபடும். முளை இடுதல் முதல் தரிசனம் வரையுள்ள கிரியைகள் உத்திராங்கம் எனப்படும். இக்கிரியைகள் அனைத்தும் திருக்கோயிலில் அமையும் யாகசாலையை மையமாகக் கொண்டே அமையும். பிரதான மூர்த்திகளின் எண்ணிக்கையை ஒட்டி யாகசாலை அமையும். யாகசாலை குண்டங்களால் ஆனது. இவற்றின் எண்ணிக்கை அளவு ஆகியவை கோயில்களின் பிரகாரங்களை ஒட்டி அமையும் ஐந்து பிரகாரமுள்ள கோயில்களில் முப்பத்து மூன்று குண்டங்களும், மூன்று பிரகாரமுள்ள கோயில்களில் பதினேழு அல்லது இருபத்தைந்து குண்டங்களும் இரண்டு அல்லது ஒரு பிரகாரமுள்ள கோயில்களில் ஒன்பது குண்டங்களும் அமைப்பது சிறப்பென ஆகமங்கள் கூறுகின்றன. இங்கு வைக்கப்படும் கும்பங்களில் மூன்று இரவுகளுக்குக் குறையாமல், ஒன்பது நாட்களுக்கு மிகாமல் முறையாகப் பூசை செய்ய வேண்டும். இவ்வாறு பூசை செய்யப்பட்ட கும்பங்களின் நீரையே அபிஷேகம் செய்ய வேண்டும். அப்போதே கும்பாபிஷேகம் நிறைவாக முடிந்ததாக எண்ணப்படும். அருவமாகிய இறைவனை அருவுருவமாகிய கும்பத் திருமேனியில் எழுந்தருளச் செய்து பின்னர் உருவமாகிய பிம்பங்களில் இவ்வாறு சேர்ப்பதே கும்பாபிஷேகம்





## மலேசியத் திருநாட்டில் நகரத்தார் பெருமக்கள் நிறுவி, நிர்வகித்து வரும் தண்டாயுதபாணி கோவில்கள்

- அலோர் ஸ்டார்
- கூலிம்
- பினாங்கு
- தைப்பிங்
- ஈப்போ
- தெலுக் இந்தான்
- பத்துபஹாட்
- சிரம்பான்
- ஜாவி
- சிள்ளான்
- மூவார்
- கோலாலம்பூர்

மற்றும் சிங்கப்பூர்

*இந்த ஊர்களில் 'சிட்டங்கி' என்னும் லேவா தேவி கொடுக்கல் வாங்கல் நிறுவனங்களும் நிறுவினார்கள், இப்போது பல ஊர்களிலும் 'சிட்டங்கி'கள் எண்ணிக்கை குறைந்து வருகிறது*



# குடமுழுக்கு எதற்கு?
## (அறிவியல் சிந்தனை)



கோயில்களையும் உயரமான கோபுரங்களையும் அதன் மேல் இருக்கும் கலசங்களையும் பார்த்திருப்பீர்கள். அவற்றுக்கு பின்னால் இருக்கும் ஆன்மீகம் ஒரு புறம் இருக்கட்டும். ஆனால், அதற்குப் பின்னால் எவ்வளவு பெரிய அறிவியல் ஒளிந்திருக்கிறது என்று வியப்பாக உள்ளது. கோபுரத்தின் உச்சியில் தங்கம், வெள்ளி, செப்பு அல்லது ஐம்பொன்னால் செய்யப்பட்ட கலசங்கள் இருக்கும். இக்கலசங்களிலும் அதில் கொட்டப்படும் தானியங்களும், உலோகங்களும் மின்காந்த அலைகளை ஈர்க்கும் சக்தியினைக் கலசங்களுக்குக் கொடுக்கின்றன. (நெல், கம்பு, கேழ்வரகு தினை,வரகு, சோளம், மக்காசோளம், சாமை, எள்) ஆகியவற்றைக் கொட்டினார்கள். குறிப்பாக வரகு தானியத்தை அதிகமாக கொட்டினார்கள். காரணத்தைத் தேடிப்போனால் ஆச்சரியமாக இருக்கிறது. "வரகு" மின்னலை தாங்கும் அதீத ஆற்றலைப் பெற்றுள்ளது என இப்பொதைய அறிவியல் கூறுகிறது.

பனிரெண்டு வருடங்களுக்கு ஒருமுறை குடமுழுக்கு விழா என்ற பெயரில் "கலசங்களில் இருக்கும் பழைய தானியங்கள் நீக்கப்பட்டு புதிய தானியங்கள் நிரப்பப்படுகிறது". அதை இன்றைக்குச் சம்பரதாயமாக மட்டுமே கடைபிடிக்கிறார்கள். காரணத்தைத் தேடினால், அந்த தானியங்களுக்குப் பனிரெண்டு வருடங்கள் தான் சக்தி இருக்கிறது. அதன் பின்பு அது செயல் இழந்து விடுகிறது!! இதை எப்படி ஆராய்ந்தார்கள்!!!. இன்றைக்கு பெய்வதைப் போன்று மூன்று நாட்களாக மழை பெய்தது அன்று, தொடர்ந்து மூன்று மாதங்கள் பெய்தது. ஒருவேளை தானியங்கள் அனைத்தும் நீரில் மூழ்கி அழிந்து போனால், மீண்டும் எதை வைத்து பயிர் செய்வது? இவ்வளவு உயரமான கோபுரத்தை நீர் சூழ வாய்ப்பே இல்லை. கும்பத்தில் நிரப்பப்பட்ட தானியங்களை மீண்டும் எடுத்து விதைக்கலாமே.

ஓர் இடத்தில் எது மிக உயரமான இடத்தில் அமைந்த இடி தாங்கியோ அது தான் முதலில் "எர்த்" ஆகும். மேலும், அது எத்தனை பேரைக் காப்பாற்றும் என்பது அதன் உயரத்தைப் பொறுத்தது. அடிப்படையில் கலசங்கள் இடிதாங்கிகள். உதாரணமாக கோபுரத்தின் உயரம் ஐம்பது மீட்டர் என்றால் நூறு மீட்டர் விட்டம் அடைக்கும் பரப்பில் எத்தனை பேர் இருந்தாலும் அவர்கள் இடி தாக்காமல் காக்கப்படுவார்கள். அதாவது சுமார் 7500 சதுர மீட்டர் பரப்பில் இருக்கும் மனிதர்கள் காப்பாற்றப்படுவார்கள்!!! சில கோயில்களுக்கு நான்கு வாயில்கள் உள்ளன. அது நாலாபுறமும் 7500 சதுர மீட்டர் பரப்பளவை காத்துக்கொண்டு நிற்கிறது!!! இது ஒரு தோராயமான கணக்கு தான். இதை விட உயரமான கோபுரங்கள், இதை விட அதிகமான பணிகளைச் சத்தமில்லாமல் செய்து வருகின்றது !! நம் முன்னோர்களின் ஏற்பாடு, ஒரு பிரமிப்பு!!.

### இளங்குமரன் புகழ் பாடும் இலக்கியங்கள்

| | | |
|---|---|---|
| *சிலப்பதிகாரம்* | *திருமுருகாற்றுப்படை* | *கந்தர் அந்தாதி* |
| *திருமந்திரம்* | *திருப்புகழ்* | *கலித்தொகை* |
| *பரிபாடல்* | *கந்தர் அலங்காரம்* | *அக நானூறு* |
| *கல்லாடம்* | *கந்தர் அநுபூதி* | *புற நானூறு* |
| *குறுந்தொகை* | | |



# செந்தூல் தண்டாயுதபாணி ஆலய திருப்பணி வேலைகள்











# உலகமெலாம் பலபெயர்களில் செந்தூல் திருமுருகன்

மணிக்கவிஞர் பாதாசன்



செந்தூல் முருகன் கோவிலுக்கே
சீராய்ச் சிறப்பாய் முருகனவர்
வந்தார் பலநூ றாண்டுமுன்பு !
வந்தார்: நொந்தார் அனைவருக்கும்
தந்தார் அருளை மலையளவு :
தருகின் றாரே என்றுமவர் !
சிந்தாச் சிதறாப் பழனிமலைப்
பஞ்சா மிருதப் பயனளவு !

இந்துத் தெய்வம் பலருண்டாம்
எந்தத் தெய்வத் திற்குமென
சொந்தப் பெயராய்த் தமிழ்க்கடவுள்
சூட்டப் பெற்ற திலையுலகில் !
அந்தப் பெயரால் தூய்தமிழில்
அழைக்கப் பட்டு வருபவரெம்
கந்தன் தவிர யாரெனவே
காசினி யாரும் கேட்டிடுவார் !

ஆறு முகங்கள் மட்டு மன்றி
அகிலம் முழுதும் கோடிமுகம்
கூறப் பெற்ற திருமுருகன்
கோடி மலைகளுள் பத்துமலை
ஆற அமர்ந்து பக்தருக்கே
அருளும் பொருளும் அளிப்பதனால்
வேறெம் மலையும் நிகரில்லை
மேன்மை மலையத் தமிழருக்கே !

திருச்செந் தூரில் வாழ்முருகன்
செந்தூல் முருகன் ஆகினரே ;
பெருமலை பழனி குடிகொண்ட
பெருமான் பழனி வேலனவர்
வருவற் றாரே பத்துமலை
வாசம் புரிய மனமுவந்தே !
கருவின் சிசுவும் இப்படித்தான்
காட்டும் எதிர்நாள் வரலாற்றை !

அறுபடை வீடுகள் தமிழகத்தில்
அவருக்குண்டு !
உறுபடை வீடுகள் மூன்றுண்டாம் :
ஒன்று பத்து மலை வீடாம் ;
மறுவீ டானது தண்ணிமலை;
வருமூன் றாவது கல்லுமலை
ஒருமூன் றையும் சேர்த்திட்டால்
ஒன்பது படைவீ டவருக்காம் !

மலைகள் உள்ள இடமெல்லாம்
மால்மரு கன்தான் வசிக்குமிடம் !
கலைகள், இயற்கை வளங்களெலாம்
காணும் குன்றுகள் கந்தனுக்கு
விலையே இல்லாக் களஞ்சியமாய்
விளங்குகின்ற மேன்மையினால்
மலைகள் யாவும் தாமுலவும்
மலையகம் மலையாண் டிக்கலவோ !

செந்தூ லுக்கே அடையாளம்
செவ்வேல் முருகன் திருக்கோயில் !
செந்தூல் முருகன் கோவிலுக்கே
திரும்பும் அக்கம் பக்கமெலாம்
வந்த மைந்த சொத்தெல்லாம்
வல்லார் நாட்டுக் கோட்டையரே
தந்த - தருகிற - தரப்போகும்
தகுநிதி யவையே ; உண்மையிதே !



வளமார் செந்தூல் திருக்கோயில்
நலமாய்க் காணும் குடமுழுக்கும்
உளத்தை உருக்கும் வகையினிலும்
உலகே மெச்சத் தகும்படியும்
அளவில் சிறப்புடன் நடைபெற்றே
அழகன் முருகன் அருள்முழுதும்
மலையக மக்களும் உலகோரும்
வரைவறப் பெற்று வாழியரோ !

# மலேசியாவில் இறைவழிபாடும் நகரத்தார் கோவில்களும்

நகரத்தார்கள் மலேசியாவில் தொழில் செய்யச் சென்ற இடங்களில் எல்லாம் தண்டாயுதபாணிக்கு கோயில் அமைத்தவிபரங்களைத் தொகுத்து வெளியிட முனைந்த போது. பல கோயில்களிலும் கும்பாபிஷேகத்தின் போது வெளியிடப்பட்ட சிறப்பு மலர்களைத் தவிர வேறு ஆதாரங்கள் உடனடியாக கிடைக்காததால் இக்கோயில்களின் வரலாற்றை ஓரளவுக்குத் தான் எழுத முடிந்தது.

"அரசர்கள்/இராஜாக்களின் காலம் முடிந்த பிற்பாடு கோவில் திருப்பணி செய்தவர்களைச் சொல்லுகிறபோது முதலில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தை மனதார நினைத்து நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறோம். திரைக்கடலோடி தேடிய திரவியத்தை தேவாலயத் திருப்பணிகளுக்கு அள்ளி அள்ளி தந்து பழைய அரசர்களின் இடத்தைப் பெற்றவர்கள் நகரத்தார்கள்" என்று காஞ்சி ஆச்சார்ய சுவாமிகள் கூறியுள்ளார்கள்.

நெற்றியில் திருநீறும், சந்தனத்திலகமும் இட்டுக் காட்சி அளிக்கும் நகரத்தார்கள் முதலில் நம்புவது இறைவனைத்தான். பிள்ளையார் சுழி போடாமல் எதையும் எழுதத் தொடங்க மாட்டார்கள். இஷ்ட தெய்வத்தைத் துணை என்று முத்தாய்ப்புச் செய்து எழுதிக் கடிதங்களை முடிப்பார்கள்.

"செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை" என்ற பழ மொழிக் கேற்ப பொருளீட்ட வெளிநாடு சென்ற நகரத்தார்கள் அந்நாடுகளில் பல ஆலயங்களைக் கட்டி வழிபட்டார்கள். நகரத்தார்கள் அனைவரும் சைவராக இருந்தும் தாய்த்-தமிழகத்தில் பல சிவாலயத் திருப்பணிகள் செய்து வழிபட்டு வந்தாலும் வெளிநாடுகளில் சிவபெருமானைவிடத் தண்டாயுதபாணிக்கே கோயில் கட்டியும் விழா எடுத்தும் வழிபட்டுவருகின்றனர்.

இதற்கு முக்கிய காரணமாகக் கூறப்படுவது சிவாலயங்கள் சிவ ஆகம விதிப்படி நிறுவப்பட்டு அவ்வாறே சிவபெருமானை வழிபடவேண்டும். தண்டாயுதபாணிக்கு மடம் கட்டி அல்லது வீடுகளில் வேலை வைத்து வழிபடலாம். மன்னிக்கும் தன்மை தண்டாயுதபாணிக்கு உண்டு. தாங்கள் செய்யக்கூடிய சிறுதவறுகளையும் மறந்து மன்னித்துத் தங்களை வாழவைக்கவேண்டும் என்பதைக் கருத்திற் கொண்டு, நகரத்தார்கள் இறைவழிபாடுகளில் தண்டாயுதபாணிக்குச் சிறப்பிடம் தந்துள்ளனர்.

**பினாங்கு நகரத்தார் தண்டாயுதபாணி கோவில்**



மலேசியாவில் முத்து நகரம் எனச் சிறப்பித்துக் கூறப்பெறும் பினாங்கு மாநகரில் உள்ள தண்ணீர் மலையில் 12-12-1857ல் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமிக்கு சிறப்புமிக்க மணிமண்டபம் அமைந்த ஆலயத்தை பினாங்குவாழ் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் அமைத்தனர். மலேசியாவில் தண்டாயுதபாணிக்கு முதன்முதலில் ஆலயம் அமைத்த பெருமை பினாங்கு நகரத்தார்களையே சாரும். இக்கோவிலில் எழுந்தருளியுள்ள தண்ணீர் மலையான் என்று போற்றப்படும் ஸ்ரீ தண்டாயுதபாணிக்கு முக்கிய திருநாளாக விளங்குவது தைப்பூசத் திருநாளாகும். இத்திருவிழா நகரத்தார்களுக்கு மட்டுமின்றி அனைத்து மலேசியர்களுக்கும் சிறப்பு வாய்ந்த திருவிழாவாக விளங்குகிறது என்று கூறினால் அது மிகையாகாது.



தைப்பூசத்தன்று லட்சக்கணக்கான பக்தர்கள், இந்தியர்கள் மட்டுமின்றி சீனர்கள் மற்றும் பல்வேறு இனத்தவர்களும் விதவிதமான காவடிகளைச் சுமந்து சென்று ஆண்டவனுக்கு (பால்காவடி, அலகுகாவடி) தாங்கள் கடமைகளை நிறைவேற்றுவதைக் காண்பதற்காகவே உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து சுற்றுலாப் பயணிகள் பினாங்கு நகருக்கு வருகிறார்கள் என்றால் இத்திருவிழாவின் மகிமையை எப்படிக் கூறுவது?





இத்திருவிழாவின் முக்கியத்துவத்தை உணர்ந்த அரசாங்கமும், இப்பெருநாளை அம்மாநிலத்திற்கு விடுமுறை நாளாக அறிவித்துள்ளது என்பதை அறியும்போது பினாங்கு தண்டாயுதபாணியின் மகிமை நம்மைப் புல்லரிக்க வைக்கிறது.

**அருள்மிகு தண்டாயுதபாணி கோவில் சிங்கப்பூர்**

சிங்கப்பூரில் நகரத்தார்கள் ஆதியில் ஆற்றங்கரையில் ஒரு மரத்தடியில் வேல் வைத்தும் பூசித்து வழிபட்டு பின்னர் முருகப் பெருமாளுக்கு டாங்க் ரோட்டில் திருக்கோயில் ஒன்றை எழுப்பி 4-4-1859 ல் முதல் திருக்குட-நன்னீராட்டுவிழா நடைப்பெற்றது.



இப்போதுள்ள தெண்டாயுதபாணி கோயில் (சிவன் கோயில் உள்ளிட்டது) அமைப்பு 1983ல் உருவாக்கப்பட்ட ஒன்றாகும். இக்கோயிலின் மூலவர் வேல் வடிவிலேயே அமைந்திருக்கின்றார். முருகப் பெருமானின் வடிவம் தங்க அங்கியாக அவ்வேலின் மேல் சாத்தப்பெற்றிருக்கிறது.

தைப்பூசம், நவராத்திரி, கந்தர் சஷ்டி இங்கு நடைபெறும் முக்கிய விழாக்களாகும்.





சிங்கப்பூரில் நகரத்தார்கள் ஆரம்பகாலத்தில் கிளமென்சி அவென்யூ (Clemencean Avenue) மற்றும் கன்டோன்மெண்ட் ரோடு ஆகிய இடங்களிலும் மார்க்கெட் ஸ்டீரீட் (Market Street)டிலும் கிட்டங்கிகள் அமைத்து வாழ்ந்து வந்தார்கள். பின்னர் நகர வளர்ச்சிக்காக நகரத்தார்களின் கிட்டங்கிகள் சாங்கியில் அமைந்திருந்த தென்னந்தோப்பு நந்தவனங்கள் ஆகியவற்றை அரசாங்கம் சொந்தமாக்கிக்கொண்டு விட்டபடியால், நகரத்தார்கள் தங்கள் கிட்டங்கிகளை கோயில் அருகில் உள்ள டாங்க் ரோட்டிலேயே அமைத்துக் கொண்டார்கள்.

**கோலாலம்பூர் நகரத்தார் ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில்**

சிறப்புமிக்க கோலாலம்பூர் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் 1893-ம் ஆண்டு ஏற்பட்டது. இந்த ஆலயத்தின் முதல் கும்பாபிஷேகம் 1902ல் நடைபெற்றது.



கோலாம்பூர் முருகன் "கோலாகலமானவர் மட்டுமல்ல எந்த மூலவருக்கும் இல்லாத ஓர்





ஈர்ப்புச்சக்தியைத் தன்பால் கொண்டவர்" என்று பெரியவர் ஒருவர் கூறியுள்ளார். இக்கோயிலில் சிறப்புத் திருவிழாவாக கொண்டாடப்படுவது பங்குனி உத்திரத் திருநாளாகும். அன்றைய தினம் லெபோ அம்பாங்கிலிருந்து வெள்ளி ரதத்தில் ஜகஜ்ஜோதியாய் பவனிவந்து பல்லாயிரக் கணக்கான பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறார். இப்படி புவனிவரும் வெள்ளிரதத்தின் சிறப்பு: பினாங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர் ஆகிய மூன்று ஊர்களிலுள்ள நகர தண்டாயுதபாணி ஆலயங்களுக்காக, தமிழகத்திலிருந்து தருவிக்கப்பெற்ற மூன்று வெள்ளி ரதங்களில் ஒன்று கோலாலம்பூர் அருள்மிகு நகர தண்டாயுதபாணியின் பங்குனி உத்திரப் பெருவிழாவிற்காகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. சுமார் 80 ஆண்டுகளுக்கு முன்னர் உருவான இந்த வெள்ளி ரதம்.





தற்போது கோலாம்லபூரில் 6 கிட்டங்கிகள் உள்ளன. அவற்றில் உள்ள கிட்டங்கி உரிமையாளர்கள் காப்பாளர்களாக இருந்து ஆண்டுக்கு ஒருவர் தலைவராகவும், மற்றொருவர் செயலாளராகவும் இருந்து ஆலய நிர்வாகங்களை சிறப்புற கண்காணித்து வருகின்றனர்.

**பினாங்கு டத்தோ கிராமட் சாலை சிவன்கோயில்**

பினாங்கு டத்தோ கிராமட் சாலையில் அருள்மிகு மார்கண்டேசுவரர் திருக்கோயில் அன்றைய மலேயாவில் ஏற்பட்ட முதல் சிவன்கோயில் என்று கூறப்படுகிறது. இக்கோயில் வட இந்திய சிவ பக்தரான கூர்க்கர் ஒருவரால் சுமார் 160 ஆண்டுகளிக்கு முன்பு கங்கா நதியிலிருந்து எடுக்கப்பெற்ற பாணலிங்கத்தையும் அம்பாள் கற்சிலையையும் மட்டுமே நிறுவிக் கட்டப்பெற்றதாம்.



பல ஆண்டுகளுக்கு அப்பால் மேற்கூறிய கூர்க்கரும் தனக்கு நேர்ந்த முதுமையின் காரணமாக சிவன்கோயிலை நடத்திட இயலாத நிலையில் தனக்குப்பிறகு தனது மக்கள் ஆகம முறைப்படி வழிபாடு செய்து நடத்திவர மாட்டார்கள் என்று கருதி, இக்கோயிலை சரியான முறையில் நடத்தக்கூடியவர்கள் பினாங்கு தனவைசிய நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள்தான் என அவர்முடிவு செய்தாராம். அதன்படி நகரத்தார்களில் முக்கியமானவர்களைச் சந்தித்து சிவன் கோயிலை இலவசமாக ஒப்புக்கொண்டு நாள் வழிபாடுகளைச் சிரமம் பாராமல் முறைப்படி நடத்தி வரவேண்டும் தோறும் சிவசக்தி வழிபாடு என்று கனிவுடன் கேட்டுக் கொண்டாராம்.





அவரின் அன்பான வேண்டுகோளை ஏற்று, அதைத் தாங்கள் இலவசமாக நகரத்தார் பெயருக்கு கோயிலை மாற்றிக் கிரயம் செய்து தந்தால் அக்கோயில் நிர்வாகத்தை தாராளமாக ஏற்று நடத்தச் சம்மதிக்கிறோம் என்று கூறினார்களாம். அதனை ஏற்றுக் கொண்ட கூர்க்கரும் 3-7-1871 ம் ஆண்டு முதல் பினாங்கு நாட்டுக்கோட்டை செட்டியார்களுக்குச் சொந்தமாக்கி அவர்கள் நிர்வாகத்திற்கு உட்படுத்தப்பட்டது.



இக்கோயிலின் சிறப்பு வழிபாடுகளாக, சித்திரை ஆனி மாதங்களில் நடராசர் காட்சியும், புரட்டாசியில் நவராத்திரி விழாவும் சிறப்புற நடைபெறுகின்றன .

தற்போது பினாங்கில் நகரத்தார்களுக்கு 4 கிட்டங்கிகள் இருந்து வருகின்றன. இவர்களில் கிட்டங்கி உரிமையாளர்கள் காப்பாளர்களாக இருந்து ஆண்டுக்கு ஒருவர் தலைவராகவும் மற்றொருவர் செயலாளராகவும் இருந்து ஆலய நிர்வாகத்தினைத் திறம்பட செய்து வருகின்றனர்.

**ஆலோர்ஸ்டார் தண்டாயுதபாணி கோவில்**



1903ம் ஆண்டு கடாரம் என்னும் கிட்டா மாநிலத் தலைநகரான அலோர்ஸ்டார் வந்தடைந்த நகரத்தார்கள் 1913ம் ஆண்டில் வடிவேலை நிறுவி சிறு கோயிலாக வழிபட்டு வந்தார்கள். பின்னர் 1916ம் ஆண்டு தண்டாயுதபாணிக்கு சற்று பெரிய திருக்கோயில் கட்டி முதல் திருக்குட நீராட்டுச் செய்தார்கள்.

ஆண்டுதோறும் மாசிமகத் திருநாளன்று சிறப்பு மகேசவர பூசை நடத்தி பொதுமக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத் தக்கது.

இங்குள்ள கிட்டங்கி உரிமையாளர்களில் 7 பேர்கள் மட்டும் பொறுப்பும் உரிமையும் உடைய அறங்காவர்களாகப் பணியாற்றி வருகிறார்கள்.

**ஈப்போ நகரத் தண்டாயுதபாணி கோவில்**

1900 ஆண்டுக்கு முன்பே நகரத்தார்கள் ஈப்போவில் தொழில் செய்து வந்தாலும் 1905-ம் ஆண்டுதான் லைாட் சாலையில் உள்ள நிலம் வாங்கப்பட்டு கட்டிட சிற்ப வேலைகள் செயலாக்கம் பெற்று 1908ம் ஆண்டு ஏப்ரல் மாதம் கும்பாபிஷேகம் நடைபெற்றது.



ஆண்டுதோறும் வைகாசி விசாகத் திருநாளில் முருகப் பெருமானுக்கு சிறப்பான அபிஷேகங்கள், அலங்காரங்கள், மகேஸ்வரபூசை முதலானவை நடைபெற்று சுவாமியும் அழகிய தேரில் நகர்வலம் வருவது வழக்கம். அன்றுதினம் பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு அன்னதானமும் வழங்கப்பெறும்.

ஈப்போவில் தற்சமயம் உள்ள 8 கிட்டங்கிக்காரர்களும் ஆண்டுக்கு ஒருவராக ஒவ்வொரு ஆண்டும் காரியக்காரர்களாக இருந்து பணியாற்றி வருகிறார்கள்.

**கிள்ளான் ஸ்ரீ நகரத் தண்டாயுதபாணி கோவில்**



கிள்ளான் ஸ்ரீ நகரத் தண்டாயுதபாணி கோவில் (மாரியம்மன் கோவில்) நூறு ஆண்டுகளுக்கு முன்பே வழிபாடு செய்து வந்த கோயில். சிலாங்கூர் அரசால் கோவிலுக்கு என்று நிலம் ஒதுக்கப்பட்ட பின், கோவில் விரிவுபடுத்த சுற்றியுள்ள நிலங்களை நகரத்தார்கள் மகமை வசூல் பணத்திலிருந்து சுமார் எண்பது ஆண்டுகளுக்கு முன் வாங்கினார்கள்.

திருக்கார்த்திகை இக்கோவிலின் பெருவிழாவாகும். அன்றைய தினம் நடைபெறும் சிறப்பு அபிஷேகம், மகேஸ்வர பூசையுடன் கிள்ளான் நகரைச் சுற்றி இரதத்தில் ஸ்ரீ தண்டாயுதபாணி ஊர்வலமாக கடந்த 85 ஆண்டுகளுக்கும் மேலாக வந்து எல்லோரையும் காத்து வருகிறார்.

**சிகாமட் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்**



சிகாமட் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில் நகரத்தார்களால் சிகாமட், ஜாலான் மூவார்சாலையில் ஆற்றங்கரையில் நிர்மாணிக்கப்பெற்று 8-9-1919 தேதி முதல் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

ஒவ்வொரு ஆண்டும் சித்ரா பௌர்ணமி முக்கிய திருவிழாவாக கொண்டாடப்பட்டு வருகிறது. ஆற்றுப்பெருக்கில் ஆண்டுதோறும் சேதம் அடைந்ததால் ஆற்றங்கரையில் இருந்த ஸ்ரீ அனுகூல






விநாயகர், ஸ்ரீ சிங்கார வடிவேலருக்கு, 19, ஜாலான் அசன் என்ற முகவரியில் புதிய திருக்கோயில் நிர்மாணிக்கப்பட்டு 2-2-1979ம் தேதி திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

**சிரம்பான் செல்வவிநாயகர் கோவில்**






சிரம்பான் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களால் பராமரிக்கப்பட்டுவரும் ஆலயம் அருள்மிகு செல்வ விநாயகர் திருக்கோயில்.

இக்கோயிலின் ஆண்டுத்திருவிழாவாக பல்லாண்டுகளாக கொண்டாடப்பட்டு வருவது ஆவணி மாதத்தில் வரும் விநாயகர் சதுர்த்தி விழா வாகும். அன்றைய தினம் விநாயகருக்கு விசேட பூசைகள் நடத்தப்படுவதுடன் இறையன்பர்களுக்கு முறையாகப் பந்திவைத்து அன்னதானம் வழங்கப்பெறும். விநாயகரையும், வேல்முருகனையும் அழகிய இரதத்தில் எழுந்தருளச் செய்து ஊர்வலமாக வந்து மக்களுக்கு அருள்பாலிக்கச் செய்வார்கள்.

**பத்து பஹாட் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்**

பத்து பஹாட் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களால் 20-11-1925ல் நிறுவப்பெற்றது.



ஆண்டுதோறும் வைகாசி விசாகம் முக்கிய திருவிழாவாக கொண்டாடப் பெற்று வருகிறது. அன்றைய தினம் தண்டாயுதபாணிக்கு சிறப்பு பூசைகள், வழிபாடுகள் நடத்தப்படுவதுடன் அன்னதானமும் வழங்கப்படுவது இக்கோயிலின் சிறப்பாகும்.

**பேராக் தெலுக்இந்தான் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்**



வைரவளைகுடா நகர் என்று வர்ணிக்கப்படும் டெலுக் ஆன்சன் (இந்நாளில் டெலுக் இந்தான்) நகரில் எழுந்தருளி அனைவரையும் இரட்சிக்கும் பேராக் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமியை சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் வேலாக வைத்து வணங்கி வந்துள்ளார்கள். பிறகு படிப்படியாக நகரத்தார்கள் செட்டிநாட்டிலிருந்து வந்த (காரைக்குடி / தேவகோட்டை) கொத்தனார்களையும், சிற்பிகளையும் கொண்டு எம்பெருமானுக்கு இந்த அழகான கோயிலைக்கட்டி 23-6-1926 தேதி முதல் திருக்குட நீராட்டுச் செய்தார்கள்.

மலேசிய பழநி ஆண்டவர் என்று எல்லோராலும் வணங்கப்படுவர் பேராக் ஸ்ரீ தண்டாயுதபாணிதான்.



இக்கோயிலில் நடைபெறும் திருவிழாக்களில் மிகவும் சிறப்புவாய்ந்தது சித்திரா பௌர்ணமித் திருவிழாவாகும். அன்று மூலவருக்கு விசேஷ பூஜைகளும் மகேஸ்வர பூஜையும் நடைபெற்று பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

நகரத்தார்கள் மட்டுமின்றி தெலுக் இந்தான் சுற்றுவட்டாரத்திலுள்ள அனைத்து இந்தியர்களும் இந்த சித்திராபௌர்ணமித் திருவிழாவை தங்கள் ஊரில் நடைபெறும் திருவிழாவாக கருதி மிகத்திரளாகக் கலந்து கொள்வதோடு மிக அதிகமான பால்காவடிகளும் அலகுக் காவடிகளும் செலுத்தப்படுவது மிகவும் சிறப்பானதாகும்.

இக்கோயிலில் டெலுக் இந்தான் ஊர் தவிர கம்பார், தாப்பா, சித்தியவான், லூமுட், பீடோர் ஆகிய ஊர் நகரத்தார்களும் சேர்ந்து மகமை எழுதி வருவது குறிப்பிடத்தக்கது.

எனிறும் டெலுக் இந்தானிலுள்ள மூன்று கிட்டங்கிகளைச்-சேர்ந்த நகரத்தார்களே காரியக்காரர்களாக இருந்து ஆண்டுக்கு ஒருவராக கோயில் காரியங்களைக் கவனித்து வருகிறார்கள்.

**மலாக்கா அருள்மிகு சன்னியாசி மலைத் திருமுருகன் கோயில்**





ஏறக்குறைய 120 ஆண்டுகளுக்கு முன்பு இந்தியாவிலிருந்து ஒரு சாமியார் சன்னியாசி மலைக்கு வந்து சிறுகுடிசைகட்டி அருகில் ஒரு சிவலிங்க உருவத்தை வைத்து வழிபட்டு வந்தார். அந்தச் சாமியாருக்கு வயதாகி விட்டதால் அவரது சிவலிங்க வழிபாட்டுப் பொறுப்பை மிக நம்பிக்கையுடைய மலாக்கா நாட்டுக் கோட்டைச் செட்டியார்களிடையே ஒப்படைத்துவிட்டு அதே இடத்தில் சமாதியானார்.

இவ்வாறு சிவலிங்க வழிபாட்டை ஏற்றுக்கொண்ட நகரத்தார்கள் சிறிது காலம் சென்றபின் அதனை முருகக் கடவுள் வழிபாடாக மாற்றி அங்கு முருகப் பெருமான் சிலையை நிறுவி ஆலயத்தைப் பெரிதாகக் கட்டி சிறப்பு வழிபாடு செய்து வருகிறார்கள்.

இக்கோயில் நடைபெறும் திருவிழாக்களில் சிறப்பு மிக்கது மாசி மகத்திருவிழாவாகும்.

**பொய்யாத விநாயகர் ஆலயம், மலாக்கா**

இந்த ஆலயம் உண்மையிலேயே மலாக்கா செட்டி சமூகத்தைச் சார்ந்தது. அவர்களால் அந்த ஆலயத்தைச் சிறப்பாக நடத்த முடியாததால் அதன்பொறுப்பை மலாக்கா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடம் ஒப்படைத்தார்கள். ஆண்டுதோறும் மாசி மகத்துக்கு முதல் நாளன்று பொய்யாத





விநாயகர் ஆலயத்திலிருந்து வெள்ளி ரதத்தில் முருகக் கடவுளை எழுந்தருளி செய்து அன்றுமாலை சன்னியாசி மலைக்கு வந்துசேரும் மாசிமகத்தன்று சிறப்பு பூஜைகள் வழிபாடுகள் நடைபெற்று அன்னதானமும் வழங்கப்பெறும்.

மலாக்காவில் உள்ள 6 கிட்டங்கிகளைச்சேர்ந்த நகரத்தார்கள் ஆண்டுக்கு ஒருவராக காரியக்காரர்களாக இருந்து இக்கோயில்களின் நிர்வாகத்தை நடத்தி வருகிறார்கள்.

**வாலப்பூர் அருள்மிகு தண்டாயுதபாணி முத்துமாரியம்மன் கோயில்**

வாலப்பூர் பாயன் லைபாஸ் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு சொந்தமான அருள்மிகு தண்டாயுதபாணி கோயில் ஆரம்ப காலத்தில் முத்துமாரியம்மன் கோயிலாக மட்டுமே இயங்கிவந்தது. பின்னால் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் பராமரிப்புக்கு மாறிய போது நகரத்தார்கள் அதில் தண்டாயுதபாணி சிலையை நிறுவி 1903-ம் ஆண்டில் முதல் திருக்குட நீராட்டு நடத்தினார்கள்.

இக்கோயிலின் விசேஷ திருவிழாவாக நடைபெறுவது வைகாசி விசாகத் திருவிழாவாகும். அன்றுதினம் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று பொதுமக்களுக்கு அன்னதானமும் வழங்கப்பெறும்.

இக்கோயிலின் நிர்வாகத்தை வாலப்பூர் கரு.கதி. கரு. கடையைச் சேர்ந்தவர்களும், பாயன் லெப்பாஸ் மு.ராம. சுப. கடையைச் சேர்ந்தவர்களும் பராமரித்து வருகிறார்கள்.

**கூலிம் அருள்மிகு தண்டாயுதபாணி கோயில்**

கூலிம் நகரத்தார்கள் ஆரம்ப காலத்தில் சுங்குரும்பை அருள்மிகு தண்டாயுதபாணியைத்தான் வழிபட்டுவந்தார்கள். 1939ம் ஆண்டுதான் கூலிம் ஜாலான் புத்ராவில்





சீனக் கட்டுமானத் தொழிலாளர்களைக் கொண்டும், தமிழகத்திலிருந்து வரவழைக்கப்பட்ட சிற்பிகள், கொத்தனார்களைக் கொண்டும் தனி ஆலயம் கட்டத் துவங்கி 16-6-1940ம் ஆண்டு முதல் திருக்குட நீராட்டுச் செய்தார்கள்.

இக்கோயிலின் முக்கியத் திருவிழாவாகக் கொண்டாடப்படுவது கார்த்திகைத் திங்களில் வரும் திருக்கார்த்திகையாகும். அன்றுதினம் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று அனைவருக்கும் அன்னதானமும் வழக்கப்பெறும்.

இக்கோவிலின் நிர்வாகத்தை நான்கு அறங்காவலர்கள் கொண்ட அமைப்பு சிறப்புற நடத்தி வருகிறது. சிங்கப்பூர் மலேசியாவில் இரண்டாவது உலக மகாயுத்தத்துக்குமுன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் கட்டி வழிபட்டு வரும் கூலிம் தண்டாயுதபாணி கோயில் 16வது திருக்கோயிலாக கட்டப்பெற்ற சிறப்புக்குரியது.

**ஜாவி ஸ்ரீ தெண்டாயுதபாணி கோவில், பாரிட்புந்தார்**

இவ்வாலயம் சுமார் 90 ஆண்டுகளுக்கு முன்பு 1918ம் ஆண்டில் ஜாவி ஆற்றங்கரையில், நிபோங் திபால் உ.தெ.மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களால் அவர்களுடைய எஸ்டேட்டில் காளியம்மன் கோயிலாக மட்டும் கட்டப்பெற்றது. பின்னர் ஜாவி ஆற்றில் சுயம்புவாக கிடைத்த தண்டாயுதபாணி விக்கிரகத்தை இந்த ஆலயத்தில் நிறுவி மேற்படி உ.தெ.மெ. மெய்யப்பசெட்டியார், இவ்வாலயத்தை பாரப்பந்தா, நிபோங் திபால், சுங்கை பாக்காப், சுங்கை கிடோங், பாகான் சிறாய், சிலாமா நகரத்தார்களிடம் ஒப்படைத்தார்கள்.





அன்று முதல் மேற்படி ஊர் நகரத்தார்கள் இக்கோயிலின் நிர்வாகத்தை ஏற்று, சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

இக்கோயிலின் சிறப்பு திருவிழாவாகக் கொண்டாடப் படுவது சித்ரா பௌர்ணமித் திருவிழாவாகும். அன்றையதினம் நிபோங் திபால் ஊரிலிருந்து சுவாமி ரதத்தில் ஜாவிக் கோவிலுக்கு பவனி வருகிறார். பின்னர் மகேஸ்வர பூசை நடைபெற்று அன்னதானமும் வழங்கப் பெறுகிறது.

**தைப்பிங் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்**





தைப்பிங் நகரத்தார்கள் மாக்ஸ்வெல் மலை அடிவாரத்தில் சுமார் 140 ஆண்டுகளுக்கு முன் தண்ணீர்மலைக்குச் செல்லும் இடத்தில் சிறு திருக்கோயிலை அமைத்து அதில் ஞான வடிவேலை நிறுவி அருள் மிகு தண்டாயுதபாணியாக வழிபட்டு வந்தார்கள். 1906 ஆம் ஆண்டு முதல் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

இக்கோயிலில் 1928ம் ஆண்டு வரை பங்குனி உத்திரத் திருவிழாவை விசேஷத் திருவிழாவாக நடத்திவந்த நகரத்தார்கள் 1929ம் ஆண்டு தொடக்கம் ஆடி மாதத்துப் பௌர்ணமியில் ஆடிவேல் திருவிழாவாகக் கொண்டாடி-வருகிறார்கள். நகரத்தார் திருக்கோயில்களில் ஊருக்கொரு திருவிழா எனும் அடிப்படையில் அமைந்ததாகும் இம்மாற்றம்.

அன்று தினம் விஷேச பூஜைகள் நடைபெற்று பக்தர்களுக்கு அன்னதானமும் வழங்கப்படும் .



## சங்குரும்பை (புக்கிட் மெர்தாஜாம்) அருள்மிகு தண்டாயுதபாணி கோயில்



நகாத்தார்கள் வெல்லெஸ்லி மாகாணத்தில் சிறந்த நகரமான சங்குரும்பையில் அருள்மிகு தண்டாயு-தபாணிக்கு 1897ம் ஆண்டில் ஒரு ஆலயத்தை கட்டினார்கள்.

இவ்வாலயத்தில் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத் திருவிழாவை ஆகம முறைப்படி சிறப்பு நீராட்டு. வழிபாடுகளுடன் மிகவும் கோலாகலமாக நடத்துவார்கள். அவ்வமயம் மகேஸ்வரபூசையுடன் அனைவருக்கும் அன்னதானமும் வழங்கப்பெறும். அன்று இரவு அருள்மிகு தண்டாயு-தபாணியை ரதத்தில் எழுந்தருளச் செய்து நகர்வலமாக வந்து மக்களுக்கு காட்சி வழங்கச் செய்வார்கள்.



## மூவார் அருள் மிகு தண்டாயுதபாணி கோவில்

மூவார் நகரின் மத்தியில் அமைந்துள்ள நகர ஸ்ரீ தண்டாயு-தபாணி கோவில் சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பு நிறுவப்பட்டதாகும். இக்கோயிலின் முதல் திருக்குட நீராட்டு 1922 ம் ஆண்டில் நடைபெற்றது.



இக்கோயிலின் பிரதான விழாவாகிய கார்த்திகை மாதத்து திருக்கார்த்திகை அன்று முருகனுக்கு சிறப்பு நீராட்டுச்செய்து. மகேஸ்வர பூசை போன்ற சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று அனைவருக்கும் அன்னதானமும் வழங்கப்பெறும். அன்றைய தினம் இரவில் கார்த்திகை தீபம் ஏற்றி சொக்கப்பன் கொழுத்திய பின்னர் ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமி கோலாகலமாக இரத்தத்தில் எழுந்தருளி நகர்வலம் வந்து பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு காட்சியளிப்பார்.





# மலேசியாவில் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயங்கள்


செந்தூல்


அலோர் ஸ்டார்


தெலொக் ஆன்சன்


ஈப்போ



கிள்ளான்



கோவில் வீடு

# மலேசியாவில் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயங்கள்


மூவார்


பினாங்கு


சாலிக் கோவில்


சிரம்பான்


சுங்குரும்பை


தைப்பிங்


சன்னாசிமலை ஆண்டவர் – மலாக்கா



# குமரன் பேரருள் தித்திக்கும்

## சி. அன்பானந்தம், பினாங்கு

கொஞ்சும் குறமகள் வள்ளியுடன்
குஞ்சரி மகிழ வந்தமர்ந்து
நெஞ்சம் நிறைய இருப்பவனை
நித்தம் அருளைக் கொடுப்பவனை,
தஞ்சம் என வரு கின்றோர்க்குத்
தண்ணொளி சொரியும் வேலவனை,
தீன் செந்தூல் திருக்கோயில்
தன்னில் காணல் நலம் தருமே!

கும்பம் கலங்கிட அபிஷேகம்
குளிரக் குளிரக் காண்போர்க்குக்
கொம்பில் பழுத்த சுவையமுதாய்க்
குமரன் பேரருள் தித்திக்கும்!
வம்பில் துயரில் ஒதுக்காமல்
வளமும் பொருளும் மிகக்கூட்டி
உம்பர் புகழும் பெருவாழ்வில்
உயர்த்தி முருகருள் சித்திக்கும்!

அன்பும் பண்பும் வளர்ந்தோங்க
அறமும் திறமும் தழைத்தோங்க
இன்பம் எங்கும் நிறைந்தோங்க
இகத்தும் பரத்தும் அருளோங்க
நன்றை நினைத்தே நன்றுசெய
நமக்கருள் குமரன் திருவுருவை
என்றும் நிலைக்கச் செய்துவிடில்
இனிதாய் வேலருள் பெய்திடுமே!



# நகரத்தாரும் திருப்புகழும்

**டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன், ஈப்போ, மலேசியா**

ஒரு இஸ்லாமியருக்கு திருக்குரான் வேதம் என்றால், ஒரு கிருத்துவ அன்பருக்கு பைபிள் வேதம் என்றால், சைவர்களுக்குத் திருமுறை-கள் வேதம் என்றால், வைணவர்களுக்குத் திவ்யப் பிரபந்தம் வேதம் என்றால், முருக பக்தர்களுக்கு திருப்புகழ்தான் வேதம்.



முதன்முதலில் நக்கீரர் எழுதிய திருமுரு-காற்றுப்படை முருகனை நமக்கெல்லாம் ஆற்றுப் படுத்தியது. வடமொழியில் இருந்த கந்தனின் புராணத்தை, கந்தபுராணமாகத் தமிழில் கச்சியப்பர் பதிவு செய்கிறார். அவருக்கு பின்பு வந்த அருணகிரிநாதர் முருகனையே பரம்பொருளாக இறுகப்பற்றி முருக வழிபாட்டை நெறிப்படுத்தினார். அருணகிரிநாதருக்கு பின்பு வந்த அடியார்கள் எல்லோரும் அவருடைய அடிச்சுவட்டைப் பற்றியே முருக வழிபாட்டை அடுத்த நிலைக்குக் கொண்டு சென்றார்கள். அதனால் தான், முருக பக்தர்களுக்கு திருப்புகழ் வேதமாகின்றது.

**நகரத்தார் வழிபாட்டு முறையில் திருப்புகழின் தாக்கம்**

ஆதியில் இருந்தே நகரத்தார்கள் சிவ சமயத்தினர். அதே வேளையில், முருக வழிபாட்டில் ஊறித் திளைத்தவர்கள். ஆகவே இயற்கையாகவே திருப்புகழ் பாராயணம் என்பது நகரத்தார்களின் வாழ்வியலில் ஒன்றாகிவிட்டது.

நகரத்தாரின் பக்தி நெறியும், அருணகிரிநாதர் காட்டிய சமரச சன்மார்க்க நெறியும் பல இடங்களில் ஒருமித்து இருக்கின்றது.

**சைவ - வைணவ ஒருமைப்பாடு**

நகரத்தார்கள் சைவர்கள். ஆனாலும், வைணவத்தையும் போற்றுவார்கள். புரட்டாசி மாதம் வழிபாடும், இராமாயண ஏடு படித்தலும் அவர்கள் வைணவத்தைப் போற்றும் தன்மையைப் பறைசாற்றுகின்றது. இப்படிப்பட்ட சைவ-வைணவ ஒருமைப்பாட்டை அருணகிரிநாதரும் வலியுறுத்துகின்றார். அவர் கற்பு நெறி தவறாத பக்தி நெறியில் முருகனையே முழுமுதற் கடவுளாக வைத்து திருப்புகழைப் பாடினாலும், மற்ற தெய்வ வழிபாடுகளையும் பல பாடல்களில் போற்றுகின்றார். பல இடங்களில் வைணவத்தைப் பெருமைப் படுத்துகின்றார்.

பெருமைப் படுத்துகின்றார். முருகனைப் பாடும் பொழுது, ராமன் மருமகன் என்றே பாடுகின்றார். ராம காதையில் கம்பன் கூட ராமனுக்குத் தாலாட்டுப் பாடியதில்லை. ஆனால் அருணகிரிநாதர் அழகாகப் பாடுகின்றார்.

"எந்தை வருக ரகுநா யகவருக
மைந்த வருக மகனே யினிவருக
என்கண் வருக எனதா ருயிர்வருக ...... அபிராம
இங்கு வருக அரசே வருகமுலை
யுண்க வருக மலர்சூ டிடவருக
என்று பரிவி னொடுகோ சலைபுகல ...... வருமாயன்
சிந்தை மகிழு மருகா."

என்று அவர் பாடும் தாலாட்டு நம் மனதையும் கொள்ளை கொள்கின்றது. அவருடன் சேர்ந்து வைணவத்தை நாமும் போற்றுகின்றோம்.

நகரத்தாரின் வழிபாட்டு முறையும் இதுதான். முருகனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டாலும், எல்லாத் தெய்வ வடிவங்களையும் போற்றுவது நகரத்தார் மரபு. இத்துடன் குலதெய்வ வழிபாட்டையும், முன்னோர் வழிபாட்டையும் அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். இது இன்றுவரை தொடர்கின்றது.

**வேதாந்த நெறியும், சித்தாந்த நெறியும்**

வேதாந்த நெறியும், சித்தாந்த நெறியும் இந்து மதத்தின் இரண்டு கூறுகள். இவை இரண்டும் ஒன்றோடு ஒன்று இணையாத தண்டவாளங்கள் போன்றது என்றே பலர் கருதினார்கள்.

ஆனால், அருணகிரிநாதரின் திருப்புகழ் நெறியும், நகரத்தார் வழிபாட்டு நெறியும் இந்தக் கருத்திலிருந்து கொஞ்சம் மாறுபடுகின்றன.

நகரத்தார்கள் வேதாந்தம்-சித்தாந்தம் என்ற வேறுபாட்டைக் காட்டியதில்லை. சைவ சித்தாந்தத்தில் தோய்ந்திருந்த தனவணிகர்கள், வேதாந்தத்தையும் போற்றினார்கள், வளர்த்தார்கள். நம்முடைய கோவிலூர் ஆதீனம் ஒரு வேதாந்த மடம் என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது.



இதைப்போல அருணகிரிநாதரும் சைவ சித்தாந்தியாக இருந்தாலும் , வேதாந்தத்தையும் போற்றினார். முருகனை "சிவ சமயப் பொருளோனே" என்பவர். அவனே "வேத மந்திர சொரூபன்" என்றும் பாடுகின்றார். வேதாந்தமும் சித்தாந்தமும் இணையும் ஒரு புள்ளியாகவே திருப்புகழ் திகழ்கின்றது.

**தமிழை முதன்மைப்படுத்தும் தன்மை**

அடுத்து. தமிழைப் போற்றுவதிலும் திருப்புகழ் காட்டும் வழியில்தான் நகரத்தார் சமூகமும் பயணம் செய்கின்றது.




அருணகிரிநாதர் தான் பாடிய திருப்புகழெல்லாம் தமிழுக்கு மிகச் சிறப்பான ஒரு இடத்தையே கொடுத்துள்ளார். தமிழை 'முந்து தமிழ்' என்றும். முருகவேள் தந்த தமிழ் என்றும். முருகன் 'தமிழால் வைதாரையும் வாழவைக்கும் வையாபுரியான்' என்றும். பல இடங்களில் பதிவு செய்துள்ளார்.

அருணகிரிநாதர் தமிழை எந்த அளவுக்கு முன்னிலைப் படுத்தினார் என்பதற்குத் திருப்புகழில் ஒரு செய்தி உண்டு. அருளாளர்கள் பலர் முருகப் பெருமான். தன் தந்தை சிவபெருமானுக்கு பிரணவ உபதேசம் செய்ததாகக் குறிப்பிடுகின்றார்கள். ஆனால் யாரும் பிரணவத்தை எந்த மொழியில் முருகன் உபதேசித்தான்? எந்த மொழியில் முருகனும் சிவனும் பேசிக்கொண்டார்கள்? என்று சொன்னதில்லை. அருணகிரிநாதர் மட்டுமே "சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரமிரு செவிமீதி லும்பகர் செய் ...... குருநாதா" என்று சொல்லி , அவர் அந்த உபதேசத்தை தமிழ் மொழியில் செய்ததாகக் குறிப்பிடுகின்றார்.

"கொன்றை சடையற்கு ஒன்றை தெரிய கொஞ்சித் தமிழில் பகர்வோனே" என்று ஈசனுக்கு. சுவாமிநாதன் பிரணவத்தை தமிழில் கொஞ்சிக் கொஞ்சிச் சொன்னதாகக் குறிப்பிடுகின்றார்.

திருப்புகழின் அடி நாதமாக இருக்கக்கூடிய முருக பக்தி நகரத்தாரின் மரபணுக்களில் ஒன்று தொட்டு படிந்த ஒரு பண்பு.

இதன் காரணமாகவே திருப்புகழ் வழிபாடு நகரத்தாரிடையே மிக ஆழமாக வேரூன்றியது. சமீபத்தில் கூட தேவகோட்டை கந்த சஷ்டி விழாக் கழகத்தினர் இணையதளத்தின் மூலம் உலகளாவிய நிலையில் திருப்புகழ் மனனப் போட்டியை நடத்தினார்கள். இத்தகைய போட்டிகள் திருப்புகழை அடுத்த சந்ததிக்கு கொண்டு செல்லும் மிகச்சிறந்த முயற்சி. பல தமிழறிஞர்களையும். திருப்புகழ் தெரிந்த அடுத்த தலைமுறையையும் இத்தகைய போட்டிகள் உருவாக்கும் .

**சகல செல்வ யோக மிக்க பெருவாழ்வு தரும் திருப்புகழ்**

முருகப்பெருமான் ஆசை ஆசையாய் தன் அடியார் அருணகிரிநாதரிடம் கேட்டுப் பெற்ற தமிழ் பாடல் திருப்புகழ். முருகனிடம் பேச வேண்டுமா? திருப்புகழ் பாடுங்கள். அதுதான் முருகனிடம் நான் பேசும் பேச்சு. திருப்புகழைப் படிக்கக்கூடிய அடியவர் இச்சையில் எவை எவை உற்றனவோ அவை தருவித்தருளும் பெருமான் என்று முருகனைப் போற்றுவார் அருணகிரிநாதர்.

திருப்புகழை முதன்முதலில் பஜனை முறையில் பாடியவர் ஒரு நகரத்தார். சங்கீத பூஷணம் ராமநாதன் செட்டியார் என்பது அவர் பெயர். மிகச் சிறப்பாகத் திருப்புகழை பஜனை மெட்டில் பாடக் கூடியவர். ஆனால் பெரும்பாலோர் அவரை அறிந்திருக்கவில்லை. அவரை ஆதரித்து இசை விழாக்களில் வாய்ப்பு கொடுக்கவும் இல்லை. அவரிடமிருந்து திருப்புகழை எல்லோரும் பாடக்கூடிய அளவில் பஜனை முறையில் கற்றுக் கொண்டவர் திருவொற்றியூர் இன்ஜினியர் காரைக்குடி அ. சுப்பிரமணியன் அவர்கள். இன்றைக்கு அவர்கள் குடும்பம் உலகமெல்லாம் பரவி திருப்புகழை எளிய முறையில் எல்லோரும் தாளத்தோடு. ஒரு நாட்டுப்புற மெட்டில் இறைவனைப் பாடி மகிழ வழி செய்துள்ளது. அவருடைய புதல்வர் துபாய் ஆடிட்டர் சுப. மெய்யப்பன் குடும்பத்தாரும், திருமுருகன் திருப்புகழ் பாராயண குழு என்ற பெயரில் உலகில் பல்வேறு இடங்களில் திருப்புகழை இணையம் மூலமாக சொல்லித் தருகின்றார்கள். இது பாராட்டுதலுக்குரியது. தான் மட்டும் திருப்புகழைப் படிக்காமல், தன்னுடைய பிள்ளைகளும் மற்ற குடும்பத்தினரும் இதில் ஈடுபட்டு. இதை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்வதற்கு இவர்கள் செய்யும் முயற்சி காலத்தால் நிலைத்து நிற்கும். வள்ளிமலை சுவாமிகள், குருஜி ராகவன் போன்றோர் திருப்புகழை பாரம்பரிய முறைப்படி ராகத்தோடு கற்றுக் கொடுத்தார்கள். ஆனால். இது பரவலாக எல்லோரையும் சென்று சேரவில்லை. சங்கீதம் அறிந்தவர்கள் மட்டுமே பாடக்கூடிய ஒன்றாக இருந்து. ஆனால், இன்றைக்கு எளிய மெட்டில் திருப்புகழை பெரும்பாலோர் பாடத் துவங்கி உள்ளார்கள் என்றால் அதற்கு ஒரு முக்கிய காரணம் இன்ஜினியர் காரைக்குடி அ. சுப்பிரமணியன் குடும்பத்தினர்.

இன்றைக்குப் பல இடங்களில், பல விசேஷங்களில் திருப்புகழ் முற்றோதல் பாடுகின்றார்கள். அருணகிரிநாதர் விழாக்கள் பல இடங்களில் சிறப்பாக நடைபெறுகின்றன. மலேசியாவில் பல நகரங்களில் வருடந்தோறும் டிசம்பர் 25 முதல் ஜனவரி ஐந்தாம் தேதி வரை மிக விமரிசையாகப் அருணகிரிநாதர் விழா நடைபெறுகின்றது. அருணகிரிநாதர் மணிமண்டபம் அவர் அவதரித்த திருவண்ணாமலையில் கட்டப்பெற்று சிறப்பாக குடமுழுக்கும் சென்ற ஆண்டு கண்டது. சமீப காலங்களாக, வேல் வகுப்பு - வேல்மாறல் பாராயணம் மிகப்பரவலாக ஆலயங்களிலும், இல்லங்களிலும் நடந்து வருகின்றது. இவையெல்லாம் முருக பக்தியின் எழுச்சியைக் காட்டுகின்றது. திருப்புகழின் மறுமலர்ச்சியைக் காட்டுகின்றது.

அருணகிரிநாதர் காட்டிய வழியில் முருக பக்தி உலகெங்கும் ஓங்கி வளர்கின்றது.

திருப்புகழ் காட்டக்கூடிய தமிழை முதன்மைப்படுத்திய சமரச சன்மார்க்க பக்தி நெறியையே, நகரத்தார் பெருமக்களும் தம்முடைய வழிபாட்டு நெறியாகக் கொண்டிருக்கின்றனர் என்பது நிதர்சனமான ஒன்று.





# இறைவனை வழிபடும் முறைகள்

## வ. இராமனாதன், பூலாங்குறிச்சி

முருகக் கடவுளை வழிபட விரும்பும் ஒருவனுக்கு முருகன் இன்ன இன்ன இடத்தில் இந்த இந்தக் கோலத்தோடு இருப்பான். அவனை நீ கண்டு நலம் பெறல் எளிது என்று வழிகாட்டுவார் முருகப்புலவர்.

அக்காலத்தில் தமிழர்கள் முருகன் சிவபெருமான் திருமால், கண்ணன், பலதேவன் என்று தெய்வங்களை வேறுபாடின்றி வழிபட்டு வந்தனர். அக்காலத்தில் நிலத்தை, குறிஞ்சி, முல்லை, நெய்தல் மருதம், பாலை என்று பிரித்தனர் முருகன், திருமால், வருணன், இந்திரன், துர்க்கை என்னும் தெய்வங்களை வணங்கி வந்தனர். சிலைகள் வைத்திருக்கும் இடத்தை அணிசெய்து நறும்புகையையும் பூவையும் இறைவனுக்குப் படைத்தல், மணியடித்து வாத்தியங்களை முழக்குதல், கைகோத்துக் கூத்தாடுதல் போன்றவை தமிழரின் வழிபாட்டுமுறை.

"உளிபட்டால் கல்லும் கடவுள் சிலையாகலாம்
கருணை ஒளிபட்டால் மனிதனே கடவுளாகலாம்."

**முருகவிரதம்**

முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் வடிவேலனுக்குரிய விரதம் மூன்று வகை. அவை வாரவிரதம், நட்சத்திரவிரதம், திதிவிரதம் என்பன. வெள்ளிக் கிழமை தோறும் மேற்கொள்ளுவது வாரவிரதம், மாதக்கிருத்திகையில் அநுட்டிப்பது நட்சத்திரவிரதம். ஐப்பசித் திங்கள் வளர் பிறையில் வரும் சஷ்டியில் வருவது திதி விரதம். அன்றுதான் முருகப்பெருமான் சூரபத்மனை அழித்தநாள். ஒவ்வொரு மாதத்திலும் வளர்பிறைச் சஷ்டியில் உண்ணா நோன்பிருந்து ஐப்பசி மாதம் கந்த சஷ்டியின்போது ஆறு நாட்கள் உணவருந்தாதிருந்து விரதத்தை முடிப்பது திதி விரதத்தின் சிறப்பாகும்.

விரத நாட்களில் திருமுருகாற்றுப் படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், கந்தர்சஷ்டி கவசம், கந்தபுராணம் முதலியவற்றைத் தூய்மையுடன் படித்துவருதல் பெரும்பேறாகும்.

"பவப்பிணி யொழிந்திடும் மருந்துண்டு
பன்னிரு திருக்கரன் திருத்தொண்டு"





# ஆறுமுகன் அருவுருவ தத்துவம்

அரு. இராமநாதன், பெங்களூர்

ஆக்கல், அருளுதல், காத்தல், அறிவித்தல், அழித்தல், மறைத்தல் என்னும் முறையில் ஒளி வழங்குவது ஒருமுகம்.

அடியார்க்கு வேண்டிய வரம் கொடுப்பது ஒருமுகம். வையத்து வளம் சுரக்க வேள்வி காப்பது ஒருமுகம். மறைந்துகிடக்கும் நுண் பொருட்களைத் தெளிய ஞானம் வழங்குவது ஒருமுகம். தீய சக்திகளை அழிப்பது ஒருமுகம். களவு மணப் பிராட்டியாம் வள்ளியோடு நகையமர்ந்து ஆன்மாக்களை சுத்த மாயையில் ஆழ்த்தி புவன போகங்களைத் தருவது ஒருமுகம்.

முருகன் திருமேனி அருள் உரு. ஆறுமுகனின் ஆயுதங்கள் பன்னிரெண்டு வேலாயுதம் தவிரப் பதினொரு ஆயுதங்களும் பதினொறு உருத்திரர்கள் ஆணவம் கன்மம், மாயை ஆக மும்மலங்களாகிய சூரன், சிங்கன், தாருகன் ஆகியமூவரை யும் அழித்து யாவர்க்கும் நலம் புரிந்தது மூன்று சக்திகளின் உருவான வேலேயாம். சேவற்கொடி எல்லாவற்றிற்கும் மூலதத்துவமான நாததத்துவமாகும். மயில் விந்து தத்துவம். இந்திரனே மயிலாக வந்து முருகனை ஏந்தினான் என்பர். மயில் மயக்கும் தன்மையாதலால் மாயை என்றும் கூறுவர். இரு நாச்சியாரும் இரு சக்தியாவர்.





# ஆறுபடை வீடு கொண்ட அரசனே
# அடியேனைக் காக்க வா!

ஆறுமுகப் பெருமானுக்கு ஆறுபடை வீடுகளாக விளங்கி பக்தர்களுக்கு அருள் வழங்கும் தலங்கள்:

**1. திருப்பரங்குன்றம்**
**2. திருச்செந்தூர் (திருச்சீரலைவாய்)**
**3. பழநி (திருவாவினன்குடி)**
**4. சுவாமிமலை (திருவேரகம்)**
**5. குன்றுதோறாடல் (திருத்தணிகை)**
**6. பழமுதிர்ச்சோலை என்பன ஆகும்.**



**முதல் வீடு - திருப்பரங்குன்றம்**

திரு+பரம்+ குன்றம். பரம் என்றால் பரம்பொருள் ஆன சிவபெருமான்; குன்றம் என்றால் குன்று. திருப்பரங்குன்றம் லிங்க வடிவமாகக் காட்சியளிக்கும் அருட்செறிந்த மலை. இந்தத் திருப்பரங்குன்றத்தில் தங்கி சிவசக்தியை நோக்கி ஆறுமுகன் தவமிருந்தான். இத்திருத்தலம் முருகப் பெருமானுக்குரிய ஆறுபடை வீடுகளுள் முதற்படை வீடாகத் திகழ்கிறது.

**நக்கீரருக்கு முருகன் அருள்**

இந்திரன் தன் புதல்வியாகிய தேவசேனாவை முருகப் பெருமானுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பினான். அத்திருமணம் திருப்பரங்குன்றத்தில் நடந்தது.

**இரண்டாவது வீடு - திருச்செந்தூர்**



இத்திருத்தலம் முருகப்பெருமானுக்குரிய இரண்டாவது படை வீடாகும். இத்திருத்தலத்திற்கு செந்தி மாநகர் என்றும் திருச்சீரலை வாய் என்றும் பெயர்கள் உண்டு.

**சூர சம்ஹாரம்**

முருகப்பெருமான் இங்கு அம்பிகையிடம் வேல் பெற்று, சூரபத்மன் மீது போர் தொடுக்கச் சென்றார். சூரபத்மன் அப்போது முருகப் பெருமானுடைய எதிரில் மாமரமாக நின்றான்.

சூரபத்மனை முருகப்பெருமான் தன்னுடைய வேல் ஆயுதத்தால் இருகூறாகப் பிளந்தார். மனக் கருணையால் அவனை ஆட்கொண்டார்.

மாமரம் இரண்டாகப் பிளந்தது. பிளந்தவுடனேயே அதன் ஒரு பாதி மயிலாகவும் மறுபாதி சேவலாகவும் மாறியது. மயிலை வாகனமாக அமைத்துக் கொண்டார்; சேவலைக் கொடியாக ஏற்றுக் கொண்டார் முருகப் பெருமான்.

**டச்சுக்காரர்களால் கடத்தப்பட்ட முருகன்**

17ஆம் நூற்றாண்டில் மதுரை நகரில் நாயக்கர்கள் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தனர். அப்போது தமிழ் நாட்டுக்கு வந்த டச்சுக்காரர்கள், திருச்செந்தூர் ஆலயத்திற்குள் புகுந்து ஆறுமுக நயினாரின் விக்கிரகத்தைத் தங்கத்தால் ஆனது எனக் கருதி திருடிச் சென்றுவிட்டனர். ஆனால், அவ்விக்கிரகம் உண்மையில் பஞ்சலோகங்களால் ஆனது.

டச்சுக்காரர்களின் கப்பல் கடலில் சிறிது தூரம் சென்றதுமே, புயல் எழுந்தது; கடல் கொந்தளித்தது; கப்பல் தத்தளித்தது; அது கண்டு பயந்த டச்சுக்காரர்கள் முருகப்பெருமானின் விக்கிரகத்தைக் கடலில் தூக்கி எறிந்துவிட்டனர். உடனே இயற்கையின் சீற்றமும் தணிந்து விட்டது. இந்த நிகழ்ச்சி 1648 ஆம் ஆண்டு நிகழ்ந்தது என்பது வரலாறு.

**விக்கிரகம் திரும்பி ஆலயத்தை அடைதல்**

அடுத்து ஐந்து ஆண்டுகள் வரை கோவிலில் விக்கிரகமே இல்லை. அப்போது திருமலை நாயக்க மன்னரது அவையிலே காரியக்காரராகப் பணியாற்றி வந்த வடமலையப்பர் வேறு விக்கிரகம் செய்ய முயன்றார். அவரது கனவிலே ஆறுமுகன் தோன்றி, தான் கடலில் இருப்பதாகவும் கடலில் சிறிது தூரம் சென்றால் தான் இருக்கும் இடத்தைக் குறிக்க அங்கு ஓர் எலுமிச்சம் பழம் மிதக்கும் என்றும், அந்த இடத்திற்கு மேலே ஆகாயத்தில் கருடன் வட்டமிட்டுக் கொண்டிருக்கும் என்றும் அங்கே இறங்கினால், தான் மேலே எழுந்து வந்து விடுவதாகவும் கூறியருளினார்.

வடமலையப்பர் சிலருடன் புறப்பட்டுப் படகில் சென்று குறிப்பிட்ட இடத்தில் குதித்து முங்கி முழுகவே முதலில் நடராஜர் விக்கிரகம் ஒன்றும் பிறகு, ஆறுமுகனின் விக்கிரகமும் கிடைத்தன. அவற்றைக் கொணர்ந்து 1653 ஆம் ஆண்டில் மீண்டும் ஆலயத்தில் சேர்த்தனர்.



**மூன்றாவது வீடு - பழநி**

பழநி என்பது ஒரு மலையின் பெயராகும். பழநி மலையையும் மலையடிவாரத்தில் உள்ள திருவாவினன் குடிஸ்தலத்தையும் கொண்ட நகரமே பழநி என்று அழைக்கப்படுகிறது.

முருகனைப் பிரிந்த துயர் தாளாது பெற்றோர், முருகனைப் பின் தொடர்ந்து திருவாவினன் குடிக்கு வந்து 'பழம் நீ' என்று முருகனுக்குச் சூட்டிய திருப்பெயரே நாளடைவில் மருவி 'பழநி' என்று ஆகிவிட்டது.

**நான்காவது வீடு - சுவாமி மலை**

இது முருகனது நான்காவது படை வீடாகும். சுவாமிமலைக்குத் திருவேரகம் (திரு-ஏரகம்) என்ற பெயரும் உண்டு.



**தந்தைக்கு உபதேசம்**

பிரம்மாவினால் விளக்க முடியாத பிரணவத்தின் பொருளை முருகப்பெருமான் அறிந்திருந்ததால் அதனைத் தனக்கு உபதேசிக்கும்படி சிவபெருமான் கேட்கவே, முருகனும் தன் தந்தையின் மடி மீது அமர்ந்து குருமூர்த்தியாகப் பிரணவப் பொருளை சிவபிரானது செவிகளில் உபதேசித்து 'சுவாமி நாதன்' என்றும் 'குருநாதன்' என்றும் பெயர் பெற்றார்.

இத்திருப்பதியில் சுவாமியாகிய சிவபெருமானுக்கு முருகப் பெருமான் குருவாக விளங்கியதால் இப்பதி சுவாமிமலை என்றும் குருமலை என்றும் பெயர் பெற்றது.

**ஐந்தாவது வீடு - திருத்தணி (செருத்தணி)**



முருகன் தலமான திருத்தணி செருத்தணி என்றும் குறிப்பிடப்படுகிறது.

செரு - சினம்; தணி- நீங்கு தல் எனப் பொருள்படும்.

முருகப்பெருமான் கோபம் தணிந்து அமர்ந்த இடம் திருத்தணிகை மலையாகும்.

முருகப்பெருமான் தேவர்களின் துயரம் நீங்கும் பொருட்டுச் சூரபத்மனுடன் செய்த பெரும் போரும் வள்ளியம்மையை மணந்து கொள்ள வேடர்களுடன் விளையாட்டாக நிகழ்த்திய சிறு போரும் முடிந்து, தணிந்து அமர்ந்த தலம் ஆதலின் இதற்குத் தணிகை எனப் பெயரமைந்தது.

**தொன்மைச் சிறப்பு**

திருத்தணிகை முருகன் திருக்கோவில், மிகவும் தொன்மை வாய்ந்தது.

முருகனின் அடியார்களுள் தலைசிறந்தவரும் விஜயநகர அரசர்களுள் ஒருவனான பிரபுதேவராஜன் (கி.பி.450) என்னும் அரசனின் காலத்தவரும் ஆகிய அருணகிரிநாதர், 63 திருப்புகழ்ப் பாடல்களால் இத்தலத்தினைப் பெரிதும் போற்றிப் பாடியுள்ளார்.



முருகப்பெருமான், தன் கிரியா சக்தியாகிய தெய்வானையைத் திருப்பரங்குன்றத்தில் திருமணம் செய்து கொண்டாற்போல, திருத்தணிகையில் தன் இச்சாசக்தியாகிய வள்ளியம்மையைத் திருமணம் செய்து கொண்டு மகிழ்ந்து இனிது வீற்றிருந்து அருள்கின்றார். திருத்தணிகையின் சிறப்பிற்கு இதுவே சிறந்த பெருங்காரணமாகும்.

**ஆறாவது வீடு - பழமுதிர்ச்சோலை**



இப்படை வீடு ஆறாவது வீடாகும். இது அழகர் கோவில் என்றும் அழைக்கப்படுகிறது. இம்மலை திருமாலிஞ்சோலை என்றும் அழைக்கப்படுகிறது. இம்மலை திருமாலைப் போன்று இனிய தோற்றம் உடையதாக இருப்பதால் இங்கு சென்று திருமாலை வணங்க இயலாதவர்கள் இம்மலையையாவது வழிபடலாம்.

திருமுருகாற்றுப்படையில் வரும் பழமுதிர்ச் சோலை என்பதற்கு பழம் முற்றிய சோலை என்று நச்சினார்க்கினியர் உரை கூறியருள்கின்றார்.

**நூபுர கங்கை**

அருணகிரிநாதர், திருப்புகழில் வள்ளி மலையையும் பழமுதிர்ச்சோலையையும் தனித்தனியே பாடி இருக்கிறார். மேலும் பழமுதிர்ச்சோலையில் இன்றும் காணப்படுகின்ற 'நூபுர கங்கை என்னும் சிலம்பாற்றை பழமுதிர்ச்சோலைத் திருப்புகழில் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

## ஸ்ரீ முருகப் பெருமானைக் குறிக்கும் பல்வேறு தமிழ்ப் பெயர்கள்

| | | | |
|---|---|---|---|
| கந்தன் | களிற்றூர்த்தி பெருமான் | ஆவினன்பூதி | மயில்வாகனம் |
| கடம்பன் | தாரகாந்தர் | குருபரன் | சுப்ரமணியன் |
| கார்திகேயன் | வள்ளிகேள்வான் | உமைமைந்தன் | வடிவீஸ்வரன் |
| கார்முகில் வாகனன் | வள்ளிபங்கன் | ஆறுமுகப்பிரான் | மதவலி |
| வள்ளிமணாளன் | வள்ளிமணாளன் | பரஞ்சுடர் | பொருப்பொறிந்தான் |
| செந்தூரன் | மேழகூர்தி | முத்தையன் | பிரமசாத்தன் |
| செந்தில் | இளையோன் | பரன் | பாலசுப்ரமணியன் |
| செந்திலாண்டவன் | மாயோன்மருகன் | மேற்படுபண்ணவன் | சிசிவாகனர் |
| தண்டபாணி | குமாரன் | பரமாவோன்பண்ணவன் | சிவசக்தி குமாரன் |
| பழனியாண்டி | மாயோபக்குமாரன் | செவ்வேள் | வன்னிகர்ப்பன் |
| ஆறுமுகன் | மாத்ருநந்தனன் | விசாகன் | செட்டி |
| முருகு | சரவணபவன் | மஞ்ஞைவாகனம் | பழனியப்பன் |
| அழகன் | சேனாதிபதி | வேடிச்சிகாலன் | |
| வேலோன் | கந்தவேள் | வாலமுத்தையன் | |
| மாலோன் | பன்னிருகையன் | வாசவன்மருகோன் | |
| வேல்முருகன் | கந்தசுவாமி | வாகுலேயன் | |
| குமரன் | ஞானசக்திரன் | முருகேசன் | |
| குமரப் பெருமாள் | சிரவுஞ்ச பேதனார் | முருகீசன் | |
| ஸ்கந்தன் | குகன் | மயிலேறி | |

# ஆறு படை வீடு



ஸ்ரீ முருகன்
பழமுதிர்சோலை



ஸ்ரீ பழனி ஆண்டவர்
பழனி



ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி
திருச்செந்தூர்



# ஆறு படை வீடு



ஸ்ரீ சுப்பரமணியர் சுவாமி
திருத்தணி



ஸ்ரீ சுவாமிநாத சுவாமி
சுவாமிமலை



ஸ்ரீ கல்யாண சுப்ரமணிய சுவாமி
திருப்பரங்குன்றம்

# மலாக்கா மாசிமகத் திருவிழா



மலாக்கா, மலேசியாவின் பழைய நகரங்களில் ஒன்று. 1900-ஆம் ஆண்டில் மலாக்காவில் நகரத்தார்கள் முருகன் கோயில் கட்டுவதற்கு முனைந்தனர். மலாக்கா செட்டியார்கள் 1781-ல் சுட்டிய' பொய்யாத விநாயகர்"கோயிலை எடுத்து நடத்த வேண்டினர். அதற்கேற்ப ஆலயத்தைப் புதுப்பித்து மாசிமக விழாவைக் கொண்டாடி மகிழ்ந்தனர். முருகப் பெருமானின் திருவுருவத்தை மாசிமகத் திருவழாவின் முதல் நாள் சுமார் 9.6கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சங்நாசி மலைக்கு வெள்ளி இரத்தில் உலாவரச் செய்வர்.

சந்நாசி மலையில் சித்தர் எனநம்பப்படும் ஒருபக்தர் வழிபாடு செய்த சிவலிங்கத்தை அவர் வேண்டுகோளுக்கு இணங்க, அங்கே நிலம் கையகப்படுத்தி நகரத்தார் கோயில் எழுப்பி மக்கள் வழிபட்டு வருகின்றனர்.

## தண்டாயுதபாணி



வேல் கைக்கொண்டிருக்கும் வேலவன் தன் வேலை விடுத்துக் கோல் கைக்கொண்ட கோலம் தண்டாயுதபாணி கோலம் ஆகும். தண்டம் -கோல்.

கோல் ஏந்திய முருக வடிவம் பழனியிலும், செந்தூலிலும் காணப்படுகின்றது.

ஆயின் இந்நாள் பழனியிலும், செந்தூலிலும் முருகன் துறவுக்கோல நிலையில் காணப்படுவது அறிந்ததே! துறவிகளின் கையில் ஒரு கோலிருக்கும். அதுபற்றி முருகன் 'தண்டாயுதபாணி' எனவும் இளமையில் கோபித்து வந்ததால் 'பாலதண்டாயுதபாணி' எனவும் குறிக்கப்படுகின்றான்.

# விந்தை மிகு பழனி முருகன் சிலை
# வினை தீர்க்கும் பழம் – நீ யப்பா !
## திருமதி கா. ஜெயலெட்சுமி பாஸ்கரன், கோலாலம்பூர்





பழனி மலையில் மூலவராக வீற்றிருக்கும் தண்டாயுபானி சுவாமிகளின் சிலை நவபாஷாணத்தால் ஆனது. சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன் பதினெட்டு சித்தர்களில் போகர் என்ற சித்தரும், மற்றொரு சீடரான புலிப்பாணி சித்தருடன் இணைந்து கன்னிவாடியில் இருக்கும் சோமலிங்கசுவாமி ஆலயத்தில் மெய்கண்ட சித்தர் குகையில் திருமுருகனின் நவபாஷாண சிலையை உருவாக்கியது ஒரு வரலாறு. குறிப்பாக பழனியில் முருகப்பெருமான் நவபாஷாண விக்ரஹத்தை உருவாக்கிய போகர் சித்தரும் இங்கே தான் தவம் செய்தார். ஒரு முறை போகர் சித்தரின் குருநாதர், ஒரு கல்லை எடுத்துவரச்சொல்ல, போகர் சித்தர் ஒரு கல்லைப் பார்த்து "கல் நீ வா (டி)" என்று ஒரு கல்லைப் பார்த்து அழைக்க, அது உருண்டு வந்தது தான் காலப்போக்கில் அந்த இடத்தின் பெயர் கன்னிவாடி என்று பெயர் மருவப்பட்டு அழைக்கப்படுகிறது. இந்த இடம் பழனியில் இருந்து சுமார் 48 மைல் தொலைவில் உள்ளது. என்று ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்



நவம் என்றால் ஒன்பது, பாஷாணம் என்றால் விஷம், நவபாஷாணம் என்பது ஒன்பது வகையான விஷ மூலிகை சேர்த்து அரைக்கப்பட்ட பாஷாணம். இவைகளை அறைக்க பயன்படுத்திய செக்கு (உரல்) இன்னும் கன்னிவாடியில் காணலாம். நவபாஷாணங்களில் அடங்கியிருக்கும் ஒன்பது விஷமூலிகைகள், (1) சாதிலிங்கம் (2) மனோசிலை (3) காந்தம் (4) காரம் (5) கந்தகம் (6) பூரம் (7) வெள்ளை பாஷாணம் (8) கௌரி பாஷாணம் (9) தொட்டி பாஷாணம் ஆகியவை. நவபாஷாணத்தால் உருவாக்கப்படும் தெய்வ சிலை, நவக்கிரகங்களின் சக்தியைப் பெற்றுவிடுகிறது என்பது நம்பிக்கையாகும். பழனி முருகன் சிலை நவபாஷாணத்தில் ஒன்பது வகையான பொருள்கள் மட்டுமல்ல, 4000 த்திற்கும் அதிகமான மூலிகைகளால் உருவாக்கப்பட்டது.





செக்கு (உரல்)



புனித வேதிகை ஊற்று

அகத்திய முனிவரால் உருவாக்கப்பட்ட வேதிகை தீர்த்தம் என்ற புனித தீர்த்தம் கோவிலுக்கு அருகில் அமைந்துள்ளது. இது கடுமையான வயிற்று நோய்களை குணப்படுத்தும் மூலிகை குணங்கள் கொண்டதாக நம்பப்படுகிறது. வேதிகை ஊற்றின் நீர் மூன்று பகுதிகளிலும் ஊறி வருகிறது. ஒவ்வொரு பகுதி நீரும் வெவ்வேறு ருசி கொண்டது. இந்த வேதிகை ஊற்றிலிருந்து தான் போகர் சித்தர் புனித நீர் எடுத்து நவபாஷாணத்தில் கலந்து முருகனின் திருஉருவச் சிலையை உருவாக்கினார்.



வேல் வடிவில்
மெய்கண்ட சித்தர் குகை

நவபாஷாண சிலையின் சிறப்பு அம்சம், இச்சிலைக்கு வியர்வைத் துளிகள் வெளிப்படுவதுதான். விஷத்திற்கு விஷமே மருந்து என்பது போல நவபாஷாண திருமேனியிலிருந்து வியர்வை பல்வேறு நோய்களைத் தீர்க்கவல்லது. இரவில் நடைபெறும் இராக் கால பூஜையின் போது சிலை மீது சந்தனம் பூசப்படுவதுடன், சிலையின் பாதங்களில் வியர்வை சேகரிக்க பாத்திரமும் வைக்கப்படுகிறது. இந்த வியர்வைத் துளியை கௌபீனத் தீர்த்தம் என்று அழைக்கப்பட்டு, அருமருந்தாகவும் கருதப்படுகிறது. இத்தீர்த்தத்தை காலை வேலையில் பக்தர்களுக்கு அபிஷேகத்திற்கு முன்னதாக வழங்கப்படும். சித்தர்களின் நடமாட்டம் வெவ்வேறு ரூபத்தில் அங்கே இருப்பதாக நம்பப்படுகிறது.




ஸ்ரீ முத்தானந்த சித்தர், ஸ்ரீ வாலையானந்த சித்தர், ஸ்ரீ போகர் சித்தர், ஸ்ரீ மெய்கண்ட சித்தர், ஸ்ரீ குண்டலி சித்தர்





ஹரிகேசவ பருவதம் கன்னிவாடி மலை





சோமலிங்கசுவாமி திருக்கோயில்



# துதிப்போர்க்கு தூர விலகும் துன்பம் கந்தர் சஸ்டி கவசம்




### சோலை பாஸ்கரன், கோலாலம்பூர்




அழகன் என்றும் செய்யோன் என்றும் தமிழ் கடவுள் தகப்பன் சுவாமி என்று அழைக்கப்படும் ஈசனின் மைந்தனான முருகப் பெருமானுக்கு உரிய விரதம் தான் சஸ்டி விரதம். சஸ்டி என்றால் ஆறு. ஐப்பசி மாதம் அம்மாவாசைக்கு அடுத்து வரும் ஆறு நாட்கள் கந்தனை நோக்கி சஸ்டி விரதம் கடைபிடிக்கப்படும்.

இந்த விரத நாட்களில் முருகனை நினைத்து மனம் உருகி பாடும் பாடல் தான் கந்த சஸ்டி கவசம். 'சஸ்டியை நோக்கச் சரவண பவனார்' என்கிற இந்த கந்த சஸ்டி கவசம் எப்படி உருவானது? முருகப் பெருமான் யாரிடம் என்ன திருவிளையாடல் நிகழ்த்தி கந்த சஸ்டி கவசத்தை எழுத வைத்தார்? கந்த சஸ்டி கவசம் உருவான பின்னணி, வரலாறையும் அந்த பாடலின் உண்மை விளக்கத்தையும் தெரிந்துக்கொள்வோம்.



'திருவாசகத்திற்கு உருகாதார், ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்று சொல்வார்கள், அதே மாதிரி முருகனின் புகழ் பாடும் எத்தனையோ நூல்கள் இருந்தாலும், இரண்டாம் படை வீடான திருச்செந்தூரின் மீது பாடப்பட்ட இந்த கந்த சஸ்டி கவசத்தை காதார கேட்டாலே மனம் உருகி 'சஸ்டியை நோக்கச் சரவண பவனார்' என்கிற பாடலை நாமும் பாட ஆரம்பித்துவிடுவோம். அந்த அளவிற்கு இந்த கந்த சஸ்டி கவசத்திற்கு மனதை பறிகொடுக்காதவர்கள் யாரும் இல்லை.

கவசம் என்றால் நம்மை காக்கக்கூடிய ஒரு பொருள். போரிலோ யுத்தக் கலத்திலோ வீரர்கள் தாங்களின் உடலை காப்பாற்றிக்கொள்ள கவசத்தை பயன்படுத்திக்கொள்வார்கள், அதே மாதிரி தான் இந்த கந்த சஸ்டி கவசம். பக்தர்களை தீமையிலிருந்தும் தீராத கஸ்டங்களிலிருந்தும் விடுபடவைக்கும். இந்த கந்த சஸ்டி கவசத்தை எழுத வைப்பதற்காகவே, கந்தன் அவருடைய பக்தரிடம் ஒரு மிகப் பெரிய திருவிளையாடல் நிகழ்த்தி, ஆறு படை வீடு நோக்கியும் அவருக்கான கவசத்தை எழுத வைத்தார். யார் இந்த முருகப் பக்தர். அப்படி கந்த சஸ்டி கவசத்திற்கு பின் இருக்கக்கூடிய வரலாறு என்ன?

முதன் முதலில் கந்தனை நோக்கி சஸ்டி கவசம் எழுதியவர் பால தேவராய சுவாமிகள். ஆறு படை வீடுகளுக்கும் கவசத்தை இயற்றியவர் இவர்தான். மிகப்பெரிய முருகப் பக்தர், ஒவ்வொரு மூச்சிலும் முருகப் பெருமானை சுவாசித்து வந்தவர். இவருக்கே ஒரு மிகப் பெரிய சோதனையை கொடுத்திருக்கார் முருகப் பெருமான். பால தேவராய சுவாமி ஒரு சமயம் கடுமையான வயிற்றுவலியால் பாதிக்கப்பட்டார். எவ்வளவோ சிகிச்சைகள், வைத்திய முறைகள் செய்தும் வயிற்று வலி சரியாகவில்லை. வயிற்று வலிக்கு இதுதான் காரணம் என்று எந்த வைத்தியராலும் யூகித்துச் சொல்லமுடியவில்லை.





ஒரு கட்டத்தில் வாழ்க்கையை வெறுத்துப் போய், கடலில் குதித்து தற்கொலை செய்துகொள்ளலாம் என்று திருச்செந்தூருக்கு சென்றார். அங்கே அப்பொழுது கந்த சஸ்டி விழா ஆரம்பமானது. அவர் ஒரு தீவிர முருக பக்தர் என்பதால் அந்த சஸ்டி விழா முடிந்ததும் தற்கொலை செய்து கொள்ளலாம், அது வரை முருகனின் வீட்டில் சிறிது காலம் இருக்கலாம் என்று முடிவெடுத்து சஸ்டி விருதம் எடுக்கத் தொடங்கினார்.

முதல் நாள் திருச்செந்தூர் கடலில் குளித்து விட்டு, முருகனை வழிப்பட்டு, கோவில் மண்டபத்தில் அமர்ந்து கண்ணை மூடி தியானம் செய்ய ஆரம்பித்தார். அப்போது முருகனே நேரில் காட்சிகொடுத்து, அருள் புரிந்து, அவருக்கான பாடல் பாடும் திறனையும் கொடுத்திருக்கார். முருகப் பெருமானே, தன்னுடைய தரிசனத்தை கொடுத்த பரவசத்தில் பால தேவராய சுவாமிகள் **'சஸ்டியை நோக்கச் சரவண பவனார் சிஷ்டருக்கு உதவும் செங்கதிர் வேலோன்'** என்று முதல் சஸ்டி கவசத்தை எழுதி முடித்தார். அடுத்த ஐந்து நாட்களுக்கு முருகனின் மற்ற ஐந்து படை வீடுகள் திருப்பரங்குன்றம், பழனி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர்சோலை என மற்ற திருத்தலங்களுக்கான சஸ்டி கவசத்தையும் பால தேவராய சுவாமிகள் எழுதி முடித்தவுடன், அது வரை அவரை வாட்டி வதைத்த வயிற்று வலி அவரை விட்டு நீங்கியது. கந்த சஸ்டி கவசம் இயற்றுவதற்காகதான் முருகப் பெருமான் தன்னை இப்படி சோதித்திருக்கின்றார் என்று உணர்ந்து, முருகனின் திருவிளையாடலை எண்ணி மகிழ்ச்சியடைந்து ஓடோடிச் சென்று திருச்செந்தூர் சுப்பிரமணியரை வழிபட்டிருக்கிறார் பால தேவராய சுவாமிகள்.



பால தேவராய சுவாமிகள் எளிய முறையில் எழுதிய கந்த சஸ்டி கவசத்தை நம்பிக்கையுடன், நாள் தோறும் காலை மாலையில் பாடி முருகப் பெருமானை வழிபட்டு வந்தால், எல்லா தோஷங்களும் கஸ்டங்களும் நீங்குவதுடன், நாம் வேண்டிய வரத்தை முருகப் பெருமான் கொடுத்தருள்வார். ஒருவர் நாள்தோறும் சஸ்டி கவசத்தை பாராயணம் செய்து வந்தால், அவர்களை எந்த நோயும் அண்டாது. நவக்கிரகங்களும் கந்த சஸ்டி கவசம் படிப்பவர்களை கேட்டால் மகிழ்ச்சியடைந்து அவர்களுக்கு நன்மைகளை மட்டுமே கொடுப்பார்களாம். குழந்தை பாக்கியம் சீக்கிரமே கிட்டும். இப்படி பல பலன்கள் சஸ்டி கவசத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**துதிப்போர்க்கு வல்வினைபோம், துன்பம்போம்; நெஞ்சில்**
**பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்–கதித்து ஓங்கும்;**
**நிஷ்டையுங் கைகூடும்; நிமலர் அருள் கந்தர்**
**சஸ்டி கவசந் தனை.**

**அமரர் இடர் தீர அமரம் புரிந்த**
**குமரன் அடி நெஞ்சே குறி**





# கந்தனிடம் உந்தனையே சொந்தமென விட்டுவிடு!



சிவபெருமானின் அவதாரமே சுப்பிரமணியர். ஒரே பரம்பொருளின் பல்வேறு தோற்றங்களே பல பெயர்களில் தெய்வங்களாக வணங்கப் படுகின்றன.



கந்தனும் கண்ணனும் ஒருவரே. இதனை கிருஷ்ணர் பகவத்கீதையில், "சேனைத் தலைவர்களுள் நான் ஸ்கந்தன்" என்று குறிப்பிடுகிறார்.

அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்ட பல பெயர்களும், வடிவங்களும் தாங்கி கடவுள் அவ்வப்போது அவதாரம் செய்கிறார். அதில் சிவனின் உணர்விலிருந்து உதித்த ஒரு கதிரே முருகன்.

வள்ளியும் தெய்வானையும் முருகனின் இரு துணைவியர்.



அவர்கள் கிரியாசக்தியையும் (செயல்பாட்டையும்), ஞானசக்தியையும் (வாழ்க்கை இன்னது தான் என்று அறியும் அறிவு ) குறிக்கின்றனர்.

முருகன் மீது சிறிதளவு பக்தி செலுத்தினால் கூட, செய்யும் ஒவ்வொரு செயலிலும் வெற்றியைத் தருவதோடு வாழ்வில் செல்வவளமும், ஆன்மிக சுபிட்சமும் வழங்குகிறார்.




முருகனுக்கு 'சரவணபவன்' என்றும் பெயருண்டு. 'நாணல் காட்டில் உதித்தவர்' என்பது பொருள். இவரே தேவர்களின் தலைவனாகவும், தாரகாசுர சம்ஹாரனாகவும் விளங்கினார்.



முருகனின் திருவடியில் இருக்கும் பாம்பு, முருகன் அச்சமில்லாதவர், அழியாத ஞானம் கொண்டவர் என்பதன் குறியீடாகும்.

ஞானம், வைராக்கியம், பலம், புகழ், செல்வம், தெய்வீக சக்தி ஆகிய ஆறு குணங்களைக் கொண்டவர் என்பதால் முருகன் ஆறு முகங்களோடு காட்சியளிக்கிறார்.



பழநியில் முருகனை தரிசித்தால் தீராத நோய் கூட தீர்ந்து போகும். நட்சத்திரத்தில் கார்த்திகையும், திதியில் வளர்பிறை சஷ்டியும் முருக விரதத்திற்கு உகந்தவை.

நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையைப் பக்தியுடன் படிப்போருக்கு தொட்டதெல்லாம் துலங்கும். முயற்சிகளில் வெற்றி கிடைக்கும்.

அருணகிரிநாதரின் திருப்புகழ் பாடல்கள், காவடிச்சிந்து, கந்த சஷ்டிக்கவசம் ஆகிய பாடல்கள் தினமும் பாடுவதற்கு ஏற்றவை.





முருகபக்தர்கள் விசேஷமாகச் செய்யும் வழிபாடு காவடி. தோளில் ஒரு கம்பைக் கிடத்தி, அதன் இருமுனைகளிலும் கூடைகளைத் தொங்க விட்டிருப்பர். பூக்களாலும், மயிற்பீலிகளாலும் அதை அலங்காரம் செய்வர்.

பங்குனி உத்திரநாளில் முருகமந்திரமான 'ஓம் சரவணபவாய நம' என்ற மந்திரத்தை ஜெபித்து, கந்தனே கதி என அவனுக்கு நம்மைச் சொந்த மாக்கி விட்டால், கருணைக்கடலான அவன் அருளால் எல்லா நன்மைகளும் பெருகும்.



# காவடியாம் காவடி.... கந்தவேலன் காவடி

## உரை நடைக் கட்டுரை

## கரு. கார்த்திக்



செந்தால் தண்டாயுதபாணி கோவிலில் மாலை பூசை முடிந்து வழக்கம்போல் கோவில் பிரகாரம் வந்து திண்ணையில் அமர்ந்தார் கருப்பஞ்செட்டி. பள்ளிக்கூடம் முடிந்து தனது பெற்றோர்களுக்காக கோவிலில் அதே திண்ணையில் காத்திருக்க வந்தார்கள் வள்ளியம்மை, கதிரேசன். சின்னான் எனும் ஆறாம் வகுப்பு மாணவ-மணிகள்.

கோவிலிருந்து இவர்களுக்காகவே கையில் கொண்டு வந்த இனிப்பு மோதகங்களை பிள்ளைகள் கையில் கொடுத்தார் கருப்பன் செட்டி.

"ஐயா, எங்க அப்பா வர்றதுக்குள்ளே எங்களுக்கு ஒரு கதை சொல்லுங்க" என்று சின்னான் கேட்க

"என்ன கதை சொல்றது" என்று ஐயா கேட்பதற்குள்

'காவடியைப் பற்றி சொல்லுங்க" என்றாள் வள்ளியம்மை

"காவடி எப்படி யாரால் முதலில் சுமக்கப்பட்டது? என்றான் சின்னான்.

கையில் வைத்திருந்த தேங்காய் அர்ச்சனையை பக்கத்தில் வைத்து விட்டு அதில் இருந்த சிறிய பாக்குத் துண்டை வாயில் போட்டபடி

"இமயமலை அரசன் இமவான் பெற்ற பார்வதிக்கும் பரமேஸ்வரனுக்கும் திருமணம் நடந்தது. நான்முகன் பிரம்ம தேவர் நெய்விட்டு யாகம் வளர்க்க மூன்று உலக தேவர்களும் ஒருங்கே குவிந்திருந்தார்கள். அதனால் அவுக இருந்த வட பகுதி தாழ்ந்து தென் பகுதி உயர்ந்திருச்சு. தேவர்களெல்லாம் என்னடா ஈசன் திருமணத்தில் இப்படி நடக்கலாமா? அதுக்கு ஈசனே எல்லோரையும் சமாதானப்படுத்த ஒரே ஒரு குள்ளமுனி ஒருவர் போனால் மலை சரிசமமாகி விடும் என்று அகத்தியரை அனுப்பி வைத்தார்.

இடைமறித்தான் சின்னான்.

"யார் ஐயா அகத்தியர்?"



'அ' னாவிலிருந்து 'ன்' வரை தமிழுக்கு இலக்கணம் வகுத்தவர் தமிழ் முனிவர் அவரு.

"சரி சொல்லுங்க" என்றாள் வள்ளி.

"அகத்தியர் ஈசன் கட்டளைப்படி தென் பகுதி நோக்கி போனார். அது சமயம் அசுரத் தலைவன் யாரும் இல்லை சிவகிரி மலையையும் சக்தி கிரி மலையையும் கொண்டு வர இடும்பன் என்பவனை அனுப்பி இரண்டு மலைகளையும் சுமந்து வரச் சொன்னான்.

இடுப்பனும் விசுவரூபம் எடுத்து "விசுவரூபம்னா?" இது கதிரேசன்.

"வானத்தை தொடுற அளவு பெரிசாகிய உருவம்"

"வள்ளியம்மை கன்னத்தில் ஆள்காட்டி விரலை வைத்தபடி "ஆத்தாடி அம்புட்டு பெரிசா?" என்றாள்.

"அவுகளால் நினைச்சபடி நினைச்ச உருவத்தில் வர முடியும் ஆத்தா..."

"சரி சொல்லுங்க ஐயா"

"வலது புறமாகவும் இடது புறமாகவும் இரண்டு மலைகளையும் கட்டி தோள் புரதியிலே வைச்சு சுமந்து புறப்பட்டான் இதனை அகத்தியர் பார்த்தார். தடுத்தார். இதுக்கு சரியான ஆள் முருகக்கடவுள்தான் என்று முருகனை அழைக்க முருகனும் சக்தி கிரி மலையில் ஏறி அமர்ந்து கொண்டார். அதனாலே இடும்பனாலே மலையை தூக்க முடியாது இறக்கி வைத்தான். முருகனை மலையிலிருந்து இறங்கிவர எச்சரிக்கை செய்தான் இடும்பன்.

"ஐயா...ஐயா...ஒரு நிமிஷம் அதுதான் நாம சாமி கோயில சுத்தி வரும் போது கட்டியம் சொல்றாங்களா? சின்னான் குறிக்கிட்டு கேட்டான்.

"சரியா சொன்னேய்யா... அந்த சக்திகிரி மலைதான் பிற்பாடு பழனி மலையானது. பழம் வேண்டி கிடைக்காததாலே ஆண்டிக் கோலம் பூண்டு கொண்டு நின்றதாலே பழம் நீ "பழனி" என்றும் உருவானது.



"அப்புறம் இடும்பன் என்ன ஆனாரு ஐயா" வள்ளியம்மை உற்சாகமாகி விட்டாள்.

"முருகனும் மனமிறங்கி இடும்பனை மன்னித்து தன்வசப்படுத்தி, காவடி சுமந்து வருபவர்கள் உன்னை முதலில் வணங்கி பூசையிட்டு பிறகு என்னை வந்து வணங்கினால் சகல நலமும் பெறுவாகன்னு சொன்னாரு.

"முருகப் பெருமான் குறிஞ்சிக் கடவுள், அபிஷேகப் பிரியன், அதனாலேதான் பால், பன்னீர், புஷ்பம், இளநீர், சந்தனம் என இவற்றை காவடிகளாக்கி சுமந்து அந்த ஞான தண்டாயுதபாணி முருகனுக்கு அபிஷேகம் செய்யுறோம்.

"நம்மவுக எடுக்கிற காவடி என்னையா"

இரு சொல்றேன் இன்னும் மச்ச காவடி, சர்ப்ப காவடி அதாவது பாம்பை பானையில் அடைச்சு காவடியா கொண்டு போய் மலையிலே விடுறது.

"ஐய்யோ" என்று அதிர்ந்து போனாள் வள்ளியம்மை.

"ஆனா அந்த காவடிகள் யாரும் பெரும்பாலும் சுமப்பது இல்லை... அந்த விஷப் பரீட்சைய செய்யுறதும் இல்லை. நம்மவுக காவடின்னா சக்கரைக் காவடி, பால் காவடி அதுதான் பால்குடம் எடுத்து செலுத்துகிறோம்.

"பொம்பளை காவடி எடுக்கக்கூடாதா ஐயா.. நா சக்கரை காவடி எடுக்கலாமாய்யா" என்று சந்தேகத்தை வினாவினாள் வள்ளியம்மை.

"எடுக்கலாம் எடுக்க கூடாதுன்னு இல்லை. நம்ம வீடுகள்ல ஆச்சிமார்கள் பெரும்பாலும் பால்குடம்தான்... ஆம்பளை-களெல்லாம் சக்கரைக்காவடி எடுக்குறாங்க நாங்க பால்குடம் எடுக்கிறோம்னு போட்டி போட்டுள்ள இப்போ ஆச்சிமார்கள் எண்ணிக்கை பெருகிடுச்சு. அதத்தான் நம்ம பினாங்கு தண்ணிமலையில் பார்த்திருப்பீகளே..."

இடைமறித்து கதிரேசன் "ஆம் ஐயா எங்க ஆத்தா கூட வருஷா வருஷம் பால்குடம் எடுப்பாக...

ஆமா, கரும்புலே சேலை கட்டி பிள்ளையை தூக்கி வர்றாகளே அதுவும் காவடிதானா?

"ஆமா... நீ கூட கைப்பிள்ளையா இருந்தப்போ உன்னையும் அப்படி தூக்கி வந்திருப்பாக. ஐஞ்சு கரும்பு என்று சேர்த்துக்கட்டி பொதுவா.. புள்ளையை பெத்தெடுத்த தாயும் தகப்பனும் சேர்ந்து தங்களுடைய வலது தோள்ல சுமந்து கோயில் பிரகாரம் வரனும். ஆனா நம்மல்ல தொட்டில் கட்டி பிள்ளையை அதுல போட்டு ஆத்தாளும் அப்பச்சியுமாக புடிச்சிட்டு வருவாக தூக்கி கிட்டு வர்றது மத்த ஆளுக. ஆனா பினாங்கில நம்ம காவடிப் பிள்ளைகள் தூக்கி வருவாக...

"காவடி எடுக்கிறதா வேண்டிகிட்டா எத்தனை நாள் விரதம் இருக்கிறது ஐயா" சின்னான் ஆவலாய் கேட்டான்.

"ஒரு தைப்பூசத்துக்கு காவடின்னா சிலர் கார்த்திகை முதல் தேதி விரதம் ஆரம்பிப்பாக. ஒரு மண்டலம், 48 நாள் 21 நாள் 16 நாள்... இப்படி அவுக அவுக மனம்போல, தன்னை செம்மைப்படுத்திகிட்டா சரி. மனம் அது செம்மையானால் மந்திரங்களே தேவையில்லைன்னு திருமூலர்னு ஒருத்தர் சொல்லி இருக்கிறார்..

காவடிங்கிற அந்த கட்டை எதுல செய்வாக, எப்படி கட்டுறாக.. அதுக்கு என்னென்ன வேணும் ஐயா?" வள்ளியம்மை கேட்க சின்னான் குறுக்கிட்டு

"காவடி தேக்கு மரத்துல செய்தாக்க நாள்பட நிலைச்சிருக்கும், ஒரு காவடி கட்டுவதற்கு சிம்பு 9 தச்சி அல்லது 11 குச்சி அதனை மேலே ஆறாறு இஞ்ச் இடம் விட்டு சிறிய கயிறு வைச்சு கட்டி வலது புறமும் இடது புறமும் இரண்டு இரண்டு மயில் தோகைகளை கட்டனும். ஒரு செங்கல், அதை வைச்சு கட்டனும்.

"செங்கலையும் சேர்த்து கட்டனுமா?" வள்ளியின் ஆச்சரியக்கேள்வி.

"ஐய்ய.. சேர்த்து கட்டுறது இல்லை செங்கல். உயரத்துக்காக வைச்சு தோகையை கட்டினாக்க கைபிடி இருக்கும். காவடியை பிடிச்சு ஆட சௌரியமா இருக்குமுல்ல. அதுக்குத்தான்...

"ஓ.. அப்படியா சொல்லுங்க..."

"இப்போ மயில் இறகை கட்டிட்டோம் அடுத்து பன்னாங்கு. அதை காவடி மேலெ விரிச்சு சிறிய நூல் கொண்டு நாலு பக்கமும் கட்டனும்... அடுத்து வினாயகருக்கு பொங்கல் வைச்சுட்டு, குருவாக இருக்கிற சாமியாடி செட்டியார் அல்லது கோவில் பண்டாரம் இவங்கக்கிட்டே ரெண்டு செம்புகளையும் கொடுத்து அதுல சாம்பிராணி புகையை காட்டி அந்த செம்புகளில சுத்தம் செய்யப்பட்ட சக்கரையை நிரப்பி மூடி வைச்சு சின்ன காவித் துணியாலே முடிச்சுப் போட்டு மறுபடியும் புகை பிடிச்சு கொடுத்தவருகிட்டே கொடுத்து முத்திரை வாங்கிறது.

"முத்திரையின்னா" வள்ளியின் சந்தேகக் கேள்வி.

"ரப்பர்ஸ்டாம்ப் மாதிரி சீல் வைக்கிறோம்ல அதுமாதிரி ஆள் காட்டி விரலாலும் கட்டை விரலாலும் துளி விபூதியை எடுத்து தீர்த்த கிண்ணத்துல இருக்கிற அந்த தீர்த்தத்தைக் தொட்டு செம்புல கட்டி இருக்கிற அந்த துணியில வைச்சு கொடுப்பாரு. அத வாங்கி மறுபடியும் இன்னொரு காவித் துணியிலே முடிச்சுபோட்டு நம்ம ஊர் வீடுகள்ல தொங்குமே உறி - அது பெரிது. இந்த உறி சிறியது. இந்த செம்பை அதுல வைச்சு காவடி தண்டுலே வலது பக்கமும் இடது பக்கமும் நல்லா இறுக்க கட்டணும். இப்போ இந்த முத்திரைங்கிற சக்கரையை கட்டினதும் காவடி பலமாகிறது. இதனை கொண்டு போய் பத்திரமா செலுத்தணும். காவடியை செலுத்தின பிறகு, சக்கரை இருக்கிற செம்பை அவிழ்த்து பஞ்சாமிர்தம் கலக்குகிறவங்க கிட்ட கொடுத்தா அவுக அத அவுக பஞ்சாமிர்தத்துல சேர்த்துக்குவாக.

"பஞ்சாமிர்தம் முருகனுக்கு ரொம்ப பிடிச்சதுதானே ஐயா?" கதிரேசன் வாழைப் பழத்தை தின்றபடி கேட்டான்.

"ஆமா. அதுவும் பஞ்சாமிர்தம் கலக்கும்போது பேசக்கூடாது. எச்சில் தெரிக்கும் அதனாலே துண்டாலே வாயை கட்டிக் கொள்ளலாம். கை படாம் இரண்டு அடி கரும்பு துண்டுகளைக் கொண்டு பஞ்சாமிர்தம் செய்யுறது சிறந்ததா இருக்கும். கெடாமலும் இருக்கும் அப்புறம் கட்டியிருக்கும் காவடியை பிரிச்சு பக்குவமா மயில் இறகை அது அது பைகள்ல வைச்சு அடுத்த வருஷம் எடுக்கணுமுள்ள அதுக்கு பாதுகாப்பா எடுத்து வைக்கணும்."

"ஐயா... நல்ல விளக்கம் கொடுத்தீக. நம்ம நகரத்தார் காவடி மலேசியாவில எந்தந்த ஊர்கள்ல எடுக்கப்படுது" இதுவும் வள்ளியம்மைதான்.

"பினாங்குல தைப்பூசத்துக்கு காவடி எடுக்க ஆரம்பிச்ச காலத்துல அங்கே எட்டு கிட்டங்கி இருந்தது. கிட்டங்கிக்கு ஒரு காவடின்னு எட்டு காவடிகள் எடுத்தாக... பிறகு கிட்டங்கி நான்கானது. காவடியும் நான்கானது. கிட்டங்கி காவடி தவிர்த்து பிரார்த்தனைக் காவடி தொடக்கி வைச்சவுக கண்டவராயன் பட்டி இன்சூரன்ஸ் (சிங்கப்பூர்). வெங்கிடாசலம் செட்டியார்தான் இந்த கஞ்சு காவடிகளும் இப்போ இருக்கிற கோயில் (138) வீட்டுலிருந்து புறப்படலே. அதுக்கு எதிர்புறம் இப்போ இருக்கே கல்லல் தே. சுப்பையா செட்டியார் லாயர் அலுவலகம் அதுதான் அப்போதைய கோயில் வீடு. யுத்தத்திலே கிட்டங்கிகள் சிதைந்து போய் புதுப்பித்து கட்டப்பட்ட பிறகுதான் இப்போ இருக்கிற கோயில் வீடு அமஞ்சது. இப்படி நான்கும் ஒன்றுமாக இருந்தது பினாங்கில காவடி. அப்போ கிட்டங்கி காவடிப் பிள்ளையாக இருந்த வளைப்பூரைச் சேர்ந்த ஆராவயல் ராம நாச்சியப்ப செட்டியார் பிரார்த்தனை காவடி எடுக்க சேர்த்துக்கிட்டாக. 1969 தொடங்கி தொடர்ந்து எடுத்து வராக... வெங்கிடாசலம் செட்டியார் காலத்துக்கு பிறகு அந்த காவடிய கோயிலுக்கு கொடுத்துட்டாக. அன்றைக்கு இரு பிரார்த்தனைக் காவடிகளாக இருந்தன. இன்னைக்கு எண்ணிக்கை 80 தாண்டி நூற்றையும் எட்டும்னு இருக்கு. அன்றைக்கு காவடி எடுக்க ஆளுக கெஞ்சுனாக. இன்னைக்கு காவடி போதும்னு கெஞ்ச வேண்டியிருக்கு... பாருங்க அந்த தண்டாயுதபாணி கிருபையை".

"பினாங்கு தவிர்த்து வேறு எந்த ஊர்ல காவடி எடுக்கிறாக..." சின்னான் உட்கார்ந்தவன் எழுந்து நின்று கேட்டான். அவனது கையைப் பிடித்து அமரச் செய்தபடி தொடர்ந்தார்.

"நம்ம ஊர்ல முந்தி 8 கிட்டங்கி அதுல 34ம் நம்பர் கிட்டங்கி ஆ.ஊ.கூ.ஆ. கிட்டங்கியும் 79ம் நம்பர் ஆத்தங்குடியார் கிட்டங்கி இது இரண்டும் இப்போது இல்லே. எண்ணிக்கை ஆறாக குறைஞ்சி நம்ம ஊர்ல இருக்கிற பெரிய வீடுகள் மாதிரி பூட்டியே வைக்கிற நிலையாயிருச்சு.

பங்குனி உத்திரத்துக்கு மட்டுந்தான் நம்மவுக கிட்டங்கி பக்கம் வர்றாக. 30 வருஷத்துக்கு முனாலே தேவகோட்டை ஐயா நமஸ்காரம் பழனியப்ப செட்டியார் நம்ம தண்டாயு-தபாணிக்கு காவடியைத் தொடங்கி வைச்சாக. அவுக தொடர்ந்து எடுத்தாக.. அவுக இடையிலே சிலகாலம் இல்லாமல் இருந்தது. பிறகு அரண்மனை சிறுவயல் சார்ட்டெட் பேங்க் இராமனாதன் செட்டியார் தொடக்கி வச்சாக. இப்போ பத்து பதினொன்று பெருகி 20வது கூட ஆகும் போலிருக்கு. அதுபோல மலாக்காவில் பொய்யாத விநாயகர் கோவில் காவடி ஒன்று மட்டும் சன்னாசிமலைக்கு எடுத்து செலுத்துவாக. கோயில் பண்டாரம் சுமந்து வருவாரு. இடையிடையே நம்ம நகரத்தாரர்கள் வாங்கி ஆடுவாக.. இப்போ அங்கேயும் ஆண்டு தோறும் காவடி எண்ணிக்கை பெருகி வருது. பினாங்கில முதல் நாள் காலையில் திருவுளச்சீட்டுப் போட்டு காவடிகட்டி மதியம் பொங்கல் வைச்சு இரவு பூசை நடத்தி, மறுநாள் காலையில் பண்டாரம் காவடிய தூக்கி தருவாரு... அத வலது தோள்ல வாங்கி ரதத்தோட நடந்து சிவன் கோவில் வந்து, சிறு நேரம் சன்னதிலே காவடியை இறக்கி வைச்சு, ஓய்வெடுத்து பிறகு ரதத்தோட தொடர்ந்து சாயுங்காலமா தண்ணிமலைக்கோயில் அடைவாக... அங்கே கோயில் பிரகாரம் வந்து இடும்பய்யாவ வலம் வந்து மயிலடிக்கிட்டே வந்துதீபம்



வருவாரு. இடையிடையே நம்ம நகரத்தாரர்கள் வாங்கி ஆடுவாக.. இப்போ அங்கேயும் ஆண்டு தோறும் காவடி எண்ணிக்கை பெருகி வருது. பினாங்கில முதல் நாள் காலையில் திருவுளச்சீட்டுப் போட்டு காவடிகட்டி மதியம் பொங்கல் வைச்சு இரவு பூசை நடத்தி, மறுநாள் காலையில் பண்டாரம் காவடிய தூக்கி தருவாரு... அத வலது தோள்ல வாங்கி ரதத்தோட நடந்து சிவன் கோவில் வந்து, சிறு நேரம் சன்னதிலே காவடியை இறக்கி வைச்சு, ஓய்வெடுத்து பிறகு ரதத்தோட தொடர்ந்து சாயுங்காலமா தண்ணிமலைக்கோயில் அடைவாக... அங்கே கோயில் பிரகாரம் வந்து இடும்பய்யாவ வலம் வந்து மயிலடிக்கிட்டே வந்துதீபம் பார்த்து காவடிக்குன்னு இருக்கிற அறையிலே இறக்கி, விளக்கு ஏற்றி வைச்சு காவடிப் பிள்ளைக ஓய்வு எடுப்பாக. மூன்றாவது நாள் பூசம் அன்னைக்கு கோயில் வேலைகல காவடி பிள்ளைகள் பார்ப்பாக. நான்காம் நாள் காலை ராகு காலம் தவிர்த்து பொங்கல் வைத்து காவடிய எடுத்துக்கிட்டு வெளியே முச்சந்தியில் உள்ள முனியய்யா கோவில் வந்து தீபம் பார்த்து, நம்ம கோயிலுக்கு வந்து பெரிய பிரகாரம் வந்து இடும்பனை வலம் வந்து மயிலடியிலே நின்று கட்டியம் சொல்லி, உட்பிரகாரம் வந்து காவடியை செலுத்துகிறது. பண்டாரம் அதனை வாங்கி வைச்சு கொடுப்பாரு. அப்புறம் பிரிச்சு சக்கரையை கொடுக்கிறது. காவடி அறையிலே கொண்டு போய் வச்சதும் நாலு கால பூசையும் காவடிக்கும் உண்டு. ஆனா நம்ம ஊர்ல ரன்னிங்



(Running) திருவிழாதான். முதல் நாள் கட்டுற காவடி மறுநாள் காலையிலே சுவாமி போய் சேர்ந்ததும் அபிஷேகத்துக்குள்ள செலுத்திடுறோம்.

மலாக்காவில் முதல் நாள், காவடிகளுக்கு பள்ளையம் போடப்பட்டு பூசை நடத்துவாக. மறுநாள் பிள்ளையார் கோயிலிருந்து புறப்பட்டு ஒரே ஓட்டமும் நடையுமாக மதியம் சன்னாசிமலையை அடைஞ்சு, இரவு வினாயகருக்கு பொங்கல் வைத்து, மறுநாள் அதாவது மூன்றாவது நாள் மகம் அன்று மறுபடியும் பள்ளையம் போடப்பட்டு பூசை முடிந்து காவடி கோயில் பிரகாரம் வந்து செலுத்துவாக. இதுபோல சில வருஷங்களுக்கு முன் ஜாவியிலகூட சித்திரா பௌர்ணமிக்கு காவடி எடுத்தாக நம்ம பிள்ளைகள். நம் நாடு தவிர்த்து ஆயிரக்கணக்கிலே காவடி பழனிக்கும் சிங்கப்பூருக்கும் எடுக்கிறாக..

"ஐயா, எனக்கும் நீங்க சொன்னதும் காவடி எடுக்கணும்னு ஆசை இருக்கு... ஆவலாய் கதிரேசன் கேட்க...

"ஆசைக்காக காவடி எடுக்கப்படாது. ஆண்டவன்கிட்டே ஒரு வேண்டுதல் வைச்சு, அது நிறைவேறியதும் நல்லபடியா காணிக்கையைச் செலுத்தணும். நல்லா படிக்கணும், பரீட்சையில் பாஸ் பண்ணனும்னு வேண்டிக்க... பணம் காசு நல்லா வரணுமுன்னு வேண்டிக்க தருவான் முருகன் கொண்டாடு கொண்டாடு தண்டாயுதத்தானை, குறையாத செல்வம் மிகுமே..." என்று ஐயா சொல்லி முடிக்க மூவரின் தந்தைமார்களும் தங்களது பிள்ளைகளை அழைத்து போக வந்தவர்களாக

"என்ன ஐயாவை தொந்தரவு செய்யுறீங்களா" என்றார் கதிரேசனின் தந்தை வள்ளியப்பன்.

"நல்ல வேளையா போச்சு. இவர்களால் எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைச்சது காவடியைப் பற்றி சொன்னேன் எல்லாம் முருகன் அருள்தான் சரி போயிட்டு வாங்க நானும் கிட்டங்கிக்கு புறப்படுறேன்" என்றபடி பக்கத்தில் இருந்த தனது கறுப்புக் கொடையை எடுத்துக் கொண்டு சுவாமிய பார்த்து ஒரு கும்பிடு போட்டபடி புறப்பட்டார் கருப்பஞ்செட்டி.

"வீடு நமக்குண்டு அறுபடை வீடு
வேதம் நமக்குண்டு முருகனின் பாதம்
விருந்து நமக்குண்டு கந்தனின் நாமம்
மருந்து நமக்குண்டு வைத்தியநாதம்
முத்துகுமரன் சக்திச் சரவணன்
வைத்தியநாதனைப் பற்றி
முடியுடை மன்னன் திருமுடியருகே
கொடியுடை சேவலைக் கண்டு
கொத்தும் நாகம் பொல்லாதாக
கட்டுத்தோகையும் கண்டு
பேரின்ப வாழ்வினை என்றும் கண்டிட
கோமன்னன் வாழ்கின்ற
கோலமயிலாடும் கோலாலம்பூர்
செந்தூல் தண்டாயுதத்தாணை
தினமும் பணி மனமே

வெற்றி வேல் முருகனுக்கு அரோகரா!





# மனமே முருகனின் மயில்வாகனம்

## சொ.சொ.மீ. சுந்தரம்



இலங்கையில் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த எல்லாம் வல்ல சித்தர் யோக சுவாமிகள். ஒரு சிறிய குடிசையில் வாழ்ந்து அன்பர்களின் குறைதீர்க்கும் குணக்குன்றான இந்தச் சித்தர் ஒரே நேரத்தில் பல இடங்களில் காட்சிதருவார். சென்னையில் வாழ்ந்த பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் இவருடைய பரமபக்தர். 1955ல் அ.ச.நாயாழ்ப்பாணம் சென்ற போது திடீரென்று பேச்சு வராமல் தொண்டை அடைத்துக் கொண்டுவிட்டது. மருத்துவர்களால் குணப்படுத்த முடியாத போது. யோகசுவாமிகள் ஒரு பார்வையால் அவரைப் பேச வைத்தார். கற்றறிந்த சான்றோர்கள் யோகசுவாமியை மயிலேறும் வடிவேலனா-கவே நினைத்தார்கள். ஒருமுறை முருகனுடைய மயில் வாகனத்தைச் சுட்டிக் காட்டி. சுவாமிகள் ஒரு சித்து விளையாடல் செய்தார்கள்.

யாழ்ப்பாணத்தில் கலெக்டராகப் பணிபுரிந்தவர் சிறீ காந்தா என்பவர். அவரும் அவர் மனைவியும் சுவாமிகளின் பக்தர்கள். எப்பொழுதும் ஆடி வேலுக்குக் கதிர்காமம் செல்லும் சிறீகாந்தா. ஒருமுறை போக முடியவில்லை. அவர் தம்முடைய நண்பர் அ.ச.ஞா. ஐயாவிடம் "ஐயா! இம்முறை ஆடி வேலுக்குக் கதிர்காமம் போகமுடியவில்லை. யோகசுவாமிகள் அங்கே போயிருப்பார்கள். ஆண்டு தோறும் செல்வது அவர் வழக்கம். நம்மால் முடியவில்லை. நாம் யாழ்ப்பாணத்தில் சுவாமிகள் தங்கியிருக்கும் குடிலுக்குச் சென்று அவர்கள் அமரும் பீடத்திற்கு ஒருகும்பிடு போட்டு வரலாம்" என்றார். அவரும் அவர் மனைவியும் அ.ச.ஞா. ஐயாவும் புறப்பட்டு யோகசுவாமியின் குடிலுக்குச் சென்றார்கள். அங்கே சுவாமிகள் இருக்கமாட்டார்கள் என்ற நினைப்போடு சென்ற இம்மூவருக்கும் பேரதிர்ச்சி உண்டாயிற்று. அங்கே சுவாமிகள் இருந்தார். "ஏன் மகனே! நீ ஆடி வேலுக்குக் கதிர்காமம் போகவில்லையா?" என்று கேட்டார். "அரசு ஆணையின் காரணமாக நான் யாழ்ப்பாணத்தில் தங்க நேரிட்டது" என்று கண்ணீரோடு கூறினார் சிறீகாந்தா. சுவாமிகள் "கவலை வேண்டாம் மகனே! நமக்கென்ன வாகனமா இருக்கிறது? அந்த மடையனுக்குத் தான் மயில் வாகனம் இருக்கிறது. வேண்டுமானால் அவன்தான் நம்மிடம் வரவேண்டும். நாமெங்கே போவது?" என்று கூறிச் சிரித்துக்கொண்டே முருகன் புகழைப் பாடத்தொடங்கிவிட்டார்கள். சற்று நேரம் கழித்து இவர்கள் மூவரும் சுவாமிகளை வணங்கிவிட்டுத் திரும்பிவிட்டார்கள். இவரைத் தரிசித்ததால் கதிர்காமத்தில் மயிலேறும் வடிவேலனைத் தரிசித்த நிம்மதி கிடைத்துவிட்டது என்று மகிழ்ந்தார்கள்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு அ.ச.ஞா. ஐயா கொழும்புக்குச் சென்றார்கள். அங்கே ஒரு வீட்டில் கதிர்கா-மத்து ஆடிவேல் விழாவைச் சினிமாப் படமாக்கி வீட்டுத்திரையில் போட்டுக் காட்டினார்கள். அதைப் பார்த்த அ.ச.ஞா. ஐயா அதிர்ச்சியடைந்தன். யாழ்ப்பாணத்தில் தன்றுடைய குடியில் காட்சிதந்த யோகசுவாமிகள் அதேநேரத்தில் கதிர்காமத்தில் ஒலிவாங்கியின் முன் பேசுவதை அந்தப் படம் காட்டியது. இது எப்படி முடியும் என்றுதெரியவில்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு மீண்டும் யோகசுவாமியிடம் வந்தவர் சுவாமி எப்படி ஒரே நேரத்தில் இரண்டு இடங்களிலும் இருந்தார் என்று கேட்கத் தொடங்கியதும் சுவாமிகள் கடகட-வென்று சிரித்து "அந்த மடையனுக்குத்தான் மயில் இருக்கிறது. நாங்கள் எப்படி அங்கே போக முடியும்? மயிலா இருக்கிறது நமக்கு?" என்றார். இது அட்டமாசித்தி என்று அ.ச.ஞா தொடங்கியதும் அவரைத் தடுத்து நிறுத்திவிட்டார் யோக சுவாமி. மடையன் என்றால் சமையல் செய்பவன். சமைக்கும் இடம் மடைப்பள்ளி. சமைத்தல் என்றால் பக்குவப் படுத்துதல். அளக்கமுடியாத பெருங்கருணையால் அருளாட்சி நடத்தி ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தும் ஆறுமுகன் சித்தர் மொழியில் மடையனாகி விட்டான். மனமே முருகனின் மயில் வாகனம் என்பதையும் அதைச் செலுத்தும் ஆற்றலுடைய சித்தர்கள் முருகனருளால் அட்டமாசித்திகளும் பெறுவார்கள் என்பதையும் யோகசுவாமிகள் சொல்லாமல் சொல்லிவிட்டார். நம்முடைய மனத்தை முருகன் இருக்கும் மயில் வாகனமாக மாற்றினால் அந்த வாகனத்தில் ஏறி எல்லாச் சித்துகளையும் செய்யும் ஆற்றல் பெறலாம். சித்தன் வாழ்வு என்று பழநிக்குப் பெயர். முருகனே எல்லாம் வல்ல சித்தன். "விரதமிருநவ கோடி சித்தர்களும் உனது சுப வீட்சணம் தனில் அடக்கம்" என்பது பழம்பாடல்.

முருகன் ஓங்கார வடிவம் உடையவன். மயிலும் ஓங்கார வடிவம்

ஓமெழுத்திலன்பு மிகவூறி
ஒவியத்திவந்தம் அருள்வாயே
என்பது திருவேரகத் திருப்புகழ்
ஆன தனி மந்த்ர ரூபநிலை கொண்டது.
ஆடு மயிலென்ப தற்யேனே
என்பது பழமுதிர்சோலைத் திருப்புகழ்.

மயில் வந்தால் முருகன் வந்ததாகப் பொருள். முருகன் அழகன் மயிலும் அழகு. இரண்டும் இணைந்தால் எவ்வளவு அழகு! யாரே அழகுக்கு அழகு செய்வார்? இறுதிக்காலத்தில் எருமை மாட்டின் மீது எமன் வருமுன்னால் அழகு மயில் மீது ஆறுமுகன் வரவேண்டாமா?

கார் மா மிசை காலன் வரின் கலபத்து
தேர்மா மிசைவந்து எதிரப் படுவாய்

என்று அனுபூதிபெற்ற அருணகிரியார் வேண்டுகிறார். இது நடக்குமா ? முருகன் வருவானா என்று ஐயப்படாதீர்கள். இதுநிச்சயம் நடக்கும். சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் தேவகோட்டையில் கண்ணப்பசெட்டியார் என்ற முருகபக்தர் வாழ்ந்து வந்தார். வீட்டிற்கு முன்னால் தண்ணீர்ப் பந்தல் வைத்து எல்லோருக்கும் மோரும் நீரும் வழங்கினார். அதனால் அந்த வீட்டுக்குத்தண்ணீர்ப் பந்தலார் வீடு என்டி பெயர் ஏற்பட்டது. தன் கடைசிக்காலத்தில் முருகனையே நினைத்தபடி படுத்திருந்தார் அவர். உறவினர்கள் சுற்றிலும் நின்றார்கள். எப்பொழுது வேண்டு மானாலும் உயிர் பிரியலாம் என்ற நிலையில் திடிரென்று கண்ணைத் திறந்த செட்டியார் ஆனந்தத்தோடு "அதோ மயில் வந்துவிட்டது முருகா! முருகா! என்றார். உடம்புக்கூட்டிலிருந்து உயிர்ப்பறவை பறந்துவிட்டது. அவருக்கு மயிலேறும் வடிவேலன் அருள்புரிந்து விட்டான்.

2017 ஆம் ஆண்டு கோலாலம்பூரில் செந்தூல் தண்டாயுதபாணி ஆலயத்தில் ஒருநிகழ்ச்சி நடந்தது. முருகன் எனக்கும் அருள்புரிந்தான். அப்பொழுது ஐப்பசிமாதம் கந்தர் சஷ்டியில் சிரம்பானில் உள்ள தண்டாயுதபாணியின் மலைக் கோயிலில் ஆறுநாட்கள் காலை 10 மணி முதல் 12 மணி வரை கந்தபுராணம் தொடர் சொற்பொழிவு செய்தேன். ஆறாம் நாள் காலையில் சிரம்பான் நகரில் சொற்பொழிவு முடிந்தது. என் இனிய நண்பர் மருத்துவர் டத்தோ கதிரேசன் அவர்கள் என்னை அழைத்து இன்று மாலை கோலாலம்பூரில் செந்தூல் தண்டாயுதபாணி சந்நிதியில் கந்தரலங்காரத்தில் கடைசிப் பத்துப் பாடல்களுக்கு விரிவுரை செய்து பேச வேண்டும் என்றார். அவரா அழைத்தார்? அவர் வடிவில் கதிர்காமக் கதிரேசன் அழைத்-தான். அவன் கொடுத்ததை அவனுக்கு முன்னால் பேசுவது ஆனந்த மல்லவா! உடனே ஒப்புக்கொண்டு அன்று மாலை செந்தூல் கோயிலுக்கு வந்துவிட்டேன். ஆறாம் நாள் விரதம் நிறைவேற்றிய பக்தர் கூட்டம் திரளாக, அமர்ந்திருந்தது. முடுகன் சந்நிதிக்கு இடப்புறத்தில் ஒரு நாற்காலியில் அமர்ந்து நான் பேசத்தொடங்கினேன். அப்பொழுது சுமார் ஆறுமணி இருக்கும். எங்கிருந்தோ ஒரு மயில் கோயிலுக்குள் நடந்துவந்தது. நான் பேசிக்கொண்டிருந்த இடத்திற்கு வந்தது என்னை வலமாகச் சுற்றிவந்து என்னுடைய இடக்காலின் கீழ் அமர்ந்துவிட்டது. பேச்சை முழுமையாகக் கேட்டது. எல்லோரும் மயிலையே பார்த்தார்கள். டாக்டர் மணி என்ற அம்மையார் இதைப் படமெடுத்துப் பத்திரிகைகளுக்கு அனுப்பிவிட்டார்கள்.

எனக்கு என்ன நடக்கிறது என்றே புரியவில்லை. மறுநாள் இந்தச் செய்தி படத்துடன் பத்திரிகைகளில் வெளிவந்தது. நான் பேச்சை முடித்ததும் மயில் நடந்துசென்று கூட்டத்தைத் தாண்டிக் கோபுரவாசல் வழியாக வெளியே சென்றுவிட்டது. இந்த நிகழ்ச்சி முருகன் திருவருளால் 25-10-2017ல் சஷ்டியன்றுநடைபெற்றது. நான் நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த அம்மையெனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே என்ற திருவாசக அனுபவத்தில் முழ்கிக் கிடந்தேன். அன்பர்களே! ஒன்றும் தெரியாத எனக்கே அருள்செய்த பெருமான் உங்களுக்கு அருள்புரிய மாட்டானா? வேலும் மயிலும் நம் முன்னே தோன்றாமல் போகுமா? சிவனுக்கும் கழுத்து நீலம். மயிலுக்கும் கருத்து நீலமல்லவா?

ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி
பாலும் தேனும் உடலுக்குறுதி
வேலும் மயிலும் உயிருக்குறுதி

என்பதை மறக்கலாமா ? "மயிலுமாடி நீயாடி வர வேணும்" என்று பக்தியோடு அழைத்தால் பன்னிருகைப் பெருமான் வராமல் இருப்பானா? "வேலுண்டு வினையில்லை. மயிலுண்டு பயமில்லை" என்பது வேத வாக்கல்லவா? நம்முடைய மனமாகிய மயில்வாகனத்தில் முருகனுக்கு இடம் போட்டுவைக்க வேண்டாமா ? வாருங்கள்!

செந்தூல் முருகன் திருவடி போற்றித்
திருப்புகழ் பாடித்திருவருள் பெறுவோம்!





# "ஆறுபடை வீட்டில் நகரத்தார் திருப்பணிகள்!"


"தமிழ்க்கடல்" "வர்ணனைச் சக்கரவர்த்தி

தேவகோட்டை இராமநாதன், நாட்டரசன் கோட்டை


முன்னுரை

**திருவளரும் நாற்றங்கால் செட்டிநாடு திருப்பணிக்குப் பிறந்தவர்கள் நகரத்தார்கள்!**
**கருவளரும் காலத்தே செட்டிப் பிள்ளை!**
**கையிரண்டைத் திருப்பணிக்கே கடவுள் செய்தான்!**
என்ற மகாகவி அர. சிங்கார வடிவேலன் அவர்களின் வாக்கிற்கிணங்க திருப்பணியில் திருப்தியுறுபவர்கள் நகரத்-தார்கள்.

அதுவும் முருகன் திருப்பணி என்றால் முன்னிற்பவர்கள் நகரத்தார்கள்.
**முருகப்பன் இல்லாத ஊரும் இல்லை ஒரு**
**முத்தையன் இல்லாத வீடும் இல்லை பழனியப்பன் இன்றி வம்சம் இல்லை எங்கள்**
**பரம்பரைக்கு அவனின்றி அம்சம் இல்லை**
என்று கண்ணதாசனின் கவிப்படி முருக பக்தர்களாகத் திகழ்பவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள்!

**நகரத்தார்களின் முருக பக்தி**

தமிழகம் மட்டுமல்லாது அயல்நாடுகளிலும் முருக வழிபாட்டை வளர்த்த பெருமை நாட்டுக் கோட்டை நகரத்தாரை-யே சாரும்! பிராமணர்கள் பூசைசெய்ய கடல் தாண்டி வர இயலாத காரணத்தால் அயல்நாடுகளுக்குச் சென்ற நகரத்தார்கள் பண்டாரங்களை வைத்துப் பூஜை செய்ய ஏற்ற தெய்வமாக பழநியாண்டவருடைய வேல் வழிபாட்டை-யே மேற்கொண்டார்கள்.

தாங்கள் எப்படி ஆச்சிமார்களை ஊரிலேயே விட்டுவிட்டு அயல் நாடுகளுக்குச் சென்று இருக்கிறோமோ, அதே போலத் தன் தலைவனாக இருக்கிற பழனியாண்டவரும் தனி ஒருவனாக இருக்க வேண்டும் என்று கருதி வேல் வழிபாட்டைத் துவக்கினார்கள் நகரத்தார்கள். தமிழகத்தில் மட்டுமல்லாது பல்வேறு முருக ஆலயங்களை அயல் நாடுகளிலும் நிறுவியவர்கள் நகரத்தார்கள்.

**"ஆறுபடை வீடுகளில் நகரத்தார் அறப்பணிகள்!"**

**1. திருப்பரங்குன்றம்**

இங்குள்ள சிவாலயம் திருப்பணிச் செல்வர்களாகிய அமராவதி புதூர் வயிநாகரம் நாகப்ப ஐயா, வேங்கடாசல ஐயா ஆகியோரால் நந்தன தை 19-ம் நாள் (30-1-1898) கும்பாபிடேகம் செய்யப் பெற்றது.

இத்தலத்தில் தைப்பூச நாளில் நகரத்தார், தெப்பத் திருவிழா நடத்துகிறார்கள். மதுரை நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மடமும் விடுதியும் தெப்பக் குளமும் இங்கு நிறுவியுள்ளனர்.





### 2. திருச்செந்தூர்



செட்டி கப்பலுக்குச் செந்திலாண்டவன் துணை. 'செந்திலாண்டவன் கோவில் கொண்டுள்ள இத்தலத்தில் நகரத்தார்கள் மாசி மாதத்தில் மகேசுவரப் பூசை நடத்தி வருகின்றனர். நகரத்தார்களுக்கு இங்கு ஒரு விடுதி இருக்கிறது.

### 3. பழனி (திருவாவினன்குடி)

பழனி தலத்துக்கும் நகரத்தார்க்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.



கிபி 1601ல் நெற்குப்பை நேமம் கோயில் குப்பா பிச்சுஞ்செட்டி குமரப்பன் என்பவரின் தோளில் மீது கலாமடம் ஆதினகர்த்தர் சர்க்கரை காவடி ஏற்றி வைக்கத் துவங்கப் பெற்ற காவடி எடுக்கும் நிகழ்வானது இன்று வரை தொடர்ந்து நடந்து வருகிறது.

"குமரப்பன் பாட!..குட்டையன் ஆட!" என்ற வண்ணம் இன்றளவும் நெற்குப்பையார்கள் அருகில் இருந்து பாட கண்டனூர் இரணியூர்க் கோவில் பெ. குட்டையன் அவர்கள் குடும்பத்து வம்சாவளிகள் அருள்ஆடுகிற காட்சி ஆறுகால் சவுக்கையில் அற்புதமாகும்.

இன்றளவும் தொடர்ந்து காவடிகள் எடுத்துவரப் பெற்று பிரார்த்தனைக் காவடிகள் தை மாதம் மகம் நட்சத்திரத்தன்று காவடிகள் செலுத்தப்பெறுகிறது.

பழநிக் கோவிலில் நள்ளிரவில் நடைபெறும் அர்த்தசாம அபிஷேகம் நகரத்தார் செலவில் நிகழ்கிறது. அப்போது பழனியாண்டவர் மலை மீது வலம் வரும் நேரத்தில் தீவட்டி பிடிக்கும் உரிமை நகரத்தார் களுக்கே இருந்து வருகிறது. இதற்கென மண்டபமும் கட்டளைகளும் ஏற்பட்டுள்ளன.

அடிவாரத்தில் நகரத்தார்க்குரிய இராக்கால மடம் இருக்கிறது. இங்கிருந்துதான் பூசைக்கு வேண்டும் பொருள்கள் யாவும் மலைக் கோவிலுக்கு அனுப்பப் பெறுகின்றன. இக்கட்டிடத்தைப் பத்து ஆண்டுகளுக்கு முன் கொப்பனாபட்டி மு. ப.மு. குடும்பத்தார் கவினுறு முறையில் புதுப்பித்திருக்கிறார்கள்.



இங்கிருந்துதான் பூசைக்கு வேண்டும் பொருள்கள் யாவும் மலைக் கோவிலுக்கு அனுப்பப் பெறுகின்றன. 5-12-1971ல் இக்கோவிலின் மகாகும்பாபிஷேகம் அஷ்டபந்தன இனிது நிறைவேறிற்று. நகரத்தார்க்குரிய நந்தவனம் ஒன்றும் பழனியில் உண்டு. ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் பழனியில் தற்போது ஒரு சத்திரத்தை உருவாக்கி நகரத்தார்களுக்கும், பிற பக்தர்களுக்கும் குறைந்த வாடகையில் தங்குவதற்கும், உணவிற்கும் ஏற்பாடு செய்துள்ளது.

**4. சுவாமி மலை (திருவேரகம்)**



திருவேரகம் என வழங்கும் இப் படைவீட்டில் மலை அடிவாரத்திலுள்ள கோவில் நகரத்தார்களால் திருப்பணி செய்யப் பெற்றது. அமெரிக்காவில் விநாயகர் கோவில் கட்டியுள்ள கானாடுகாத்தான் டாக்டர் அழகப்பன் அவர்களின் முன்னோர்களாகிய கானாடுகாத்தான் வெ.அரு. அருணாசலம் செட்டியார் மற்றும் அவர் குமாரர் வெள்ளையப்ப செட்டியார் இருவராலும் புதிதாய்த் திருப்பணி செய்யப் பெற்றுப் பிலவங்க சித்திரை 16-ம் நாள் (28-4-1907) முதற் கும்பாபிடேகமும், பிரபவ ஆனி 5-ம் நாள் (19-6-1927) இரண்டாங் கும்பாபிஷேகமும் செய்யப் பெற்றன.





**5. குன்றுதோர் ஆடல் (திருத்தணிகை)**



இந்த சென்னை நகரத்தார்கள் நூற்றைம்பது ஆண்டுகளாக, தணிகைக் குமரனிடத்தில் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள். சென்னை-பவளக்காரத் தெரு 34ஆம் எண்ணிலுள்ள தேவகோட்டையார் கோவில் வீட்டுப் பழைய தண்டாயுதபாணி கோவில், 27ஆம் எண்ணிலுள்ள காரைக்குடியார் கோவில் வீட்டுப் புதுத் தண்டாயுதபாணி கோவில் ஆகிய இரண்டு கோவிலாரும் சேர்ந்து, திருத்தணிகையில் அறக்கட்டளைகளை நிறுவியுள்ளனர்.

மலை மீதுள்ள குமரனுக்கு அபிடேகத்திற்குப் பாலும் நெய்வேத்தியத்திற்கு அரிசியும் நாள்தோறும் நகர விடு தியிலிருந்து அனுப்பப் பெறுகின்றன. ஆடிக் கார்த்திகையன்று நகரத்தார் களுக்கும் துறவிகளுக்கும் ஏழைகளுக்கும் உணவு படைக்கப் பெறுகிறது. அன்று தணிகை மலையிலிருந்து இறங்கி, குமரன் நகர விடுதிக்கு வரும்போது அப்பெருமானுக்கு, நகரத்தார் பட்டுச் சாத்தி அருச்சனை செய்கின்றனர்.

**6. அழகர் கோவில் என்னும் பழமுதிர்சோலை**



முருகன் கோவிலே பெருமாள் கோவிலாக இப்போது விளங்குகிறது. அழகர் கோவில் திருப்பணி யாளர்கள் அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தாரே ஆவர்.

சோழபுரத்தைச் சார்ந்த மாத்தூர் கோயில் உறையூர் பிரிவார் திரு அண. சுப்பையா செட்டியார் - சரோஜா ஆச்சி வெள்ளிக்கதவு, தங்கத்தேருக்கு ஒருபகுதி, இராசகோபுரம், தங்கமயில் வாகனம், சஷ்டி மண்டபம் அன்னதானக்கூடம், சுற்றுப்பிரகார மண்டபம் ஆகிய திருப்பணிகள் தனது உபயமாக செய்யப்பெற்றுள்ளன. இவர்களால் மதுரை மீனாட்சி அம்மனுக்கும் வைரம் பதித்த பல அணிகலன்கள் வழங்கப்பெற்றுள்ளன. பத்தாண்டுகளுக்குள் மேற்படி திருப்பணிகள் தனி ஒரு நபரால் செய்யப்பட்டிருப்பது மிகுந்த பாராட்டுதலுக்குரியது.





இவ்வாறு ஆறுபடை வீடுகளிலும் நகரத்தார்கள் திருப்பணியாற்றி உள்ளார்கள்.



# நகரத்தார் சென்ற இடம் எல்லாம் முருகனுக்கு ஆலயம்

சுப.சு.சு. ராமசாமி, லெபோ அம்பாங், கோலாலம்பூர்.

பல்லவர் சேர சோழ பாண்டியர்கள் விஜய நகர மன்னர்கள் போன்றவர்களுக்குப் பின்னர் கோவில் கட்டுவதில் புகழ் பெற்றவர்கள் நகரத்தார்களே ஆவர். தமிழகத்தில் மட்டும் அல்லாமல் தாம் சென்ற இடம் எல்லாம் நகரத்தார்கள் ஆலயங்கள் கட்டி திருப்பணிகள் செய்து வந்திருக்கின்றார்கள். தமிழகத்தின் சைவ சமய நெறியையும், தெய்வ வழிபாட்டு முறைகளையும், கட்டிடக் கலையையும், சிற்ப சித்திரங்களையும் அவர்கள் பரப்பி இருக்கின்றனர்.

தெற்கு மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு கொண்டுவிக்க சென்ற நகரத்தார்கள் பல நகரங்களில் முருகப் பெருமானை வழிபடுவதற்காக பல தண்டாயுதபாணி ஆலயங்களை அமைத்தனர். இந்த ஆலயங்களை சென்று பார்க்கவேண்டும் என்ற ஆர்வத்தில் நான் சில வருடங்களுக்கு முன் தெற்கு மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் நகரத்தார்கள் கட்டிய கோவில்களுக்குச் சென்று வந்தேன். அந்த வரிசையில்

1. சோ சி மின் நகரம், (செய்கோன்) வியட்நாம்.
2. மேடான், சுமத்ரா, இந்தோனேஷியா.
3. யாங்கூன், மியான்மர் (ரங்கூன், பர்மா).
4. கொழும்பு, இலங்கை.

இந்த நான்கு ஊர்களில் உள்ள நகரத்தார் கோவில்களை சென்று பார்ப்பதற்கான பாக்கியம் எனக்கு கிட்டியது. இந்த ஆலயங்களில் நான் எடுத்த புகைப்படங்களோடு விபரங்களை இந்தக்கட்டுரையில் எழுதியுள்ளேன்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு வாணிகம் நிமித்தம் சென்ற நகரத்தார்கள் கட்டிய ஆலயங்களில் மலேசியாவில் உள்ள பதினெட்டு கோவில்களும் சிங்கப்பூரில் உள்ள ஒரு தெண்டாயுதபாணி கோவிலும், ஒரு பிள்ளையார் கோவிலும் அடங்கும்.

**1. சோ சி மின் நகரம், (செய்கோன்) வியட்நாம்**

இரண்டாவது உலகப் போருக்கு முன்னர் பிரெஞ்சுக்காரரின் ஆட்சியில் இந்தோசீனா இருந்து வந்தது. இப்போர் முடிவடைந்த பிறகு இந்தோசீனா நான்கு நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. பிரிக்கப்பட்ட இப்பகுதிகளுக்குத் தெற்கு வியட்நாம், வடக்கு வியட்நாம், லாவோஸ், கம்போடியா என்ற பெயர்களோடு தனி நாடுகளாக இயங்கி வருகின்றன. வட வியட்நாம் வியட்மின் என்றும் தெற்கு வியட்நாமை வியட்நாம் என்று மட்டும் சொல்வது




செய்கோன் கோயில் சாலையில் இருந்து ஒரு தோற்றம்

வழக்கம். இந்தோசீனாவின் வளம் நிறைந்த பகுதி தெற்கு வியட்நாம். இதன் தலைநகரம் செய்கோன். ஏறத்தாழ 1860ஆம் ஆண்டுகளில் நகரத்தார்கள் செய்கோனுக்கு வந்து இங்கு தொழில் செய்து வந்தனர். 1880ஆம் ஆண்டுகளில் நகரத்தார்கள் செய்கோனில் தண்டாயுதபாணி கோவிலை கட்டினார்கள். திருவிழாக்களும் நடைபெற்றன. தைப்பூச விழாவிற்குச் சுவாமி வெள்ளி ரதத்தில் நகர்வலம் வரும். உலகப் போருக்கு பின்



தெற்கு வியட்நாம் பிரெஞ்சுக்காரரின் கையில் இருந்து அமெரிக்கர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. 1975ஆம் ஆண்டில், அமெரிக்க இராணுவம் செய்கோனை விட்டு வெளியேறியது. வெளியேறிய அன்றே வடக்கு வியட்நாம் இராணுவம் தெற்கு வியட்நாமை கைபற்றியது. அன்று, இரண்டு வியட்நாமும் ஒன்று இணைந்தன. செய்கோன் சோ சி மின் நகரம் என்று பெயர் மாற்றம் கண்டது. 1975ஆம் ஆண்டு முதல் நகரத்தார்களும் வியட்நாமில் இருந்து வெளியேறத் தொடங்கினர்.

Ton That Thiep Street, Ho Chi Minh City, Vietnam, என்று அழைக்கப்படும் இடத்தில் நகரத்தார்களின் தண்டாயுதபாணி ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. தற்சமயம் அங்கு நகரத்தார்கள் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. அன்றாடப் பூஜை அவ்வூரில் உள்ள வியட்நாமிய மற்றும்



செய்கோன் கோயில் நுழைவாயில் இருந்து ஒரு தோற்றம்

இந்துக்களால் நடத்தப்பட்டு வருகிறது. கோயிலின் கட்டிட அமைப்பு பல வர்ணப் பூச்சுகளுடன் செட்டிநாடு பாணியில் கட்டப்பட்டுள்ளது. அழகிய வெள்ளி ரதம் ஒன்று கோயிலின் வளாகத்துக்குள் கண்ணாடியால் அமைக்கப்பட்ட அறைக்குள் வைக்கப்பட்டுள்ளது.



செய்கோன் கோயில் சன்னதி தோற்றம்



செய்கோன் கோயில் வெள்ளி ரதம்

## 2. மேடான், சுமத்ரா, இந்தோனேஷியா



மேடான் கோயில் சாலையில் இருந்து ஒரு தோற்றம்

இந்தோனேஷியா தீவுகளில் இரண்டாவது பெரியது சுமித்ரை என்னும் சுமத்ரா தீவாகும். வணிககுலத்தில் பிறந்த கோவலனின் தந்தை மாசாத்துவான் வெளிநாடு செல்லும் ஒரு பெரிய வணிக குழுவுக்கு தலைவனாக இருந்து முத்து, பவளம் மற்றும் நவரத்தினங்களை வாணிபம் செய்ய இந்தோனேஷியாவுக்குச் சென்றதாக குறிப்பு ஒன்று கூறுகிறது. சுமித்ரை தீவுக்கு தலைநகரமாகிய மைதான் தில்லி, தற்சமயம் மேடான் என்று அழைக்கப்படும் நகரத்திலும் மற்றும் தஞ்சம்பாலை, கேந்தான், திப்பன்தங்கி போன்ற சிற்றூர்களில் நகரத்தார்கள் தொழில் புரிந்து வந்திருக்கின்றனர்.



Jalan Kejaksaan (Jalan kebun bunga) Medan, North Sumatra என்ற இடத்தில் 1892ல் அமைக்கப்பட்ட நகரத்தார்களின் தெண்டாயுதபாணி ஆலயம் உள்ளது. அங்கு ஸ்ரீ சுப்பிரமணியம் நகரத்தார் கோயில் என்று அழைக்கப்பட்டு வருகிறது. நித்திய பூஜை செய்வதற்காக பண்டாரம் ஒருவர் நிரந்தரமாக இருந்து வருகிறார். இக்கோவிலை ஜகார்த்தாவில் (துயமயசவய) உள்ள நகரத்தார்களால் நிர்வாகிக்கப்பட்டு வருவதாகத் தெரிய வருகிறது. இவ்வாலயம் பழங்காலத்தில் கட்டப்பட்டபடியே பாதுகாக்கப்பட்டு வருகிறது. கோவிலின் மூலப் படிமம் வெள்ளை கல்லால் அமைக்கப்பட்டு இருக்கிறது. இங்கு ஆண்டுதோறும் தைப்பூசத்திருவிழா மிக விமரிசையாக நடந்து

வருவதாக ஆலயத்தின் பண்டாரம் தெரிவித்தார். மரத்தில் ஆன ரதம் ஒன்றும் கோயிலின் அருகாமையில் உள்ள ரதக்கொட்டகையில் நிறுத்தப்பட்டுள்ளது.



மேடான் கோவில் நுழைவாயிலில் இருந்து ஒரு தோற்றம்



மேடான் கோவில் சன்னிதான தோற்றம்




மேடான் கோவில் கல்வெட்டு

### 3. யாங்கூன், மியான்மர் (ரங்கூன், பர்மா)

இன்றியமையாத உணவாகிய அரிசியை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவும் அதனோடு தென்னிந்திய பாட்டாளி மக்களின் உழைப்பையும் பர்மாவுக்கு கொண்டு வந்து நிறைவேற்றிய பெருமை நாட்டுக்கோட்டை நகரத்தார்களை சேரும். 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வியாபாரம் செய்வதற்கு பாய்மரக்கப்பலில் பர்மாவின் தெற்கு பகுதி மோல்மேன் என்ற ஊருக்கு வந்து சதுப்பு நிலங்களில் வேளாண்மை செய்ய மூலதனம் கொடுத்தவர்கள்



ரங்கூன் ஆறரைவீட்டு கிட்டங்கியின் தோற்றம்

நகரத்தார்கள். ஒரு சமயத்தில் பர்மா "The Rice Bowl Of British Empire" என்று அழைக்கப்பட்டது. மோல்மேனில் குடியேறிய பிறகு நாளடைவில் பர்மா நாடெங்கும் சின்னஞ்சிறு ஊர்களிலும் பரவி தங்கள் கொடுக்கல் வாங்கல் தொழிலை செய்து வந்தனர். ஒரு சமயம் அவர்களின் தொழில் பெருக்கம் எழுபது கோடி ரூபாய் வரை இருந்தது என மதிப்பிடப்படுகிறது. ஏறத்தாழ 150 ஊர்களில் 1250 கடைகள் வரை இருந்தன.



தமிழ் தெய்வமாகிய முருகனுக்கு ஆங்காங்கே கோயில் கட்டி வழிபட்டு வந்தனர். பர்மாவில் சுமார் 60 நகரங்களில் தென்னிந்திய கலைச்சிற்பத்துடன் செட்டியார்கள் கட்டிய கோயில்கள் பின்வருமாறு

| | |
|---|---|
| 1. இரங்கூன் | 2. பசுமந்தான் |
| 3. கீமந்தான் | 4. லேசுூ |
| 5. மோபி | 6. தக்கி |
| 7. அவுக்கான் | 8. தொவுஞ்சை |
| 9. லேப்பட்டான் | 10. மீன்லா |
| 11. அவுப்போ | 12. சூப்பிங்கான் |
| 13. சீக்கோன் | 14. நத்தலின் |
| 15. பவுண்டை | 16. தேக்கோன் |
| 17. புரோம் | 18. ஈனாஞ்சான் |
| 19. தயட்மியோ | 20. ஈந்தட்டா |
| 21. நத்தஞ்சான் | 22. பாசியன் |
| 23. மைனாங் | 24. உவாக்கமா |

| | |
|---|---|
| 25. மியாங்மியா | 26. சூமங்கை |
| 27. அய்மென் | 28. பியாப்பம் |
| 29. சைலா | 30. டேரியா |
| 31. தொந்தை | 32. போக்கலை |
| 33. மோல்மேன்சூன் | 34. சைப்பி |
| 35. சோசான் | 36. மூப்பின் |
| 37. எவுண்டம் | 38. மவுஞ்சவுட்டான் |
| 39. தோங்குவா | 40. கட்டப்பினா |
| 41. கய்யான் | 42. டாப்பின் |
| 43. பக்கோ | 44. தன்னப்பின் |
| 45. சைட்டோ | 46. சைக்க |
| 47. தத்துவம் | 48. சுவைச்சான் |
| 49. மேல்மேன் | 50. டய்யூ |
| 51. நவுலியப்பன் | 52. பென்விக்கோன் |
| 53 பியூ | 54. டாங்கோ |
| 55. பின்மெனா | 56. மீஞ்சான் |
| 57. மாந்தளை | 58. மணியுவா |
| 59. மீன்பு | |

ஒவ்வொரு ஊரிலும் ஆண்டுதோறும் ஒரு திருவிழா நடைபெற்று வந்தன. ரங்கூன், மோல்மேன், ஈந்தட்டா, பாசியன் முதலிய ஊர்களில் தைப்பூசம் நடைபெற்று வந்தன. தலைநகர் யாங்கூனில் கூடி. 112/122, Shwe Bon Thar Road, Yangoon (முன்பு Moghul Street) ஆறறை வீட்டு ஸ்ரீ முருகப்பெருமான் ஆலயம் உள்ளது. தலைநகரில் இருந்து சுமார் 4 கீ.மீ. தூரத்தில் Set Yone Road, Puzundaung, Yangoon (தமிழில் பசுமந்தான்) என்னும் இடத்தில் மற்றொரு தெண்டாயுதபாணி கோயில் உள்ளது. தைப்பூசத் திருவிழாவின் போது செட்டியார்கள் தொழில் செய்து வந்த இடமாகிய ஆறறை கிட்டங்கி வீட்டில் இருந்து பசுமந்தான் கோயிலுக்கு முருகப்பெருமான் ரதத்தில் சென்று வருவது இன்னும் நடைமுறையில் உள்ளது.



ரங்கூன் ஆறறைவீட்டு முருகன் கோயிலின் நுழைவாயில் இருந்து ஒரு தோற்றம்

நான் சென்ற சமயம் ஆறறை வீட்டில் நடராஜபுரம் இராமநாதன் செட்டியாரையும் பசுமந்தான் கோயிலில் மதகுபட்டியைச் சேர்ந்த கண்ணப்பன் செட்டியாரையும் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு கிட்டியது. இவர்கள் இரண்டு பேரையும் தவிர வேறு நகரத்தார்கள் யாரும் அங்கு இருப்பதாக தெரியவில்லை. ஆறறைவீட்டு முருகனும் பசுமந்தான் கோயில் நிர்வாகமும் நகரத்தாரின் பார்வையில் இருப்பதாக இராமநாதன் செட்டியார் கூறினார். மற்ற கோவில்கள் அங்கு வாழும் பர்மிய தமிழர்களால் நடத்தப்பட்டு வருவதாக தெரியவருகிறது. பசுமந்தான் கோயிலில் உள்ள கல்வெட்டில் அந்த கோயில் 1850களில் கட்டப்பட்டதாகவும் பின்பு 1863ல் புதுப்பித்து 1864ல் கும்பாபிஷேகம் செய்யப்பட்டுள்ளதாக தெரிவிக்கிறது.



ரங்கூன் ஆறறைவீட்டு முருகன் சன்னதி



ரங்கூன் பசுமந்தான் கோயில் சன்னதி



ரங்கூன் பசுமந்தான் தெண்டாயுதபாணி மூலஸ்தானம்

ரங்கூன் பசுமந்தான் தண்டாயுதபாணி கோயில் வெளித்தோற்றம்



4. கொழும்பு, இலங்கை



கொழும்பு பழைய கதிர்வேலாயுத சுவாமி கோவில் சாலை தோற்றம்

அழகிய இலங்கை தீவுக்கு நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் 1820ஆம் ஆண்டுகளில் வியாபாரம் செய்ய சென்றுள்ளனர். சென்ற இடத்தில் எல்லாம் முருகப்பெருமானுக்கு ஆலயம்கட்டுவது போல் கொழும்பு மாநகரத்தில் செட்டியார் தெரு (தற்சமயம் Sea Street) என்று அழைக்கப்படுகிற இடத்தில் அடுத்தடுத்து பழைய கதிர்வேலாயுதசுவாமி கோவிலையும் புதிய கதிர்வேலாயுதசுவாமி கோவிலையும் கட்டியுள்ளனர். இந்தக் கோவில்களில் இருந்து ஆண்டு தோறும் ஆடிப்பௌர்ணமிக்கு வேல் மற்றும் காவடிகளோடு 250 கி.மீ.அப்பாற்பட்டுள்ள கதிர்காமம் கோவிலுக்கு பாதயாத்திரையாக சென்று வந்தனர். பிற்காலத்தில் ஒவ்வொரு ஆண்டும் கதிர்காமம் போய் வருவது இயலாததால் பழைய கதிர்வேலாயுதசுவாமி கோவில் நகரத்தார்கள் கொழும்பு நகரத்தில் அடுத்துள்ள பம்பலப்பிட்டியா (8.2 Kms, Galle Road, Bambalapitiya) என்ற சுற்றுப்பகுதியில் ஒரு ஆலயம் அமைத்து உபய கதிர்காமம் என்று பெயரிட்டனர். இது போலவே புது கதிர்வேலாயுதசுவாமி கோவில் நகரத்தார்கள் வெள்ளவத்தையில் (8.9 Kms, Galle Road, Wellawatte) ஒரு ஆலயம் அமைத்து இக்கோவிலை உபய கதிர்காமம் என்று அழைத்து வருகின்றனர். இரு கோவில்களுக்கும் தனித்தனியே தங்க முலாம் பூசிய மரரதமும், வெள்ளி ரதமும் இருக்கின்றன. செட்டியார் தெருவில் உள்ள இரு கதிர்வேலாயுதசுவாமி கோவிலில் இருந்து அடுத்த அடுத்த ஆண்டுகளில் பம்பலப்பிட்டியா மற்றும் வெள்ளவத்தையில் உள்ள உபய கதிர்காம கோவிலுக்கு ஆடிப்பௌர்ணமியில் சுவாமி ரதத்தில் உலா வரும். கொழும்பு நகரில் மட்டும் அல்லாது இலங்கை முழுவதிலும் நீர்கொழும்பு, காலி, இரத்தினபுரி, நாவலப்பிட்டி, கம்பளை, மாதம்பை, குருநாகல், யாழ்ப்பாணம், முன்னீச்சரம் ஆகிய இடங்களில் நகரத்தார் ஆலயம் கட்டியுள்ளனர். எனக்கு செட்டியார் தெருவில் உள்ள இரு கதிரேசன் கோவில்களுக்கும் பம்பலப்பிட்டியா, வெள்ளவத்தையில் உள்ள இரு உபய கதிர்காம கோவில்களுக்கும் சென்று வர மட்டுமே எனக்கு வாய்ப்பு கிட்டியது. இந்த கோவில்கள் அனைத்திலும் நித்திய பூஜைகள் நன்றாக நடந்து வருகிறது.



இராஜ கோபுரங்களுடன் பிரம்மாண்டமாக கட்டப்பட்டுள்ளன. பக்தர்கள் வருகையும் அதிகமாய் இருந்தன. வெள்ளவத்தையில் உள்ள புதிய கதிரேசன் திருமண மண்டபத்தை காண எனக்கு வாய்ப்பு கிட்டியது. பம்பலப்பிட்டியாவில் அலவாக்கோட்டையை சேர்ந்த சுப. இராஜேந்திரன் செட்டியாரை சந்தித்து நகரத்தார் கோவில்களின் நிலையை பற்றி அறிந்து கொண்டேன். கொழும்புவில் உள்ள நான்கு கோயிலும் நகரத்தார்களால் நிர்வாகிக்கப்பட்டு வருகிறது. இதர ஊர்களில் உள்ள கோவில்கள் நகரத்தார்கள் பார்வையில் இருக்கிறதா என்று தெரியவில்லை.




கொழும்பு புதிய கதிரேசன் கோவில் சாலை தோற்றம்



கொழும்பு புதிய கதிரேசன் கோயில் நுழைவாயில் இருந்து ஒரு தோற்றம்

**குறிப்பு**

இந்த கட்டுரையை எழுத உதவிய குறிப்பு கட்டுரைகள் பின் வருமாறு.

1.திரு சித. அழகப்பன், வியட்நாம் செட்டியார் சேம்பர் ஆப் காமர்சின் முன்னாள் துணை தலைவரால் "வியட்நாமில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி" என்ற தலைப்பில் 1863 - 1963 ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் நூற்றாண்டு விழா மலரில் வெளிவந்த கட்டுரை.

2.திரு சோம லெ வால் எழுதப்பட்ட "இந்தோனேஷியாவில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி" என்ற தலைப்பில் 1863 - 1963 ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் நூற்றாண்டு விழா மலரில் வெளிவந்த கட்டுரை.

3.திரு சொ.சுப.சுப்பிரமணியன் செட்டியார், காரியதரிசி, நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம், பர்மா, "பர்மாவில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி" என்ற தலைப்பில் 1863 - 1963 ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் நூற்றாண்டு விழா மலரில் வெளிவந்த கட்டுரை.

4.கொழும்பு செட்டியார் சேம்பர் ஆப் காமர்சின் தொகுப்பு "இலங்கையில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி" என்ற தலைப்பில் 1863 - 1963 ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் நூற்றாண்டு விழா மலரில் வெளிவந்த கட்டுரை.



பம்பலப்பிட்டியா பழைய உபய கதிர்காம கோயிலின் வெளித்தோற்றம்



வெள்ளவத்தை புதிய உபய கதிர்காம கோயிலின் வெளித் தோற்றம்




வெள்ளவத்தை புதிய கதிரேசன் திருமண மண்டபம் வெளித் தோற்றம்







# " செந்தமிழ்க் கடவுளாய் காட்சிதரும் செந்தூல் தண்டபாணி புகழ்பாடுவோம்"

## முனைவர் கவிஞர் இரவிபாரதி



ஆன்மீகப் பணிகளிலே நகரத்தார்கள்
அருந்தொண்டு ஆற்றுவதில் சிகரத்தார்கள்
தன்பெண்டு பிள்ளைகளைப் பிரிந்துவிட்டு
தனவணிகம் செய்வதற்கு வந்தவர்கள்...!

பாய்மரக் கப்பலேறி மலைநாட்டிற்கு,
பயணித்து கரை சேர்ந்த அற்றை நாளில்
தாய்போல அரவணைத்து காத்ததெய்வம்-நம்
தண்டாயுத பாணி தெய்வ மன்றோ ...!

கொண்டுவிக்க வந்தவர்கள் தம்வருமானத்தில்
கொள்கையாய் ஒருபங்கை திருப்பணிக்கே
கொண்டுவந்து கொடுத்ததோடு நில்லாமல்- ஆலயத்
தொண்டு செய்து தம் வாழ்வை அர்ப்பணித்தார்கள்.!

அப்படித்தான் செந்தூலில் தண்டாயுதபாணி
ஆலயம் அழகாக உருவாயிற்று...
எப்படித்தான் உழைத்தாரோ நம்முன்னோர்கள்..அந்த
ஏற்றமிகு உள்ளங்களை நினைந்திடுவோம்!

பெற்றோரைப் பிரிந்துவந்து தனியனாக
பெரும்புகழை ஈட்டியதால் நகரத்தார்க்கு
உற்றதுணை ஆகிவிட்டார் தண்டபாணி...மட்டுமல்ல
உடனேற்றிச் செல்லுகின்ற வாழ்க்கைத் தோணி...!

செட்டிமார்கள் மனமுருகி வழிபடுவதால்
"செட்டியப்பன்" எனும்பெயர் முருகனுக்குண்டு...
இட்டதெய்வம் எதுவென்று கேட்டால் போதும்
எழில்முருகனையே சுட்டுவார்கள் நகரத்தார்கள்...!

முருகனையே அப்பனாய்ப் போற்றியதாலே
"முருகப்பன்" இல்லாத நகரத்தாரில்லை...
வருகின்ற கவலைகள் மறந்துவிட்டு
வடிவேலனை எண்ணாத நாளில்லை...

கவியரசர் "கண்ணதாசன்" நேரில்வந்து
கண் குளிர வழிபட்ட தண்டாயுதபாணி
புவிபோற்றும் வகையிலே அவர்கவிதை
புகழோங்கு கல்வெட்டாய்த் திகழுகின்றது

தமிழ்க்கடவுளாய் நம்மாலே போற்றப்படும்
தண்டாயுத பாணியின் அருளோடு
இமயமாய் வாழ்க்கையில் உயர்ந்திடுவோம் - நல்ல
எதிர்காலம் வேண்டியே வணங்கிடுவோம் !



# குன்றுதோறும் ஆடும் குமரா குறைதீர்க்க வா, குமரா!

சிவபெருமானை அவமதித்து தட்சன் யாகம் செய்தான். அதில் கலந்து கொண்டதால் தேவர்கள் பெரும் பாவத்துக்கு ஆளானார்கள். அந்தப் பாவ வினை காரணமாகவே சூரபத்மனால் தேவர்கள் கொடுந்துன்பம் அனுபவிக்க நேர்ந்தது. சூரபத்மனின் கொடுமையைத் தேவர்களால் தாங்க முடியவில்லை. எனவே அவர்கள், "சூரபத்மனின் கொடுமையிலிருந்து எங்களைக் காத்தருளுங்கள்" என்று சிவபிரானிடம் பிரார்த்தித்தார்கள்.

தேவர்களை சூரபத்மனின் கொடுமையிலிருந்து விடுவிக்கும் பொருட்டு இறைவன் திருமுருகனை அவதாரம் செய்வித்தார்.

கார்த்திகைப் பெண்களால் எடுத்து வளர்க்கப்பட்டதால் முருகனுக்குக் கார்த்திகேயன் என்ற பெயர் ஏற்பட்டது. கங்கை வழியாக வந்ததால் காங்கேயன் என்றும், அக்கினியிலிருந்து தோன்றியதால் அக்கினிப்பூ என்றும், சரவணப் பொய்கையில் தோன்றியதால் சரவணபவன் என்றும், வைகாசி மாதம் விசாக நட்சத்திர தினத்தில் தோன்றியதால் விசாகன் என்றும், ஆறு குழந்தைகளும் சேர்ந்து ஒரே குழந்தையாக மாறியதனால் ஸ்கந்தன் என்றும், பேரழகுடன் விளங்கியதால் முருகன் என்றும், தேவர்களின் சேனாதிபதியாக விளங்கியதால் தேவசேனாதிபதி அல்லது சேனானி என்றும், மயிலை வாகனமாக கொண்டதால் மயில் வாகனன் என்றும், சக்திவேல் உடையவனாதலால் சக்திதரன் என்றும், சேவல்கொடியை உடையவன் என்பதால் குக்குடக் கொடியோன் என்றும், ஆறு திரு முகங்களைக் கொண்டவன் என்பதால் ஷண்முகன் என்றும் சிவக்குமரன் போற்றப்பெறுகிறான்.

பஞ்ச பூதங்களின் வழியாக முருகனின் அவதாரம் நடைபெறுகிறது. சிவபெருமானின் நெற்றியிலிருந்து தோன்றிய ஆறு தீப்பொறிகளும் அப்படியே வந்திருக்குமேயானால் அவற்றின் உஷ்ணத்தை ஒருவராலும் தாங்க முடியாமல் போயிருக்கும். அதனால்தான் அந்தப் பொறிகள் வாயு, அக்கினி, கங்கை நீர், வானம், நிலம் ஆகிய பஞ்ச பூதங்களின் வழியாக வந்து, மெல்ல மெல்ல மென்மை உடையதாக மாறிப் பிறகு குழந்தையாக அவதாரம் ஆகிறது.

எப்படி மின்சாரம் அதிக சக்தி உடையதாக இருக்கும்பொழுது, அதைத் தாங்க முடியவில்லை என்று மின்மாற்றி (Transformer) யின் மூலமாகச் சக்தியைக் குறைத்துத் தேவைக்கேற்ப பயன் படுத்திக் கொள்கிறோமோ அது போலவே, ஆறு அருட்பெரும் ஜோதிகளும் பல நிலைகளையும் கடந்து உலகம் தாங்கும் தன்மை பெற்றதாகி மென்மை மிக்க குழந்தையாக ஆயிற்று. மேலும், பஞ்ச பூதங்களின் சேர்க் கையால் அமைந்த உலகம் முழுவதற்கும் தலைவன் முருகனே என்பதற்கு அடையாளமாக, அவன் பஞ்சபூதங்களின் வழியாலும் சேர்க்கையாலும் தோன்றினான்.

முருகப் பெருமானுக்குப் பதினெட்டுக் கண்கள். அநேகம் பேர் பன்னிரெண்டு கண்கள்தானென்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். பதினெட்டு கண்கள் என்பது பலருக்குத் தெரியாது.

சிவபெருமானுக்கு மூன்று கண்கள். இடக்கண் சந்திரன், வலக்கண் சூரியன், நெற்றிக்கண் அக்கினி; அதனால்தான் சிவனை முக்கண்ணன் என்று வழங்குகிறோம்.

முருகப்பெருமான் சிவகுமாரன். அப்பாவைப் போலத்தானே பிள்ளையும் இருக்கும்? அப்பாவுக்கு மூன்று கண்கள் என்றால் முருகனுக்கும் மூன்று கண் கள்தானே! எனவே முருகனின் ஆறு முகத்திலே 6 3= 18 கண்கள் உள்ளன.

சிவனே முருகன். முருகனே சிவன். சிவபெருமானுக்கு பிறப்பும் இறப்பும்கிடையாது. ஆகவே, முருகனுக்கும் பிறப்பும் இறப்பும் கிடையாது. "செம்மான் மகளைத் திருடும் திருடன் பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்று அருணகிரியாரின் கந்தரனுபூதி கூறுகிறது.

"கருணை கூர் முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரெண்டும் கொண்டே, ஒரு திருமுருகன் வந்து ஆங்கு உதித்தனன் உலகம் உய்ய" என்று கந்த புராணத்தில் கச்சியப்ப சிவாச்சாரியார் குறிப்பிட்டுள்ளார்.

இங்கு 'உதித்தனன்' என்றால் பிறந்தான் என்று அர்த்தமில்லை. சூரியன் உதித்தான் என்றால் பிறந்தான் என்றா அர்த்தம்? என்றைக்குமே உள்ள ஆதித்த பகவான் சில காலம் மறைந்திருப்பார். இப்போது வெளிப் படுகிறார். அதுபோலவே என்றைக்கும் உள்ள எம்பெருமான் முருகன் அப்போது சரவணப் பொய்கையில் வெளிப்பட்டுத் தோன்றினார். இதைத்தான் உப சாரமாக 'உதித்தனன்' என்று கந்த புராணம் கூறுகிறது.

இறைவனும் இறைவியும் சரவணப் பொய்கையின் கரைக்கு எழுந்தருளி னார்கள். இறைவி ஆறு குழந்தைகளையும் ஒன்றாக எடுத்து அணைத்தாள். அது காரணமாக, ஆறு திருமுகங்களும் பன்னிரெண்டு திருக்கரங்களும், ஒரே உடலும் உடைய ஸ்கந்தனாக முருகன் மாறினான்.

3 ரிஷப வாகனத்தில் அமர்ந்து இறைவனும் இறைவியும் குழந்தையை கயிலைக்கு எடுத்துச் சென்றார்கள். இறைவியின் கால் சிலம்பில் உள்ள நவமணிகளிலிருந்து நவசக்திகள் தோன்றினார்கள். நவசக்திகளிடமிருந்து நவ வீரர்களும், லட்சம் வீரர்களும் தோன்றினார்கள். அவர்கள் எல்லோருடனும் முருகன் அற்புதத் திருவிளையாடல் புரிந்தான்.

அந்தப் பிரபு முருகன் ஞானமே உருவாகிய நாயகன். அதனால்தான் ஞானபண்டிதன் என்ற பெயரைப் பெற்றான். தந்தைக்கே அவன் பிரண வத்தை உபதேசித்ததை, "ஒரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே!" என்று அருணகிரிப் பெருமான் அற்புதமாக வியந்து பாடியிருக்கிறார்.

இந்தப் பிரணவத்தை சாஸ்திர ரீதியாக அப்பாவுக்கு முருகக் கடவுள் சொன்னாராம். அதனால்தான் அவருக்கு சுவாமிநாதன், சிவகுரு, குமரகுரு, பரமகுரு, குருசுவாமி, குருபரன் என்று அநேக நாமாங்கள் உள்ளன.





# ஆறு தலங்கள் அவன்படை வீடு அருணகிரி படைத்த வரலாறு

## அருணகிரிநாதரின் அருட்பதம் போற்றி



**பேராசிரியர் சிவ. சதீஸ்குமார், சென்னை**

'ஒன்றே பலவாய், பலவே ஒன்றாய்' இருக்கும் தத்துவத்தைக் காட்டும் ஒரு தலம் - திருவண்ணாமலை. ஊரின் பெயரும் திருவண்ணாமலை; மலையின் பெயரும் திருவண்ணா-மலை; இறைவனின் பெயரும் திருவண்ணாமலையார்; ஒன்றே பலவாக இருப்பதற்கு இத்தலமே சாட்சி என்பார் சொல்வேந்தர் சுகி. சிவம் அவர்கள்.

ஏராளமான ஞானிகளை தன் கைத்தலத்தே கொண்டுள்ளதால்தான், குருநமசிவாயர் இத்தலத்தை, "ஞானத் தபோதனரை வாவென்று அழைக்கும் அண்ணாமலை" என்று அருளினார். ஞானியர் பூமியான இங்குதான், சங்கத்தமிழ் வாழ, சரணகமலாலயத்தின் கடவுளின் புகழைப்பாட, பதினைந்தாம் நூற்றாண்டில் அவதரித்தார் நம் அருணகிரிநாதர்.

எந்தத் தவறு செய்தவரும் மனமாரத் திருந்தி, உணர்ந்து வருந்தினால் மன்னிப்பும் மறுவாழ்வும் உண்டு என்ற வகையில் அருணகிரிநாதரின் அருள் வாழ்வு, இங்குள்ள அறுமுகனின் அருளால்தான் அரும்பியது. இளமைக் காலத்தில் இன்பத் துறையில் இவர் எளியரானதால் தொழுநோய் வந்துவிட்டது. தன் தவறை உணர்ந்து உயிரைவிட அண்ணாமலைக் கோபுரத்தின் மீதேறி, குதிக்கும் தருவாயில் அருள்திருமுருகன் இவரைத் தடுத்தாட்கொண்டு, 'இனி என் புகழைப் பாடு' என்று அருளினார். அப்போது அருணகிரிநாதர், கல்வியறிவு இல்லாதவன் நான், "ஏவினை நேர்விழி மாதரை மேவிய ஏதனை மூடனை நெறிபேணா ஈனனை வீணனை ஏடு ஏழு எழுதா முழு ஏழை" ஆகிய நான் எப்படிப் பாடுவேன்? என்று கேட்க, முருகன் இவரின் நாவில் தன் ஞானவேலால் ஓம் என்கின்ற மந்திரத்தை எழுதி பாடச் சொன்னார். அப்போது தித்திக்கும் 'முத்தைத்தரு' எனத் தொடங்கும் திருப்புகழைப் பாடியருளினார்.

எல்லா நூலுக்கும் அதனதன் ஆசிரியர்கள்தான் பெயர் சூட்டுவர். ஆனால், திருப்புகழுக்கு மட்டும் முருகனே பெயர் சூட்டினார். எல்லா திருப்புகழ்ப் பாடல்களையும் அருணகிரிநாதர் பாடினார். ஆனால், "பக்கரைவி சித்ரமணி" என்று தொடங்குகிற திருப்புகழ் பாடலில், "திருப்புகழ் செப்ப" என்பது வரைக்கும் முருகன் பாடினார். மீதிப் பாதியை மட்டும் அருணகிரிநாதர் பாடினார். இதில்தான் 'திருப்புகழ்' என்று முருகனே பெயர் வைத்த தன்மை வெளிப்படுகிறது.

நால்வரால் பாடல் பெற்றால் எப்படி சிவதலங்களுக்குச் சிறப்போ, ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டால் திவ்ய தேசங்கள் எப்படி அதிக திவ்யமாய்த் திகழ்கின்றனவோ, அதைப்போல அருணகிரிநாதரின் திருப்புகழ் பாடல்பெற்ற அறுமுகனின் திருத்தலங்கள் மிகவும் அருள் வாய்ந்தவையாகும். அவ்வகையில், மகாநதிகள் இருந்த இடத்திலே இல்லாமல் நிலத்திலே ஓடி பயிர்களுக்கு நலஞ்செய்வது போல், முருகன் இருக்கும் தலங்கள் தோறும் சென்று பாடியருளினார் அருணகிரிநாதர். அப்போது திருச்செந்தூர் முருகன் இவருக்கு 'நடன கோலம்' காட்டினார். திருவாவினன்குடி முருகன் இவருடைய தித்திக்கும் திருப்புகழில் மகிழ்ந்து 'ஜபமாலை' தந்தருளினார். இவ்வளவு அருள்பொதிந்தது திருப்புகழ்.



இதை நாம் பாடினால் என்ன நடக்கும் என்பதை,
"திருப்புகழைக் கற்க திருப்புகழைக் கேட்க திருப்புகழை நித்தம் ஜெபிக்க முக்தி எளிதாகும்" என்று அவரே குறிப்பிட்டுள்ளார்.
இதுமட்டுமின்றி, இதைப் படிப்பவர்கள் துன்பங்கள் யாவும் தொலையும்; இன்பங்கள் ஓங்கும் என்பதை,
"இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர் இடுக்கினை அறுத்திடும்"

என்று சொல்லும் அருணகிரி வள்ளல், கோபம் கொண்டு நம்மைப் பகைத்து நிற்கின்றவர்களுக்கும் நம்மை எள்ளி நகைப்பவர்களுக்கும் இழிமொழி சொல்லிப் பழிப்பவர்களுக்கும் திருப்புகழானது நெருப்பாக நின்று நிலைகுலைக்கும் என்பதை, "சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும் உயிர்க்கும் சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும் திருப்புகழ் நெருப்பு என்று அறிவோம் யாம்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.



இவர் இத்தகைய சிறப்புமிக்க திருப்புகழ்கள் மொத்தம் பதினாராயிரம் பாடியிருந்தாலும் "திருப்புகழைச் சிறிது அடியேனும்" என்ற அடியில் தான் பாடியது சிறிதுதான் என்று பணிவுடன் கூறி "பணியுமாம் என்றும் பெருமை" என்ற மறைமொழிக்கிணங்க நிறைமொழி மாந்தராய் நம் மனத்தில் நிற்கிறார்.

இத்தகு பணிவின் சிகரம், படைத்த படைப்புக்கள் கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி, வேல் மயில் விருத்தங்கள், கந்தர் அலங்காரம் போன்றவையும் ஆகும். இதில் கந்தர் அலங்காரத்தில் நம் தலையெழுத்தை அழிக்கும் அழிப்பான் (ரப்பர்) ஒன்றுண்டு. அது முருகனின் திருவடி என்று குறிப்பிட்டுள்ளார். அத்திருவடி தன் தலைமீது பட்டு பிரம்மனின் கையெழுத்து அழிந்து விட்டது என்பதை, "இங்கு அவன் கால்பட்டு அழிந்தது என் தலைமீது அயன் கையெழுத்தே" என்று அருளினார்.

எனினும் அந்த முருகனின் திருவடி நம் அனைவருடைய தலைமீதும் எப்படிப் படும்? எப்போது நம் தலையெழுத்து அழியும்? என்ற ஏக்கங்கள் நமக்கு எள்ளளவும் வேண்டியதில்லை. அதற்கும் வழி அவர் இடத்திலேயே உண்டு. முருகனின் திருவடி தலையெழுத்தை அழிக்கும் எனில் அவரின் திருவடிபட்ட எந்தவொரு பொருளும் அருள்பெற்ற தன்மையால் நம் தலையெழுத்தைக் கட்டாயமாக அழிக்குமல்லவா? அப்படி முருகனின் திருவடிபட்ட பொருட்கள் மொத்தம் மூன்று. ஒன்று மயில்; இன்னொன்று தேவர்களின் தலை; மற்றொன்று அருணகிரிநாதரின் அருட்பாடல்கள். இதனை, "தாவடி ஓட்டும் மயிலிலும் தேவர் தலையிலும் எந்தன் பாவடி ஏட்டிலும் பட்டதன்றோ" என்று இவரே பாடியிருக்கிறார். மயிலும் தேவர்களின் தலையும் நம் தலைமீது பட வாய்ப்பில்லை. ஆனால், அருணகிரிநாதரின் அருட்பாடல்கள் நம் தலைமீது படமுடியும். இவருடைய பனுவல்களைத் தலைமீது வைத்துக் கொண்டாடி, வாயாரப் பாடி மகிழ்ந்தால் நம் தலையெழுத்து மாறும் என்பதில் எந்த மாற்றமுமில்லை.

மேலும், அருணகிரிநாதரை போல் விசாலப் பார்வை நமக்கு எப்போதும் வேண்டும். ஆன்மீகப் பாதையில் அடியெடுத்து வைப்போர் ஒரு தெய்வத்தை மட்டும் சிக்கெனப் பிடிக்க வேண்டும். அதற்காக மற்ற தெய்வங்களை மதிக்காமல் இருக்கக்கூடாது. அவ்வகையில், அருணகிரிநாதர் மற்ற எல்லா தெய்வங்களையும் மதித்துப் பாடுவார்; நிறைவில் முருகனை மட்டுமே வணங்குவார். இது அவருடைய மரபாகும். 'எல்லாவற்றையும் மதி; ஒன்றையே துதி' என்று வாழ்ந்தவர் இவர்.

இவரை, 'அருணகிரி வள்ளல்' என்று குறிப்பிடுவர். ஆம், இவர்தான் வள்ளன்மையாக நமக்கு பல நன்மைகளைக் கொடுத்திருக்கிறார். குறிப்பாக, வில்லிபாரதம் என்ற நூல் எழுவதற்கு இவர்தான் விழுமிய காரணம். தலைக் கணத்தால் புலவர்களை வாதுக்கு அழைத்து, காதுகளை அறுத்துவந்த வில்லிபுத்தூராரை 'கந்தர் அந்தாதி' பாடி, குறிப்பாக,

"திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதக்கத்தத் தித்த திதித்தித்த தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே"

என்ற தகர வர்க்கத்திலான தங்கப்பாடலைப் பாடி, வில்லிபுத்தூராரை மடக்கி, வில்லிபாரதம் பாடுமாறு பணித்தவர் அருணகிரிநாதரே என்பார் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்.

அருணகிரியார் கிளி வடிவமெடுத்து பாடிய ஓர் இலக்கியம் கந்தர் அநுபூதி. இது ஞான மார்க்கத்தின் நிறைகுடம். பக்திமார்க்கத்தில் திளைக்கும் பக்தர்களுக்கு வழிகாட்டும் அகல்விளக்கு. சில இறைவனின் கையில் கிளி இருப்பதைக் காண்கிறோம். நம் குறைகளை ஆண்டவனிடம் சொல்லும்போது கேட்டுக்கொண்டு, 'சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை' மறுபடியும் இறைவனிடம் சொல்லி நினைவூட்டுவது போலே, கிளி வடிவம் எடுத்து அருணகிரிநாதர் பாடிய அநுபூதியை நாம் இறைவனிடம் மனமுருகிப் பாடினால் நம்முடைய குறைகள் இருமுறை இறைவனிடத்தில் சொல்லப்பட்டு நிறைகளாக மாறும் என்பது நிஜம். அதனால்தான் அருணகிரியாரை, "கந்தர் அநுபூதி பெற்று கந்தர் அநுபூதி சொன்ன எந்தை" என்று துதித்தாரோ தாயுமானார்.

நெஞ்சக்கல் நெகிழ்ந்துருகி மகிழ்ந்திருக்க, முருகனின் தஞ்சப்பாதத்தின் தண்ணருள் திளைத்திருக்க, அருணகிரிநாதரின் செஞ்சொற் புனைமாலைகளே நமக்குத் துணை செய்யும். வழிகாட்டும் வள்ளல் அருணகிரிநாதரின் வனச மலரடிகளை வந்திப்போம். கௌமார சமயத்தின் கௌரவமாக விளங்கும் அருணகிரிநாதரை முப்போதும் சிந்திப்போம்.



# அறுபடை அழகன்


## முனைவர் சேகர் நாராயணன்

### மேனாள் தமிழ்த் துறைத் தலைவர்

### ஈப்போ ஆசிரியர் கல்விக் கழகம், பேராக், மலேசியா




திருப்பரங்குன்றத்தில் நீ சிரித்தால் முருகா
திருத்தணி மலைமீது எதிரொலிக்கும்
திருச்செந்தூரிலே வேலாடும் உன்
திருப்புகழ் பாடியே கடலாடும்
பழநியிலே இருக்கும் கந்த பழம் நீ
பார்வையிலே கொடுக்கும் அன்புப் பழம்
பழமுதிர்ச் சோலையில் முதிர்ந்த பழம்
பக்திப் பசியோடு வருவோர்க்கு ஞானப்பழம்
தந்தைக்கு உபதேசம் சுவாமிமலை அல்லவா
சிறப்புடனே கந்தக் கோட்டமுண்டு உன்
சிங்கார மயிலாட தோட்டமுண்டு
உனக்கான மனக் கோயில் கொஞ்சமில்லை
அங்கு உருவாகும் அன்புக்கோ பஞ்சமில்லை

என்று ஆறுப்படை வீடுகளில் வீற்றிருக்கும் முருகனைப் பாட நாளும் கிழமையும் போதாது. ஆறுபடையில் வீற்றிருக்கும் முருகன் மெய்யன்பர்களுக்கு அருளையும் பக்தியையும் கருணையும் கொடுக்கக் கூடியவன் என்று கவியரசு கண்ணதாசன் முருகனைப் பற்றி பாடுவார்.

முருக வழிபாட்டுப் பாடல்களாக அருணகிரிநாதர் பாடிய பாடல்கள் சிறப்புக்குரியதாகும் திருப்புகழ் பாடல்கள், கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தர் அனுபூதி, திருவகுப்புப் பாடல்கள் என பல உள்ளன. முருகனைச் சைவ, வைணவ ஒற்றுமைக் கடவுளாக அருணகிரிநாதர் பாடியுள்ளார். குமர குருபரின் படைப்புகள் அருட்பிரகாச வள்ளலாரின் பாடல்களிலும் குமரக்கடவுள் பற்றிய பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் முருகனை வள்ளிக் கணவனாகக் குறிப்பிடுவதில் மகிழ்வு கொள்வார்.

“குறிஞ்சி நிலத்தின் தெய்வம் முருகன்” என்ற அடிப்படையில் அருணகிரினாதர் பாடிய திருப்புகழ் பாடல்களைத் தொகுத்தோர் திருப்பரங்குன்றத்தை முதலாவது படை வீடாகவும், பழனி மலையை மூன்றாவது படை வீடாகவும் அமைத்தனர். குறிஞ்சிக் கிழவனை வள்ளி மணாளனாகப் பாடுவதில் அருணகிரியாரைப் போல பலரும் ஆசைப்படுகின்றனர்.

கிளிக் கண்ணி பாடல் ஒன்றில்,
வள்ளிக் கணவன் பேரை வழிப்போக்கன் சொன்னாலும்
உள்ளம் குளிருதடி – கிளியே உன்மத்தம் ஆகுதடி

அருணகிரியார் வள்ளி மலைக்கு வருகிறார். அம்மலையை வணங்குகிறார். வள்ளியை மணம் முடிக்க முருகன் தணிகையிலிருந்து வள்ளி மலைக்கு வந்து தமிழ் அக மரபுப்படி உறவு கொண்டு மணம் முடிக்கிறார். இவ்வள்ளி மலையில் காலை வைத்ததும் முருகன் தனக்கு உபதேசித்த இரகசியப் பொருள் எனக்கு விளங்கி விட்டது என்று அருணகிரியார் கூறுகிறார்.

“முருகா சுவாமி மலையில் உன் தந்தைக்கு உபதேசித்த இரகசியப் பொருள் வள்ளிச் சன்மார்க்கமே என்று நான் தெரிந்து கொண்டேன்,” என்கிறார்.

வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க
வல்லைக்குளேற்றும் இளையோனே (திருப் 317)



யாரொருவர் யான் எனது என்றும் ஆணவ நிலையற்று என்னை வழிபடுகிறார்களோ அவர்களுக்கு நான் எளியன். குற்றேவல் செய்பவன்.

என்றும் ஆழ்ந்த தத்துவத்தை இம்மலை
தமக்கு உபதேசித்ததாகக் குறிப்பிடுகிறார்.

கந்த புராணத்தில் இந்நிகழ்ச்சியெல்லாம் தொகுத்து வள்ளியம்மைத் திருமணப் படலத்தில் கச்சியப்ப சிவாச்சாரியார் சுட்டுகிறார். தெருக்கூத்து மரபில் வள்ளித் திருமணம் என்ற நாடகமாக இன்றும் நடத்தப்பட்டு வருகிறது. வள்ளிப் பதம் பணிந்தால் வருவன எல்லாம் நல்லதாகும் என்று கந்த புராணம் கூறும்.

"உலைப்படு மெழுகன்ன உருக்கியே ஒருத்தி காதல்
வலைப்படுகின்றின் போல வருந்தியே இரங்கா நின்றான்
கலைப்படு மதியப் புத்தேள் கலங்களம் புனலின் தோன்றி
அலைப்படு தன்மைத் தன்றோ ஆறுமுகன் ஆடல்"

முருக அவதாரத்தின் நோக்கங்களுள் ஒன்று வேலேந்தி சூரபத்மனை வதம் செய்தது. மற்றொன்று குறிஞ்சிக் கிழவனாக வந்து வள்ளியை மணந்தது.

முருகனின் திருஅவதாரமானது அசுரர்களை அடக்கித் தேவர்களைக் காப்பாற்றுவதற்காக நிகழ்ந்தது. அதுபோலவே ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தர் இவ்வுலகில் சமண முதலாகிய பரசமயங்களை நிராகரித்து அவற்றின் மீறுகையினால் அடக்கி ஒடுக்கப்பட்ட சைவ சமயத்தை ஆக்கம் செய்வதற்காகவே பிறப்பெடுத்தார். இதனை,

"பரசமய நிராகரித்து நீறுஆக்கும்
புனைமணிப் பூண காதலன்"

(பெரிய சம்பந்தர். 19)

என்பார் சேக்கிழார் சுவாமிகள்.

அன்புத் தெய்வமே ஆறுமுக மானவனே!
சுப்ரமண்யனே சோகம் அகற்றிடுவாய்
ஞானஸ்கந்தரே ஞானம் அருள்வாய் நீ
ஞானத்தண்ட பாணியே என்னை ஞான்பண்டிதனாக்கிடுவாய்

என்று போற்றப்படும் செந்தமிழ்க் கடவுளாம் சேயோன் அடியார் துயர் போற்றும் ஆறுமுகக் கடவுள். ஞான வடிவான அப்பெருமான் இயற்கைச் செவ்வொளியில் தோன்றி, கந்தக்கடவுளாய் அருள்தரும் கருணைக்கடவுள். மயிலேறும் பெருமானின் அருள்பெற்ற அருளாளர் இருவர் வாக்கின் வழி நாமும் அருள்பெற அழைக்கிறது இவ்வரைவு.

"முருகப்பெருமானது ஆறுதிருமுகங்களின் அருட்டிறத்தை அழகொழுக உரைப்பார் குமரகுருபர். இறைவனது ஒருமுகம் சூரனைத் தடிந்து தேவர்க்கு உயிரைச் சிந்திய திருமுகம். எல்லா உயிர்க்கும் ஊழ்வினையை மாற்றி அழியாத பேரின்ப வாழ்வினை அருளியது மற்றொரு மலர் முகம்; தம்மைச் சூழ்ந்த போற்றுவோர் உரைக்கும் பழமறைகள், ஆகமங்கள் ஆகியவற்றின் முடிவான பொருளாக அமையும் கமலமுகம். இவ்வுலகப் பற்றான பாசத்தை நீக்கிப் பல்கதிர் ஆதவனாய் ஒளிவிடும் மிளிர்தொரு மலர்வதனம்; நேயமுடன் வள்ளிக்கும் தேவயானைக்கும் மோகமளிக்கும் மதிமுகம்; தம்மை அன்புடன் பற்றும் அடியார் மகிழ வரம் பல நல்கும் தாமரைமுகம்." எனக் குமரகுருபர் உரைப்பார்.

(கந்தர் கலிவெண்பா 42 - 47)

சங்ககாலத் தமிழகம், இந்து சமயத்திற்கு வழங்கியுள்ள கொடை முருக வழிபாடாகும். குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன் சங்க காலத்தில் முதன்மையான தெய்வமாக மிகப் பலரால் வழிபடப்பட்டுள்ளது. முருகக் கடவுள் அன்புத் தெய்வமாகவும், அழகுத் தெய்வமாகவும், போற்றப்பட்ட நிலையை அறியலாம். முருகக் கடவுள் முருகன், முருகு எனும் சொற்களால்

சுட்டப்பட்டதோடு, செவ்வேள், செய்யோன், நெடுவேள், வேள், குறிஞ்சிக்கிழவன், வேலன் என்னும் சொற்களும், அக்கடவுளைக் குறித்து சங்ககாலத்தில் வழங்கப்பட்ட பெயர்களாகும் என்பதனைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். வெற்றித் தெய்வமான கொற்றவை அவனுடைய தாயாவாள். அதனால், "கொற்றவை சிறுவன்", "பழையோள் குழவி", "மலைமகள் மகன்" எனவும் முருகக்கடவுள் குறிப்பிடப்படுகிறான்.

திருமுருகாற்றுபடை முருகனைச் சிவனுடைய மகனாக ஆறுமுகமும், பன்னிருகையும் உடையவனாக, கார்த்திகை மகளிர் அறுவராலே பிறப்பு எய்தியவனாக, தெய்வயானை வள்ளிக்குக் கணவனாக ஆரியக் கடவுளை சுப்பிரமணியோடு தொடர்புப்படுத்திக் கூறுகின்றது.

"ஆரியரது தந்தைவழி நாகரிகம் தமிழகத்தில் கலந்து பண்பாட்டுக் கலப்பு ஏற்பட்ட காலத்திலே இந்த உருமாற்றம் ஏற்பட்டது என்பது ஆராய்ச்சியாளரான கைலாசபதி குறிப்பிடுகின்றார்".

ஆகவே, சங்ககால இலக்கியங்களும் அறுபடை வீடுகளும் எதனைச் சாற்றுகின்றது என்றால்;

- பண்டைக் காலந்தொட்டே முருக வழிபாடு சிறப்புற்று இருந்தது என்பதை அறிய முடிகின்றது.
- முருகனுக்கு வேலன் எடுக்கும் வெறியாட்டு நிகழ்ச்சிகள் சடங்கு முறைகள் ஆகியவற்றை அகப்பாடல்கள் விரிவாகக் கூறுகின்றன என்பதை அறியலாம்.
- திருமணம் நிகழவும், குழந்தை பேற்றிற்காகவும் தங்கள் குறை தீருவதற்கும் முருகனை வழிபட்டுள்ளனர். "சஷ்டியில் இருந்தால்தான் அகப்பையில் தோன்றும்" என்பது முதுமொழி மட்டுமல்ல நம்பிக்கைக்கு உருயதாகும்..
- கார்த்திகை விளக்கிட்டு விழாவின் பழைமையை அறிய முடியும்.
- முருகப் பெருமானின் அறுபடை வீடுகளின் சிறப்பையும் அறியலாம்.

**உருவாய் அருவாய் உளதாய் இலதாய்**
**மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்**
**கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்**
**குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!**





# புகழ்கொண்டான் தண்டாயுதபாணி...!

## கு. தேவேந்திரன், தலைமை ஆசிரியர் தமிழ் மலர் நாளிதழ்



செந்தூரான் குடிகொண்ட செங்கதிர் வேலன்
செந்நூல் மடிதாங்கும் தண்டாயுதபாணி பாலகன்
சித்திரமாய் அமைந்திட்ட சீர்மிகு தகைமையாளன்
சிந்தனையில் உதித்தெழுந்தான் ஈசன்திருமகனாய் ...

கானமயிலாட கண்ணுக்கு விருந்தாய்
கணம்முழுவதும் காத்தருள்வான் எம்பெருமான்
தெள்ளுத்தமிழ் அழகுமகனாய் வலம்வருவான்
கோடிபுண்ணியம் அள்ளிக்கொடுப்பான் சந்தனமாய்...

அழகுமயில் ஆடிவரும் ஆலயத்தில்
அணைத்திடுவான் அன்பொழுக அன்னையாய்
அன்னைத்தமிழ் வணங்கும் தமிழோடு தண்டாயுதபாணி
அகிலத்தின் ஏழுபடைவீடாய் எழுந்தருள்வான்...

ஆலோலம்பாடிய கவியரசின் திருவாயில்
ஆனந்தம் பொங்கிவரும் முத்தமிழின் தேனாய்
ஆசைகளை அள்ளியணைத்து அருள் தருவான்
ஆயிரம் பன்னிசை பாடி மூழ்கிடுவோமே...

கோலமயிலாடும் செந்தூல் கோட்டையிலே
"கோ"மகனாய் கோலோச்சும் கோவேந்தே
கோமாதா துணையிருக்கும் குலமகனே நீதான்
கோமான் உருவில் தமிழ்க்குன்றமும் நீதான்.

நலம்பாடும் நகரத்தார் நெடும்பயணத்தில்
நாளெல்லாம் பூமணம்வீசும் பூந்தளிராய்
நறுமணம் கமழும் கையில் தண்டம் கொண்டு
நாற்கரமாய் கொடை கொண்ட திருமேனியானவன்...



வேல்மயிலோடு அபயவரதம் காட்டி
வேண்டுவோர் மனத்தை வேலாய்பாதுகாத்தாய்
வெள்ளோட்டமாய் வெள்ளி ரதம் பவனிவந்து
வெற்றிவேலாய் புகழ்கண்டாய் தண்டாயுதபாணியே..!







# சக்தி அளித்த தனி வேலைத்தான்–சூரன் தன்னை பிளந்து கொடும்பகை முடித்தான்

# வேலை வணங்குவதே வேலை

உலக வாழ்வில் துன்பத்தை நீக்கும் வேலாக, பயத்தைப் போக்கும் வேலாக, பசி நீக்கும் வேலாக, பிணி தீர்க்கும் வேலாக, எம்பயம் அகற்றும் வேலாக, வழித்துணையாகும் வேலாக, இன்பங்கள் தரவல்ல வேலாக, துன்பங்கள் துடைக்கும் வேலாக, ஒப்பற்ற பெருமை மிகு வேலாக இருப்பதினால் "வேலுண்டு வினையில்லை" என்ற நம்பிக்கையுடன் வேலைப்-போற்றி வழிபட்டால் சகல நன்மைகளும் கிடைக்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

**மூவிருமுகங்கள் போற்றி முகம் பொழி கருணைபோற்றி**
**ஏவரும் துதிக்க நின்ற ஈராறு தோள்போற்றி காஞ்சி**
**மாவடி வைகும் செவ்வேள் மலரடிபோற்றி அன்னான்**
**சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி**

எல்லாவற்றிக்கும் ஒரு போற்றி சொன்ன கச்சியப்பர் "அஞ்ஞானம் அகற்றி" "ஆணவம் அடக்கி" இருவீரச்செயல்களைச் செய்து முடிப்பது வெற்றிவேல் என்பதால் திருக்கைவேலுக்கு இரண்டு போற்றிகள் சொல்லுகின்றார்.

**வினை ஓடவிடும் கதிர்வேல்**

ஆணவ இருளை மாற்றி ஞான ஒளியைத் தருவது வேல் வேல் பட்டதும் ஆணவச் சூரன் அழகு மயிலாகி ஆறுமுகனுக்கு வாகனமாகிறான். வேலை வழிபட்டால் வினைகள் போய் ஒழியும். வேலும் வலனும் ஒன்றுதான். எனவே கந்தரனுபூதியில்,

**வினை ஓடவிடும் கதிர்வேல் மறவேன்**
**மனையோடு தியங்கி மயங்கிடவோ**
**சுனையோ டருவித் துறையோடு பசுந்**
**தினையோ டிதணோடு திரிந்தவனே**

என்று பாடுகிறார் அருணகிரியார். முருகப்பெருமான் வேல்கொடு சூர் அடும் வீரச் சுந்தரன். அவனுக்குரிய வேலை வணங்குவதே நமக்கு வேலை. அவனுடைய வேலும் திருக்கையும் உண்டேல். அதுதான் நமக்கு மெய்த்துணை. முருகன் அடியார்களில் சிறப்பிடம் பெற்றவர் திருமுருக கிருபானந்த வாரியார். நமக்கு அவர் கற்றுக் கொடுத்த கவின் மொழிகள் ஐந்தாகும். அவை,

**வேலுண்டு வினையில்லை**
**மயிலுண்டு பயமில்லை**
**குகன் உண்டு குறைவில்லை**
**கந்தனுண்டு கவலையில்லை**
**வள்ளியுண்டு மயக்கமில்லை**

என்பவை. இந்தத் தொடர்களில் முதலிடம் பெறுவது வேல். வெற்றிகொடுப்பது வேல். கொல்வது தமிழில் கோல் எனப்படுவது போல் வெல்வது தமிழில் வேல் எனப்பட்டது. இந்த வேலின் பெருமையைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**குறுந்தொகையில் வேல்**

சங்க இலக்கியம் எட்டுதொகை. அந்தத் தொகுப்பில் சிறப்பிடம் பெறுவது குறுந்தொகை. இதைப் புலவர்கள் நல்ல குறுந்தொகை என்று போற்றுவர். இந்நூலின் கடவுள் வாழ்த்துச் செய்யுள் முருகனுக்குரியது.

**தாமரை புரையும் காமர் சேவடி**
**பவளத் தன்ன மேனித் திகழொளி**
**குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**ஏம வைகல் எய்தின்றால் உலகே**





**பாரதி கண்ட வேலன் பெருமை**

பாரதியார் ஒரு முருக பக்தர். அவருடைய பாடல்களில் வேலுக்குத் தனியிடம் உண்டு.

**வெற்றிவடி வேலன் அவனுடை**
**வீரத்தினைப் புகழ்வோம்**
**சுற்றி நில்லாதே போ பகையே**
**துள்ளி வருகுது வேல்.**

என்று பாடும் பொழுது வேல் மட்டுமல்ல பாரதியின் வீரத்தமிழும் துள்ளி வருகிறதன்றோ? முருகனுடைய வேல் கடல்போல் கவலை இருந்தாலும் கணப் பொழுதில் வற்றவைக்கும் என்பதை

**சுருதிப் பொருளே வருக**
**துணிவே கனலே வருக**
**கருதிக் கருதிக் கவலைப் படுவார்**
**கவலைக் கடலைக் கடியும் வடிவேல்**
**முருகா முருகா முருகா**

என்று பாடிய பாரதி,

**வீரத் திருவிழிப் பார்வையும் வெற்றி**
**வேலும் மயிலும் என் முன்நின்றே எந்த**
**நேரத்திலும் எனைக் காக்கும்**

என்று முருகபக்தராய் முழக்கமிடுகிறார்.

**வள்ளலார்**

கந்தகோட்டத்து முருகன் கருணையை ஒன்பது வயதில் உணர்ந்தவர் வள்ளலார். கடலில் சிவப்பாய்க் கதிரவன் உதிப்பது மயில் மேல் முருகன் வருவதைப் போன்றது. அவனுடைய கூர்வடிவேல் நம் வினையை அழிப்பது என்பதால்,

**சீர்திகழ் தோகை மயில் மேலே**
**செஞ்சுடர் தோன்றும் திறம்போலே**
**கூர்வடி வேல்கொண்டு நம்பெருமான் வரும்**
**கோலத்தைப் பாருங்கள் கோதையர்காள்**

என்பது இராமலிங்க வள்ளலார் பாடும் கும்மிப் பாடலாகும்.





# தாளைப் பணியும் தவம் !

## முனைவர் எம் எஸ் ஸ்ரீலக்ஷ்மி, சிங்கப்பூர்

**முன்னுரை:**
"வாக்கிற்கு அருணை" எனப் போற்றப்படும் அருணகிரிநாதர் அருளிய பக்திப்பனுவல்கள் ஒவ்வொன்றும் தனிச்சிறப்புப் பெற்றவை. அவ்வகையில் கந்தர்அநுபூதி முருகப்பெருமானை ஆத்ம வடிவமாக அறியும் அறிவை - ஞானத்தை உண்டாக்கும் நூல் என்பதால் ஞானநூல் என்று அருளாளர்கள் போற்றுவர். இந்நூலில் உள்ள பாடல்களின் எண்ணிக்கை ஐம்பத்து ஒன்று என ஞானியாரடிகள், கி.வா.ஜ. போன்ற அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால் இந்நூலில் உள்ள பாடல்களின் எண்ணிக்கை நூற்றியொன்று என்னும் கருத்தும் (முனைவர் கு.வெ பாலசுப்பிரமணியன் அருணகிரியார் நூல்) ஆய்வுலகில் உண்டு. (இக்கட்டுரை முனைவர் குவெ பாலசுப்பிரமணியன் அவர்களின் கருத்தை ஏற்று எழுதப்படுகிறது.) கந்தர்அநுபூதியில் அருணகிரிநாதர் கந்தனுடன் நேரடியாகப் பேசுவது போன்ற அமைப்பில் பாடல்கள் அமையப்பெற்றுள்ளன. அநுபூதி என்னும் பேற்றை - ஞானத்தால் பெறும் ஆனந்தநிலையை அடைவதற்கு முன்னர் பாடப்பட்ட பாடல்கள் என்றும் அநுபூதி அடைந்த பின்னர் பாடப்பட்ட பாடல்கள் என்றும் இரண்டு வகையாக உள்ளன. அநுபூதி பெற்றமையை அவர் வியந்து பாடுகிறார்.

**தாள் பணியும் தவம் அநுபூதிக்கு அடிப்படை**
இறைவனைப் பணிவது என்பது தவஞ்செய்வதை ஒத்தது. இத்தவத்தைச் செய்வதற்கு இறையருள் கூட்டுவிக்கவேண்டும். மணிவாசகப் பெருமான் சொன்னதுபோல "அவனருளாலே அவன் தாள் வணங்க வேண்டும்". அவ்வாறு இறைவனை வணங்குவது எளிமையானதல்லவே? முற்பிறவியில் ஒருவர் தவம் செய்திருக்கவேண்டும். "தவமும் தவமுடையார்க்காகும்" என்று வான்புகழ் வள்ளுவன் சொன்னதுபோல முற்பிறவித் தவம் இப்பிறவியில் இறைவனை வணங்குவதற்கு ஆதாரம் ஆகும் ஆகவே "யானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப் பெற்றே" என்று மணிவாசகப் பெருமான் கூறியதன் உண்மையை நாம் முற்றிலும் உணர்கிறோம். இறைவனைப் பாட்டினால் அர்ச்சித்தும் இறைநாமங்களை ஓதியும் இறைவனை வழிபட்டு வருதல் வேண்டும் நம்மைப் படைத்த இறைவனுக்கு நமது தேவைகள் பற்றியும் அவற்றை எப்போது நிறைவேற்றவேண்டும் என்பதும் தெரியாதா? ஆகவேதான் மணிவாசகப் பெருமான்,

**" வேண்டத் தக்கது அறிவோய்நீ**
**வேண்ட முழுதும் தருவோய் நீ**
**வேண்டும் அயன்மாற்கு அரியோய்நீ**
**வேண்டி என்னைப் பணிகொண்டாய்**
**வேண்டிநீ யாதருள் செய்தாய் யானும்**
**அதுவே வேண்டின் அல்லால்**
**வேண்டும் பரிசொன்று உண்டென்னில்**
**அதுவும் உன்றன் விருப்பன்றே "**

என்று குழைத்தபத்தில் பாடுகிறார். இறைவழிபாட்டுக்கு அடிப்படை மாறாத ஈர அன்பு; தன்னலம் இல்லா பக்தி; ஓடும் கூரையும் ஒக்கவே நோக்கும் பக்குவம் முதலியன. இப்பக்குவத்தை நாம் அடைவதே வழிபாட்டின் நோக்காக இருத்தல் வேண்டும். விருப்பு வெறுப்பற்ற நிலைக்கு பக்தி நம்மை அழைத்துச்செல்ல வேண்டும்.



**அருணகிரியாரின் பக்திநெறி**
சீவன்முத்தனாக மாறுவது என்று சொல்லக்கூடிய விழிப்புநிலையில் மறப்பும் நினைப்பும் அற்ற நிலையை அருளாளர்கள் பலர் அடைந்துள்ளனர். இந்த நிலையை நாம் அடைய வேண்டும் என்றால்

அதற்குரிய வழியை நாம் தேர்ந்தெடுத்து பக்தி செலுத்த வேண்டும் ஐம்புல வேடர்கள் மனத்தை ஆட்டிப்படைக்காதவாறு இறைவனின் திருவருளில் மனத்தைக் கரையச்செய்யவேண்டும். இறைவன் கல்லை மென்கனி ஆக்கும் விச்சை உடையவன் அன்றோ? மனம் கரையக் கரைய அதன் இயக்கம் யாவும்மறந்து கருதா மறவா நெறி" கைகூடும் அருணகிரிநாதர் இதனையே பெற விழைகிறார்.

**" கருதா மறவா நெறி காண எனக்கு**
**இருதாள் வனசம் தர என்று இசைவாய் "**

என்று இறைவனிடம் கேட்கிறார்.



**அருணகிரியாரின் அநுபூதி**

தன் இயல்பும் மனமும் கெடச் சமாதிப்பயிற்சி செய்த நிலையை - இறைவன் உயிரோடு இரண்டறக் கலந்து நின்ற நிலையை - "தன்னந் தனி நின்றது தானறிய" நிற்பதை ஞானத்தால் பெற்ற ஆனந்தநிலை என்கிறார் அருணகிரியார். இதனை அருணகிரியார் பெற்ற அநுபூதி எனலாம். இந்த அனுபவத்தை வாகீசப்பெருந்-தகையும் பெற்றிருக்கிறார். அதனை,

**"தேடிக் கண்டுகொண்டேன் திருமாலொடு**
**நான்முகனும்**
**தேடிக் காணொனாத் தேவனை**
**என்னுள்ளே**
**தேடிக் கண்டுகொண்டேன்**

என்று அங்கமாலையில் பாடினார் திருநாவுக்கரசர். இந்த அநுபூதி அனுபவத்தை அருணகிரியார் உலகமக்கள் எல்லோரும் அனுபவிக்குமாறு விளக்குகிறார். "அறிவார் அறிகின்றது அல்லால் எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பது" என்று அருணகிரியார் வினாவையும் கேட்டு விடையையும் கூறுகிறார்.

**அநுபூதி பெற அருணகிரியார் காட்டும் வழிகள்**

அருணகிரியார் பல பாடல்களில் அநுபூதி பெறுவதை விளக்குகிறார். ஐம்புலன் வழியே மனத்தை அலையவிடாமல் அடக்கி முருகனின் கழல்பெற்று உய்யும் வழியை மனம் மேற்கொள்ளவேண்டும். இதனைக் கீழ்க்காணும் பாடலில் அறிவுறுத்துகிறார்.

**"கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று**
**உய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்**
**மெய் வாய் விழி நாசியொடும் செவி ஆம்**
**ஐவாய் வழி செல்லும் அவாவினையே"**

இப்பாடல்வழி அநுபூதி பெறுவதற்குப் புலனடக்கம் முதலில் வேண்டப்படும் தகுதி என்று நாம் அறிகிறோம்.

புலன்களை அடக்கினால் ஆசை அறுபடும் ஆகவே பேராசை ஏற்படாது. இருப்பினும் அருணகிரியார் தம் கருத்தை வலியுறுத்துவதற்காகப் பேராசையில் சிக்கி உழலக்கூடாது; அதற்கு முருகன் அருள்புரியவேண்டும் என்கிறார்.

**"பேராசை எனும் பிணியில் பிணிபட்டு**
**ஓரா வினையேன் உழலத் தகுமோ?**
**வீரா முதுசூர் பட வேல் எறியும்**
**சூரா சுர லோக துரந்தரனே"**

பழவினை காரணமாக முருகனின் திருக்கோலத்தை விழிகள் காணமாட்டா. முருகனை மனம் எண்ணாது பழவினை நீங்கவேண்டுமானால் முருகனின் திருப்பா-தங்களை மனம் சிந்தித்தல் வேண்டும் என இறையருள் பெறும் வழிகளைக் கூறுகிறார்.

**"கெடுவாய் மனனே கதிகேள் கரவாது**
**இடுவாய் வடிவேல் இறைத்தால் நினைவாய்**
**கடுவாய் நெடுவேதனை தூள்படவே**
**விடுவாய் விடுவாய் வினையாவையுமே"**

என் வினை நீக்கத்துக்குரிய வழிகளைக் கூறுகிறார். இதனை அறிஞர் கு.வெ. பாலசுப்பிரமணியன் மனத்தைத் தன்வயப்படுத்திப் பின் இறைவயப்படுத்தும் முயற்சி என்று கூறுவது இவண் நினையத்தகும்.

இறைவனைப்பற்றிச் சிந்திக்காவிட்டால் இறைவனின் திருவருளைப் பெறமுடியாது. வினையிலிருந்து விடுபடமுடியாது என்று இறையருளைச் சிந்திக்காவிட்டால்

ஏற்படும் விளைவுகளை விளக்குகிறார் இறைவனின் திருவடிகளைத் தொழும்பரிசையே பரிசாக அருள்வாய் என இறைவனிடம் வேண்டுக என்கிறார். இவ்வாறு அருணகிரிநாதர் அநுபூதி பெறும் வழிகளை பல பாடல்களில் எடுத்துரைக்கிறார்.

அருணகிரியார் கூறும் வழிமுறைகளை மேற்கொள்ளும் ஓர் உயிர் யோக சமாதி நிலையை அடையும். அந்தநிலையில் "சும்மா இரு சொல்லற" என்று செம்மான் மகளைத் திருடும் திருடனாகிய பெம்மான் முருகன் அறிவிப்பான் என்கிறார்.

**அருணகிரியாரின் உரிமைப் பேச்சு:**
அருணகிரியார் முருகனிடம் பல பாடல்களில் பேசும்போது தம்மைத் தாழ்த்திக்கொண்டும் தம்மையும் ஒரு பொருட்டாக நினைத்து முருகன் அருள்புரிகின்றானே என்று வியந்தும் பேசுகிறார். அவரே முருகனிடம் மற்றொரு பாடலில் எவ்வளவு உரிமையுடன் பேசுகிறார் என்றும் வியந்தும்போகிறோம். "மயில்வாகனா! வீணான வாழ்வு என்று சொல்லப்படும் மாயப் பிரபஞ்சப் படுகுழியில் நீ வீழ்வாய் என்று என்னைப் படைத்தாயா? கருதத் தகாத இழிசெயல்களை நான் செய்துவிட்டேனா? நீ ஏன் இன்னும் எனக்கு அருள் புரியவில்லை? நீ அருளாததன் காரணம்தான் என்ன? பரவாயில்லை முருகா நீ எனக்கு அருளவில்லை என்றாலும் நீ நன்றாக இரு" என்னும் பொருள்பட முருகனிடம் உரிமைக்குரல் எழுப்புகிறார்.

**"பாழ்வாழ்வு எனும் இப்படுமாயையிலே**
**வீழ்வாய் என என்னை விதித்தனையோ**
**தாழ்வானவை செய்தன தாமுளவோ**
**வாழ்வாய் இனிநீ மயில்வாகனனே "**

இவ்வாறு உரிமைக்குரல் எழுப்பிய அருளாளர்களை எண்ணிப்பார்க்கும்போது சுந்தரமூர்த்தி சுவாமிகளே நம் நினைவில் முதலாவதாக வருகிறார். இவர் தோழமைநெறி நின்று இறைவனையே தூது அனுப்பியவர். அவருடைய கண்கள் பார்வை இழந்தபோது சிவபெருமானிடம் முறையிடுகிறார். முதலில் ஒரு கண்ணுக்குப் பார்வை வழங்கிய சிவன் மற்றொரு கண்ணுக்குப் பார்வை வழங்கத் தாமதமான நிலையில் சுந்தரர் சிவபெருமானை மிகுந்த உரிமையுடன் வஞ்சப்புகழ்ச்சியாகப் பழிப்பதுபோலப் பாராட்டிப் பாடுகிறார்.

**"விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன்**
**குற்றம் ஒன்றும் செய்ததில்லை கொத்தை ஆக்கினீர்**
**எற்றுக்கு அடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்**
**மற்றைக் கண்தான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதீரே"**

இவ்வாறு இறைவனைப் பழிப்பதுபோலப் புகழ்ந்து பாடுவதை நிந்தாஸ்துதி என வடமொழியில் கூறுவர். சமயச்சான்றோர்கள் இறைவனிடம் தாங்கள் கொண்டிருந்த உரிமையினை இதன் மூலம் வெளிப்படுத்துகின்ற மரபும் பக்தி இலக்கிய நெறியாக உள்ளது.

அநுபூதி பெறுவதற்கு முன் அருணகிரியார் "அய்யாம் உடல் ஊன் மயமாய் உளதால் அய்யாறு ஆறும் அறிவித்தருள்வாய்" என்று வேண்டுகிறார். அவ்வேளையில் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" எனக் குரு வடிவாகி அநுபூதி அருள்க என இறைஞ்சுகிறார்.

அநுபூதி பெற்றதை அருணகிரியார் அகச்சான்றாய்க் கீழ்க்காணும் பாடலில் பதிவிடுகிறார்.

**"தூசா மணியும் துகிலும் புனைவாள்**
**நேசா முருகா நினது அன்பு அருளால்**
**ஆசா நிகளம் துகளா யினபின்**
**பேசா அநுபூதி பிறந்ததுவே**

அருணகிரியார் முருகன் திருவருளால் தாம் பெற்ற அனுபவத்தைப் பல பாடல்களில் சொல்லி வியப்பதை வழக்கமாக்கிக் கொண்டுள்ளார். தகுதியே இல்லாத தமக்கு முருகன் அருளினானே என்னும் வியப்பைப் பாடல்களில் புலப்படுத்துகிறார். அந்த வியப்பால் முருகனை எவ்வாறெல்லாம் விளித்து மகிழ்கிறார்!

**"பிமரம் கெட மெய்ப்பொருள் பேசியவா !"**
**"போகா வகை மெய்ப்பொருள் பேசியவா !"**
**"உரிதா உபதேசம் உணர்த்தியவா !"**
**"தாளைப் பணியத் தவம் எய்தியவா !"**

அருணகிரியாரின் அனுபவவாக்குகள் மிக்க ஞானநூல் கந்தரநுபூதி இறையருளில் ஆண்டுகள் பலவாய் ஊறித் திளைத்து, திருத்தலப் பயணங்கள் பல மேற்கொண்டு, காளைக் குமரேசன் புகழ்பாடி கௌமார சமயத்துக்குப் புத்துயிர் அளித்த அருணகிரியார் பாதம் பணிந்து அவர் பனுவல்களைப் பாடி உய்தி பெறுவோம்.





# தமிழான உருவம்தான் தண்டபாணி


## முனைவர் என்.சி. இராஜாமணி


இவ்வுலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனுக்கும் அறிவினையும், ஆற்றலினையும் ஒரு சேர கொடுப்பதோடு மட்டுமல்லாமல், அம்மனிதனுக்கு சுத்த பிரமத்தின் பேரொளி காட்டி வீடுபேறு அடைய வித்திடச் செய்பவன்தான் 'கலியுக வரதன்' என்று தமிழர்களின் மிகத்தலையாய கடவுளாகப் போற்றப்படக்கூடிய கந்தன், முருகன், கடம்பன் என்று பல்வேறு பெயர்களைக் கொண்ட சிவசக்தி மைந்தன் ஆவான். அவனுடைய வழிபாடும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து உள்ளது என்றால் வியப்பாகாது.

'ஓசைமுனி' என உலகே போற்றும் அருணகிரி நாதர் அவர்கள் அவனைப் பற்றிப் பாடிய திருப்புகழைக் கேட்டாலே செவி குளிரும்; சொன்னாலே வாய் மணக்கும். அவனது அறுபடைவீடுகளும் முறையே



திருப்பரங்குன்றம் - மூலாதாரம்
திருச் செந்தூர் - சுவாதிஷ்டானம்
பழநி - மணிபூரகம்
சுவாமிமலை - அநாகதம்
குன்றுதோறாடல் - விசித்தி
பழமுதிர் சோலை - ஆக்ஞை

என்று ஆறு சக்கரங்களைக் குறிக்கும்.

இளம் வயதிலேயே பழத்திற்காக அன்னையையும் அப்பனையும் துறந்து, சகோதரனிடத்துக் கோபம் கொண்டு பழநி மலையில் ஆண்டியாக நின்றவன் முருகன். இது வெளிப்படையான கதை. ஆனால் இதனுடைய உள்நோக்கை ஆராய்ந்தோம் என்றால் அவனுடைய ஆன்மீகத் தத்துவத்தை ஆழமாக உணரலாம். அணுவில் அணுவானவர்; பெரிதில் பெரிதானவர் சிவபெருமான். அவன் எல்லாவற்றிலும் இருக்கின்றான்; அனைத்து பொருட்களிலும் அவன் இருக்கின்றான். ஆனால் முருகன் இந்த உலகத்திற்கு என்ன சொல்ல விரும்பினார் என்பதை அருணகிரி நாதரின் திருப்புகழ் மூலம் அறியலாம்.



**"படியிற் பெருமித தகவுயர் செம்பொற்**
**கிரியை தனிவலம் வர அர னிந்தப்**
**பழனக் கனிமுகன் வசமருளும் பொற் புதுநாவலொடு**

**பரன் கொடிடவென மிருவரும் வெருவிடக்**
**கனியைத் தரவிலையென அருள்செந்திற்**
**பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே"**

இத்திருப்புகழ் பாடலை மீண்டும் படித்தால் முருகனுடைய ஆழ்ந்த நுண்திறனைக் காணலாம். இவ்வுலகில் உள்ள அனைத்துப் பொருள்களிலும் சிவனையும் சக்தியினையும் ஒருசேரப் பார்த்தவர் கந்தபெருமான் ; இறைவன் எல்லாப் பொருட்களிலும் தங்கி இருக்கின்றான்; அவனைக் காண்பது அனைத்துப் பொருட்களையும் காண்பதற்கு நிகர் என்றார் விநாயகப் பெருமான். முருகனின் இத்தகைய ஆழ்ந்த அறிவினை அவனிக்கு உணர்த்தும் பொருட்டு பாடிய அருணகிரி நாதர் திருப்புகழில்.

**"அமரர்க் இறையே வணங்கிய**
**பழநித் திருவாவினன்குடி**
**அருணிற் குடியாயிருந்தருள் பெருமாளே".**

குகன், சண்முகன், குமரேசன், கார்த்திகேயன், சுப்ரமணியன், வேலாயுதன், சரவணபவன் என்று அன்பர்களால் ஆனந்தத்துடன் அழைக்கப்படும் கந்தன் அறத்தை நிலை நிறுத்தவும், அரக்கர்களை ஒழிக்கவும் இவ்வுலகை ஆளும்

சிவசக்தியின் மற்றுமொரு உருவாக அவதரித்தவன் 'படைத்தளபதிகளில் நான் கந்தன்' என்கிறது கீதை. அவனை வணங்குபவர்களுக்கு அறிவோடு ஆற்றவினையும் தருபவன்; அடியார்களிடம் அளவிடற்கரியாத அன்பைச் செலுத்துபவன்; அனுதினமும் அவனை துதிப்பவர்க்கு ஞானத்தைத் தருபவன்; இச்சா சக்தியையும் கிரியா சக்தியையும் குறிக்கும் பொருட்டு வள்ளி, தெய்வானை இருவரையும் மனைவியாகக் கொண்டவன்.; அவன் கையில் வைத்திருக்கும் வேலை மற்றும் வணங்கினாலே போதும், ஆற்றல் நம்மிடம் ஆற்றாக ஊற்றெடுக்கும். மனிதனுடைய கர்வத்தையும் அகந்தையும் அகற்ற வேண்டுமானால் அவனுடைய வாகனமான மயிலை வணங்கினாலே போதும்; அச்சத்தை அகற்றி, ஞானத்தைப் பெருக்க வேண்டுமானால் அவனுடைய காலடியில் இருக்கும் நல்ல பாம்பினைப் பார்த்தாலே போதும்; அவனுடைய ஆறு தலைகளையும் காண்பதற்கு, 'காண கண்கோடி வேண்டும்' என்பார்கள் அடியவர்கள். அறிவு, உறுதி, வலிமை,புகழ், செல்வம் மற்றும் தெய்வீக ஆற்றல்களின் மறுபின்பங்கள்தான் அவனுடைய ஆறு தலைகளும். அவை முறையே கார்த்திகேயன், காங்கேயன், சகன், விசாகன், அதிவல்லயன், மகாபலன் என்ற அனைத்து முகங்களும் சண்முகன் ஆனது. ஆறுதலை வேண்டி அடைபவர்கள் முருகனுடைய ஆறு தலைகளையும் ஒரு சேரக் கண்டாலே ஆறுதல் மட்டுமல்ல; ஆனந்தமும் பிறக்கும்; பேரானந்தமும் தோன்றி இனியொரு பிறவி எடுக்கா வேண்டி நிலையும் தானே வந்தெய்திடும். அவனுடைய விபூதியை இட்டவர்களுக்கு விந்தையான அனுபவங்கள் நேரிடும். சூரபத்மனைக் கொன்ற நாளான கந்த சஷ்டி தோறும் அவனுக்காக விரதம் இருந்து, அவனது பாடலைப் பாடி கவசமாக்கிக் கொண்டவர்கள் எண்ணில் அடங்கார்.

இயற்கை வழிபாட்டில் ஆதி காலத்தில் இருந்தே ஈடுபட்ட தமிழ் மக்களின் இயற்கைத் தலைவன் முருகன் ஆவான்; அவன் உருவாக்கிய தமிழில் அவனுடைய பெயரை உச்சரிக்கும் போதே உள்ளுணர்வோடு உள்ளொளியும் பெருகும்; அவனுடைய மாறாத அழகையும், இளமையும் தெய்வத் தன்மையும் 'முருகா' என்று சொல்லும் போதே உணரலாம். ஒவ்வொரு கார்த்திகை நட்சத்திரமென்றும் நீராடித் தூய்மையோடு அவனை வணங்கினால் கேட்டது கிடைக்கும் என்பார்கள் பெரியோர்கள். அவனுடைய திருவிளையாடல்களையும், லீலைகளையும் கேட்பவர்களுக்கு போர்க்களத்தில் அவனால் கொல்லப்பட்டவன் சூரபத்மன் எப்படி வாகனமானான் என்றும் அறிந்துக் கொள்ளலாம். கந்தபுராணத்தைப் பார்த்தால், கந்தன் பிறந்த தத்துவத்தை உணரலாம். பின் அவன் அப்பனுக்கே பாடம் சொன்ன சுப்பையாவாக எப்படி மாறினான் என்றும் அறியலாம். நக்கீரர் எழுதிய திருமுருகாற்றுப் படையை பக்தியுடன் படித்தால் எடுத்த காரியம் அனைத்திலும் வெற்றி அடையலாம்.



**"முருகனே செந்திமுதல்வனே மாயோன்மருமகனே ஈசன் மகனே**
**ஒருகைமுகன் தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்போதும்**
**நம்பியே தொழுவேன் நான்"**

என்றார் நக்கீரர்.

திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தரனுபூதி போன்ற அருணகிரியின் பாடல்களைப் பாடினால் துன்பத்தில் துவைத்து எடுத்து ஆன்மாக்களும் பேரின்ப நிலையை அடையலாம். ஒருமுறை 'முருகா' என்று சொன்னால் அவனுடைய அருள் பலமடங்கு பெருகும் என்று அருணகிரி நாதர் பாடல்களை ஒவ்வொரு நாளும் படித்தால் மனதில் நிம்மதி தானே வளரும்.

குறிஞ்சித் தெய்வமான முருகனைக் கும்பிட்டவர்களுக்கு குறையொன்றும் வாரா. 'தகப்பன்சாமி'யாக தமிழரால் போற்றப்படும் கந்தனைக் கும்பிட்டவர்களுக்கு கஷ்டங்கள் என்றென்றும் அணுகாது. பன்னிரண்டு கைகளும் ஓர் ஆண்டின் தமிழர்களின் பன்னிரு மாதங்களானதாகும், அவனுடைய பன்னிரு தோள்களும் பன்னிரு உயிர்களாகும் : பதினெட்டு மெய்களாகும். ஆறு முகங்களும் ஆறு இன எழுத்துக்கள் ஆகும். அவனது ஆயுதம்தான் தமிழில் ஃ என்று ஆனது. தமிழில் இலக்கணத்தில் வரும் மெல்லினம், இடையினம், வல்லினம் முறையே,மு.ரு.கு என்று ஆனது. அதனால்தான் தமிழ்ப் பெரியவர்கள் "தமிழான உருவம்தான் தண்டபாணி" என்றனர். தண்டபாணியை வணங்கினால் தரணியே அவர்களைப் போற்றும். வள்ளலார் பாடிய கந்த கோட்டத்துள் வளர் சண்முகக் கடவுளை வணங்கினால் அவர்களுக்கு மட்டுமல்லாமல், அவர்களுடைய சந்ததிகளுக்கே பேறு கிட்டும். அவனுக்காக பால்காவடி, பன்னீர்க் காவடி, புஷ்பக் காவடி என்று எந்த காவடி எடுத்தாலும் அவர்களுடைய மனதில் உள்ள பாரங்களும் இல்லாமல் போய்விடும். அவனுக்காக கால்நடையாக புனிதப் பயணத்தை மேற் கொண்டால் புண்ணியம் பெருகும்.சீர் கொமு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன் என்கிறது சிலப்பதிகாரம். பரிபாடலில் அவனைச் 'செவ்வேள்' என்றும், சங்ககாலத்தில் அவனை 'சேயோன்' என்று அழைத்தனர். அவனுடைய 'ஓம்' என்று சப்தத்திற்கு உண்மை விளக்கத்தைக் காணச் சென்றால் ஒரு யுகம் ஆகும் என்பார்கள். 'சரவணபவ' என்னும் அவன் ஆறு எழுத்து மந்திரத்தை ஓதியவர்கள் நினைத்தது எல்லாம் நடக்கும் என்பார்கள்.



# செய்யோன் முருகன் செவ்வேள் முருகன்

'பொருளும் பொன்னும் போகமும் அல்ல – நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதாராயோ"
-பரிபாடல்

"மைவரை உலகம்....எனும் தொல்காப்பியம் மூலமும், நீலநிற விசும்பில் மலிதுளி பொலிய......எனும் திருமுருகாற்றுப்படை மூலமும் இயற்கையாம் முருகன் மலைக்கடவுளாம் முருகன் மழைக்கும் உரியவனாவான் என அறியவருவதாகும். ஆகவே தான் கந்தர் சட்டி விழாக்காலங்களில் முருகன் தன் மகிழ்ச்சியை மழையாகப் பொழிந்து அருள்பாலிப்பது நம் கண்கூடு.

வேட்கையைத் தூண்டுதலின் 'வேள்' என்ற பெயராயிற்று. காதல் தெய்வமான மன்மதனை 'கருவேள்' என்றும் கருணைத் தெய்வமான கந்தனைச் செவ்வேள், என்றும் அடைமொழி கூறி அழைக்கலாயினர். 'பிறவா யாக்கைப்பெரியோன் கோயிலும் அறுமுகச் செவ்வேள் அணி திகழ் கோயிலும்'....... என சிலப்பதிகாரம் மூல மறியலாம். முத்தொழிலான ஆக்கல் அளித்தல் அழித்தல் ஆகிய மூன்றும் செய்ய வல்லோன் செய்யோன். ஆலமர் கடவுளின் அருமைப் புதல்வராதலின் முருகன் செய்யோன் எனப்பட்டான். செவ்வாய்க் கோளுக்குரியவன் முருகன் செவ்வாய்க் கோளினையும் செய்யோன் என அழைப்பதுண்டு. பன்னிரு ராசிகளில் முதல் ராசியான மேஷத்திற்கு அதிபதியான செவ்வாயாகவும் முருகன் விளங்குகின்றான். உச்ச சூரியனுடன் கூடி அவன் உயிர்த்தோற்றத்திற்குக் காரணமாகிறான். செவ்வாய் மகரத்தில் ஆயுள் காரணாகிய சனி வீட்டில் உச்சம் பெற்றிருப்பதால் அழித்தலுக்கும் உரியவனாகின்றான். விருச்சிகம் யோனியைக் குறிக்கும். அது செவ்வாய் வீடு யோனியில் உயிர் தோன்றுதலும் மறைதலும் நிகழும் ஆகவே நிலைத்தலுக்கும் கருவூலமாகின்றான் முருகன். முருகனது கைகளை பன்னிரு ராசிகளுக்கும் ஒப்பிடுவர்.

ஆக முத்தொழில் வல்லவன் மட்டுமல்ல வடிவேலன். இயற்கையும் அவனே! அழகும் அவனே! பொலிவும் வலிவும் அவனே என அறிவதற்குரியதாகும்.

## கடவுளின் சின்னம்

### சுவாமி சிவானந்தர்



ஆலயத்தின்கண் வைக்கப்பட்டுள்ள உருவம் கல்லால் செதுக்கப்பட்டிருந்த போதிலும், மரத்தால் செய்யப்பட்டிருந்த போதிலும் அல்லது உலோகத்தால் வார்க்கப்பட்டிருந்தபோதிலும் அது ஒரு பக்தனுக்கு அருமையும் பெருமையும் வாய்ந்தது. ஏனெனில் முழுமுதற் கடவுளின் முத்திரை அதில் பொறிக்கப்பட்டு உள்ளது. புனிதம் நிறைந்த அழியாத்தன்மை பெற்ற, என்றும் நிலையாயுள்ள பொருளுக்கோர் எடுத்துக்காட்டாக அவ்வுருவம் திகழ்கின்றது.

ஒருநாட்டின் சின்னமாக விளங்கும் ஒரு கொடி வண்ணந்தீட்டப்பட்ட ஒரு சிறுதுண்டுத் துணிதான். ஆனால், அது தன் உயிரினும் சிறந்ததாக இனியதாகவுள்ள ஒன்றை ஒரு போர் வீரனுக்கு எடுத்துக்காட்டுகிறது. என்ன நேரிடினும் அவனது கொடியினைப் போற்றிக் காப்பதில் தன் உயிரைத் துச்சமாக மதித்து பறிக்கொடுக்கவும் தயாராக இருக்கிறான்.

அதேபோன்று, ஒரு பக்தனுக்குத் தான் வணங்கும் கடவுளின் சின்னம் மிகச் சிறந்ததாகத் தோன்றுகிறது. அது தனக்கே உரித்தான பக்திச்சுவை நனிசொட்டும் மொழியில் அவனுடன் உரையாடுகிறது. நலம் பிரகாசிக்கிறது. நாட்டின் கொடியோர் வீரனிடத்தில் போருக்கான வீரத்தையும் துணிவையும் எவ்வாறு தட்டியெழுப்புகிறதோ அவ்வாறே பக்தனிடத்தில் உறைந்து மறைந்து கிடக்கும் பக்தி உணர்வைச் சுரக்கச் செய்கிறது. உருவத்தின் மீது ஆண்டவன் குடி அமர்த்தப்பட்டுள்ளான். அவ்வுருவம் தொழுகை புரிவோனிடத்தில் தெய்வீக எண்ணங்களை ஊற்றெடுக்கச் செய்கின்றது.

# முருகனே, முத்தமிழ்த் தெய்வமே, மக்களின் முறையீடு தீர்க்க வா!

## முருகப் பெருமானின் பெருமை ....

பழந் தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் வழிபட்டுவந்த-கடவுளர்களுள் முருகனும் சிறப்பு மிக்கக் கடவுளாவார்.




இன்று கிடைத்துள்ள பழந்தமிழ் நூல்கள் அனைத்துக்கும் முற்பட்டதான தொல்காப்பியம், முருகப் பெருமானை குறிஞ்சி நிலத்திற்கு உரிய கடவுளாகக் கூறுகிறது. "சேயோன் மேய மைவரை உலகமும்" என்பது இதற்குச் சான்றாகும்.

தொல்காப்பியத்தை அடுத்துத் தோன்றிய தொகை நூலாகிய எட்டுத்தொகை நூலில் பரிபாடலிலும் எட்டுப்பாடல்கள் முருகனுக்கு உடையனவாக இருக்கின்றன. இதிலிருந்தும் முருகன் தமிழ் மக்களின் கடவுளாகப் பண்டைக்காலம் தொட்டு விளங்கிவருகிறான் என்பதை அறியலாம்.

சங்கத்தமிழ்
எட்டுத்தொகை
நற்றிணை · அகநானூறு
குறுந்தொகை · பதிற்றுப்பத்து
ஐங்குறுநூறு · புறநானூறு
கலித்தொகை · பரிபாடல்

நானிலங்களுள்ளும் குறிஞ்சி நிலத்தைச் சேர்ந்த மலையே முதன் முலில் தோன்றியது என்பர், ஆன்றோர். "கல் தோன்றி மண் தோன்றா காலத்தே, வாளோடு முன்தோன்றிய மூத்த தமிழ்" என்ற வரிகளிலிருந்து இதை அறியலாம். இப்படி முதல் நிலமாகிய குறிஞ்சிக்கு முருகன் தெய்வமாகத் திகழ்வது அவனது ஏற்றத்தை இயம்புகிறது.

முருகன் என்றால் அழகு என்று பொருள்படும். ஆகையால் முருகன் என்றால் அழகு என்று ஆகும்.

முருகன் அழகாகவும் செந்நிறமாகவும் கருதப் படுவதனால்தான் அவனை செவ்வேள் என்று செப்புகிறார்கள். அழகு தெய்வமாகிய மன்னதனை நிறம் கருப்பு, எனவே அவன் கருவேள் ஆவான். ஆனால் செவ்வேளாகிய முருகனின் முன்னால் அவன் எம்மாத்திரம். முருகன் என்ற பெயரில் வேறு சிறப்பும் உள்ளது. இந்தச் சொல் தூய தமிழ்ச் சொல்லாகவும், தமிழ் நெடுங்கணக்கின் உயிர் மெய்யின் மூன்று இனங்களையும் கொண்டதாகவும் அமைந்துள்ளதைக் காணலாம். முதலெழுத்து மெல்லினமாகவும் அடுத்த எழுத்து இடையினமாகவும் மூன்றாவது எழுத்து வல்லினமாகவும் நான்காவது எழுத்து, தமிழுக்கே உரிய நன்னகரமாகவும் அமைந்துள்ள சிறப்பு கவனிக்கத்தக்கது.

முருகனின் தோற்றமே அவனுடைய பேராரற்றலைப் புலப்படுத்துகிறது. சூரபன்மன் தாரகசூரன் போன்ற அளவிலா ஆற்றல் பெற்ற அவுணர்களால் பிரமன் இந்திராதி தேவர்கள் அல்லற்பட்டுச் சிவபெருமானிடம் குறையிரந்து வேண்ட, அவர்களைக் காக்கும்பொருட்டு சிவபெருமான் தனது ஐந்து முகங்களாகிய ஈசானானம்,



தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் என்பவற்றுடன் அதோமுகம் என்ற ஆறாவது முகத்தையும் எடுத்துக்கொண்டு, அவற்றில் உள்ள நெற்றிக்கண்களிலிருந்து வெளிப்படுத்திய தீப்பொறிகளே முருகனாகத் திருவவதாரம் எடுத்தன. சிவபெருமானுடைய மூவிரு குணங்களே முருகன்.



நெருப்பு ஒளி வீசுவதற்கும், நெருங்கினோரை நிலை குலையச் செய்வதற்கும் உரிய ஆற்றல் மிக்க குமரன் வெல்லர்க்கரிய சூரபன்மனை வென்று கூர்முதல் தடிந்த சுடர்மிகு வேலன் ஆனான். பிளக்க அரிய கிரௌஞ்ச மலையைத் தன் வேலால் பிளந்ததும், தான் ஒருவனாக நின்று, தானென்னும் அகந்தை கொண்ட தாரகனாதி ஆணவக் கூட்டங்களைத் தடிந்ததும் முருகனது அளவிலா ஆற்றலுக்கு எடுத்துக் காட்டுக்களாகும்.

முருகனின் அழகை என்னவென்றுரைப்பது! செந்நிறமும், அருமுகம், பன்னிரு தோளும், பளபளக்கும் வேலும் பக்தர்களுக்கு அருள்மாரி பொழிவும் ஆரிரு கண்களும் அடியவர் உள்ளத்தை அடிமைகொள்ளும் அழகு வாய்ந்தன. அவனுடைய அழகிலும் ஆற்றலிலும் ஈடுபட்டு அவனை மணந்துகொள்ள விரும்பி அமுதவல்லி, சுந்தரவல்லி என்ற பெண்கள், அவன் வளர்ந்த தடாகத்தில் தவம் செய்ததும், அவர்களுக்கு அருள்புரிந்து அவர்களை முறையே இந்திரனிடமும் வேட்டுவ அரசனிடமும் வளருமாறு செய்து தெய்வானை வள்ளி என்று பெயர் கொண்ட அவர்களை மணந்து கொண்டதும் முருகனின் அழகையும் அருள் உள்ளத்தையும் காட்டுவன.



முருகனின் வீரம் நலிவுற்றோரைக் காக்கவும், ஆணவமுடையோரை அடக்கவும் பயன்பட்டது. செருக்குற்ற பிரமனிடம், பிரணவத்தின் பொருளைச் சொல்லுமாறு உரைக்க அவன் அறியாமல் விழிக்க, அவனுடைய ஆணவத்தை அழித்துச் சிறையிலிட்டான் ஆற்றல்மிக்க ஆறுமுகன். இத்தகைய வீரம் கொண்ட விமலன் பக்தர்களிடம் பரிந்து விளையாடலும் புரிந்தான்.



தமிழ் வளர்த்த ஔவையைத் தமிழில் வெல்லக் கருதி, ஆடு மேய்க்கும் சிறுவனாக நாவல் மரத்திலிருந்து, "சுட்ட பழம் வேண்டுமா சுடாத பழம் வேண்டுமா?" என்று கேட்டு மணலில் விழுந்த பழங்களை மணல் அகல ஊதித்தின்ற ஔவையிடம் "பாட்டி பழம் சுடுகிறதா ?" என்று கேட்டு, ஆணவத்தை அகற்றிய அருட்செல்வன் அவன்.

பகைவனுக்கும் அருள்புரியும் பண்பை முருகனிடம் காண்கிறோம். அண்டசராசரங்களையும் ஆட்டித் துன்புறுத்திய சூரபன்மனை வென்றபோது, அவனிடம் கருணை காட்டி அவனை மயிலும் சேவலுமாய் ஆக்கித் தனக்கு தொண்டுசெய்து, அதனால் அவனுக்கு உலகெலாம் வணங்கத் தக்க உயர்பதம் அளித்தான் உமையொரு பாலன்.



அடியவர்களுக்கு அருள்புரியவே ஆறுபடை வீடுகளில் அமர்ந்துள்ளான் ஆறுமுகன். திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் (திருச் சீரலைவாய்), பழனி (திருவாவினன் குடி), திருவேரகம் (சுவாமிமலை), பழமுதிர்சோலை, குன்றுதோறாடல் ஆகிய ஆறு படைவீடுகளின் பெருமையை அறியாதார் யார்? இவை தவிர, அடியார்களின் உள்ளத்திலும் எழுந்தருளி நித்தமும் அருள்புரிகின்றான் அந்த நிமலன்.

அடியார்களைக் காக்க அவதரித்த அண்ணல் முருகப் பெருமான், தனது பன்னிரு கரங்களிலும் பன்னிரு உருத்திரர்களையுமே படையாகக் கொண்டுள்ளான் என்று கந்தபுராணம் கூறுகிறது. அவனது கைகளில் அங்குசம், குலுசம், கொடி, தண்டம், தாமரை, தோமரம், பகழி, மணி, மழு வாள், வில் ஆகியவை அமைந்துள்ளதைக் கீழ்க்காணும் கந்தபுராணப் பாடல் விளக்குகிறது.



வீறு கேதனம், வச்சிரம், அங்குசம், விசிகம் மாறி லாதவேல் அபயமே, வமிடம் வரதம் ஏறு பாங்கயம், மணி, மழுத் தண்டுவில் இசைந்த ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவேள் அணிந்தான் (கேதம் - கொடி, விசிகம் -அம்பு)

முருகனுக்குக் கோடல், கடம்பம், குரவம், வெட்சி ஆகிய மலர்மாலைகள் உவப்பானவை. அவன் அடியார்களிடம் விரைவில் அருள்பாலிக்கும் தன்மையுடையவன். கலியுக வரதனாகிய அவன், பிறந்தது முதல் ஐந்தாண்டு வரை ஊமையாக இருந்த குமர குருபரருக்கு அருள் சுரந்து அவருடைய ஊமைத் தன்மையைப் போக்கி அவரை இறைக்கவியாக ஆக்கியது அனைவரும் அறிந்ததே.

திருப்பெருந்துறைக் கோவில் மண்டபத்தில் உள்ள ஒரு தூணில் குதிரைச் சேவகன் வடிவில் முருகன் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் மட்டுமின்றி முருகன் வழிபாடு சிங்கை, மலேசியா, மற்றும் தமிழர்கள் வாழும் நாடுகளில் எல்லாம் தமிழர்கள் முருகனை வழிபடுகின்றனர்.



# அழகென்னும் சொல்லுக்கு முருகா

முருகா என்னும் சொல்லைப் பார்ப்போம். எழுத்துக்கள் தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரும்போது சொல்லாகிறது. எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பது தொல்காப்பியம். முதலில் முருகா என்னும் சொல்லுக்கு அடிப்படையாக உள்ள முருகு என்னும் சொல்லமைப்பைப் பாருங்கள்.

ம்உ +ர்உ +க்உ இந்த ஆறு எழுத்துகளின் கூட்டமைப்பே முருகு என்பது முருகப் பெருமானின் ஆறு முகங்களையும் ஆறு படை வீடுகளையும் ஆறெழுத்து மந்திரங்களையும் இச்சொல்லமைப்பு ஆறு எழுத்துகளின் எண்ணிக்கை உணர்த்த வில்லையா?



மேலும் தமிழில் மெய்யெழுத்தை வல்லினம், மெல்லினம் இடையினம் எனப் பகுப்பர்.

க், ச், ட், த், ப், ற் - வல்லினம்,ங், ஞ், ண்,ந்,ம்,ன் - மெல்லினம், ய், ர், ல், வ், ழ், ள் - இடையினம், ம் - என்பது மெல்லினம், ர் என்பது இடையினம், க், என்பது வல்லினம். இம்மூன்றுடன் உ என்பது சேர முருகு என்பது உருவாகியுள்ளது. ஓம் என்னும் பிரணவ மந்திரம் அஉம் என்னும் மூன்றெழுத்தின் கூட்டமைப்பு என்றும் இதிலுள்ள உ காக்கும் தொழிலைக் காட்டுவது என்றும் கிருபானந்த வாரியார் கூறுவார்.

முருகு என்னும் சொல்லுக்குரிய பொருளைத் திருமுருகாற்று-ப்படையில் நக்கீரர் "மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி" என்னும் தொடர் வழி விளக்குகிறார். அதாவது மாறா மணம், இளமைத் தன்மை, என்றும் நீற்கும் இறைமை, அழியா அழகு என்பது முருகு என்பதன் பொருள் எனத் திரு. வி. கல்யாண சுந்தரனார் முருகன் அல்லது அழகு என்னும் நூலில் விளக்குகிறார். திவாகரம், பிங்கலந்தை, நாமதீப நிகண்டு முதலியவைகளைப் புரட்டினால் முருகு என்னும் சொல்லுக்கு அழகு, பூந்தட்டு, கள், தேன், எலுமிச்சை, எழுச்சி, அகில், முருகு என்னும் வாத்தியம் எனப் பல பொருள் கிடைக்கும். கண்ணுக்கு அழகாக, காதிற்கு நாதமாக, நாவிற்கு அமுதமாக, மூக்கிற்கு மணமாக, உடலுக்கு இனிய பரிசமாக, கருத்திற்கு விருந்தாக, உயிருக்கு உணர்வாக, இப்படி எல்லாமாக இருந்து துணைபுரிபவன் முருகன் என்று அறிஞர் கூறுவர்.

தமிழ் மொழியில் தேர்ந்த புலமை பெற்றோரைப் புலவர் என அழைத்துப் போற்றுவர். திருமுருகாற்றுப்படை முருகனைப் 'பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே' என்று அழைக்கிறது. முருகப் பெருமான் புலவர் தலைவனாய்ச் சங்கமிருந்து தமிழ-ராய்ந்ததாக இறையனார் களவியல் உரை கூறுகிறது. மேலும் இறையனார் களவியலுக்கு உரை பகர்ந்தவன் முருகன் என்பதும் அந்நூல் கருத்து. திருமுருகாற்றுப் படையை புலவராற்றுப் படை என்றும் அழைப்பர். பத்துப்பாட்டிலுள்ள நூல்களைப் பட்டியலிடும் பழைய பாட்டு திருமுருகாற்றுப் படையை 'முருகு' என்றே பெயரிட்டு அழைக்கிறது.

**முக்தி அடைய முருகன் அருள்**
**கொடுத்தான்**
**முத்துக் குமரன் என**
**பெயரி படைத்தான்!**



# Chettiars Hall - Sri Thandayuthapani Temple Sentul, Kuala Lumpur.
# The Highlights of Moolikai Paintings

*By* **SP.S.S.Ramasami, Lebuh Ampang, Kuala Lumpur.**



The Chettiars Hall renovation was started in the Year 2015 and completed in Year 2016. The house warming ceremony was conducted on 4.11.2016. The main idea was to bring in Nattukottai Chettiars palatial architectural design in the old Heritage Hall. The historic old building structure was retained. The interior design was given a total uplift by bringing in the Chettinad architecture.

I like to thank the Temple management for giving me this opportunity, a heartfelt satisfaction to me, and once in a lifetime opportunity to supervise the proceedings of the development. I was mostly involved in the upgrading of the old Heritage Hall. There were Architects and other professional to carry out the development. Myself and the Contractors visited various palatial homes in Chettinad, Tamil Nadu, before the project started.

The highlights in the Heritage Hall is the Moolikai paintings, herbal product, which were imported from India. A group of Moolikai painting artists came from Kurunthampattu, Tamil Nadu, to complete this job. The herbal material was mixed with egg white for better adhesion.

The Moolikai paintings can be found in the Heritage Hall at various levels. The first level of Twenty semi-circle paintings can be found on the top of the twenty rooms. The second level of round shaped Twenty-Two paintings are on the top of the pillars. The continues running paintings with angles, flowers, butterflies and honey bees connects the Twenty-Two painting.

These paintings were selected and painted on the walls based on directions and Vastu Shastra. This is to appease, calm and stabilize the various directions. The building faces the east direction. The paintings were grouped to suit the eight directions and the Vastu concepts.

1. EAST (E) - Indra, Lord of Renewal, Sooriyan.
2. NORTH EAST (NE) - Soma, Lord of Moon, Easan.
3. NORTH (N) - Kubera, Lord of Wealth.
4. NORTH WEST (NW) - Vaya, Lord of Wind.
5. WEST (W) - Varuna, Lord of Ocean.
6. SOUTH WEST (SW) - Nirriti, Lord of Demons.
7. SOUTH (S) - Yama, Lord of Death.
8. SOUTH EAST (SE) - Agni, Lord of Fire.
9. CENTRE – Brahma, Lord of Creator.




The four cross directions in the Hall, namely NE, NW, SW and SE, were suitably assigned for optimum usage as per Vastu Shastra. NE- Office Room with more vacant space to enhance the power of Easan. NW-Room with more openings for wind flow. SW- Storage room with heavy materials to suppress the Demons corner. SE- Room for the main electric power distribution panel to generate heat.

### The First Level of Paintings

This level of paintings is a replica and taken from my ancestral 150 years old palatial family house in Karaikudi, Tamil Nadu. The pictures below are from North East ending at South East, in anti-clock wise directions. These pictures are mainly of Hindu Deities:



*Lord Nataraja, with Ganesha and Meenakshi Amman in NE, Easaniya corner*



*Saraswathi, Education*



*Lord Shiva and Parvathy on Rishabam, with Ganesha and Murugan*



*Guru Maargal Naalvar*



*Guru Ubadesam*



*Gajah Lakshmi, Animal Wealth*



*The Bridegroom's Room, Mapillai in horse*



*The King*





Parkadal Pallikonda Perumal with Lakshmi on Adishesan



Radha Krishna



Chariot (Ratham ) in NW, Wind, Vayu Corner



The Ramar Pattabishagam



Maarkandeyar holding Lord Shiva, protect from Yamadharma Raja in SW, Demons corner



Santhana Lakshmi, Fertility



Gokula Krishna



Dhana Lakshmi, Wealth



Dhaana and Dharmam



Dhaanya Lakshmi, Food



The Brides Room, Meenakshi Kalyanam



Sooriayabhagavan, SE, Agni corner

**The Second level of paintings. From East, in anti-clock wise direction.**

This level depicts pictures with refers to directions, holy rivers of India, holy animals and references to appreciate natural beauty.



*Sun rise – E*



*Mount Kailash- NE*



*Rose – Flowers to Easan in NE*



*Lake Manasarovar, base of Mount Kailash- NE*



*Rock Fort Temple and Kaveri River, Tiruchirappalli, Tamil Nadu*



*Holy Elephants at Mudumalai Forest Reserve, Tamil Nadu*



*Shore Temple, Mahabalipuram, Tamil Nadu*



*Paddy fields, Nature*



*Herd of Deer*



*Lotus, holy flower*



*Holy Parrots in NW*




Holy Parrots in NW


Beach, Ocean in W


Sun Set in W


Courtallam, Heavy Mountains western ghats in SW


Tropical Island, Nature


Tea Plantation, Nature


Angels connecting the paintings


Brindavan gardens, Mysore, Karnataka, nature


Holy Cow and Calf


Ram Jhula Bridge, Ganges River, Rishikesh, Uttarakand


Holy Peacock


Holy Kuthu Vilakku, Heat, SE


Fire crackers, Celebration, Heat, SE



சிவமயம்

## KANTHAR SHASTI VIZHA KAZHAGAM, MADRAS-1

# முருகனின் புகழ் பாடுவோம்

### கா. சந்திரமௌலி, சென்னை –1

செந்தமிழ்ச் சோலையிலே மலர்ந்து மணம் பரப்பும் காவிய மலர்கள் பற்பல அவற்றுள் பாநலம் பழுத்து பயில்வோர்க்கு பக்திச்சுவையையும். இலக்கியச் சுவை யையும் வரையின்றி வழங்குவது பழம்பெரும் தமிழ் நூல்கள். கன்னித் தமிழினிலே எம்பெருமான் முருகனின் புகழ் கூறிடும் நூல்களுக்குத்தான் எண்ணிக்கையுண்டா? அத்துணை சக்திவாய்ந்த முருகனுக்குத்தான் எத்துணை பெயர்கள். எண்ணற்ற இன்பெயர்களைக் கொண்டு சொற்சுவையும், பொருட் சுவையும் கலந்துரைத்து முருகப்பெருமானின் புகழ்பாடிய பைந்தமிழ்ப் புலவர்கள் நம் மிடையே இல்லையெனினும். அவர்கள் எழுதிய காவிய மலர்களின் மணம் குறைய வில்லையல்லவா? முருகனின் புகழைத்தெள்ளத்தெளிவாக. அள்ளித்தந்திடும் அத்தகைய நூல்களைக் கற்றிடுதலை நமது முதல் பணியாகக் கொள்ளல் வேண்டும்.

நவரசமும் கலந்ததுதான் வாழ்க்கை. அந்த நவரசத்திலே கருணை' என்ற சொல்லும் உண்டென்பது அனைவரும் அறிந்ததே. அந்தக் கருணையை நம்மீது பொழிபவன் யார்? இறைவன் இறைவனான முருகனின் புகழ்பாட நாம் செய்திடும் பணியாது? அவனின் புகழ் கூறிடும் நூல்களை யெல்லாம் படித்தல்வேண்டும். கற்றவற்றை மற்றை யோர்க்கு விளக்குதலும் வேண்டும்.

**"தமிழர் என்றோர் இனமுண்டு**
**தனியே அவர்க்கோர் குணமுண்டு"**

என்றார் நாமக்கல் கவிஞர். அவரின் கருத்தினை பொய்யாக்குதல் முறையன்று. அத்தகைய தனிக்குணம் வாய்ந்த தமிழர்கள் தெள்ளு தமிழினிலே உள்ள அழகு முருகனின் அரும்புராணத்தை அறிந்து கொள்வதில் ஆர்வம் கொண்டிடல் வேண்டும். இறைவன் முருகனின் புகழ்பாடும் நூல்களான திருமுருகாற்றுப்படை. கந்தபுராணம் போன்ற வற்றையும்.மற்றும் எண்ணற்ற அவனின் புகழ்கூறும் நூல்களையும் கற்று அவனை நினைந்துருகித்துதித்திடல் வேண்டும்.

**"வலிமையுடையது தெய்வம் நம்மை**
**வாழ்ந்திடச் செய்வதும் தெய்வம்"**



என்பதனை மறவாமல் என்றும் முருகனின் புகழ் பாடுவோமாக.

## முருகப் பெருமான் வெள்ளி விமானத்தில் ஆரோகணித்து பவனிவரும் திருவிழாக்கள்.

| | |
|---|---|
| கோலாலம்பூர் – பங்குனி உத்திரம் | ஈப்போ – வைகாசி விசாகம் |
| கிள்ளான் – திருக்கார்த்திகை | மலாக்கா – மாசிமகம் |
| மூவார் – திருக்கார்த்திகை | அலோர்ஸ்டார் – மாசிமகம் |
| தெலுக் இந்தான் – சித்ரா பௌர்ணமி | பினாங்கு – தைப்பூசம் |
| தைப்பிங் – ஆடி வேல் | புக்கிட் மெர்டாஜாம் – தைப்பூசம் |



# அழகென்னும் தமிழ் தெய்வம்

கலைமாமணி முனைவர் சாரதா நம்பி ஆரூரன்
சென்னை, தமிழகம்



முருகன் வழிபாடு மிகவும் பழமையானது. கி.மு.5000 ஆண்டுகளுக்கு முன்பே சிந்து சமவெளி மக்கள் முருகனை வழிப்பட்டதாக ஆய்வாளர்கள் நிறுவியுள்ளனர்.

மனித நாகரிகத்தின் தொட்டிலெனத் திகழ்ந்தது லெமூரியாக் கண்டம் என்பது அறிஞர் ஸ்காட் எலியட் கருத்தாகும். இக்கண்டத்தின் மலை முகடுகளிலேயே மனிதன் தோன்றியதாகவும், நாகரிகம் மலர்ந்ததாகவும் அவரது ஆய்வு கூறுகிறது. இங்கிருந்த மகேந்திர மலையில் முருகன் ஆலயம் இருந்தது என்று மக்கள் நம்புவதாக "கடல் கொண்ட குமரிக் கண்டம்" என்ற நூலில் பன்மொழிப்புலவர் கா.அப்பாதுரையார் குறித்துள்ளார்.

தமிழகத்தில் வேல் வழிபாடு மிகப் பழமையானது. ஆதிச்சநல்லூர் புதை பொருளாரா- ய்ச்சியில் வெண்கலத்தால் செய்த வேல், சேவற் சின்னம், காவடியில் பயன்படுத்தும் பொருட்கள் கிடைத்துள்ளன. இவை கி.மு.1000 ஆண்டைச் சார்ந்தது.

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்பது தமிழர் கொள்கை. தமிழ் நாட்டு வணிகப் பெருமக்களே முருக வழிப்பாட்டை உலகறிய எடுத்துச் செற்றிருக்க வேண்டும்.

"முருகனே தமிழ்; தமிழே முருகன்' என்பதில் ஐயமில்லை. பன்னிரு தோள்கள் முருகனுக்கு; பன்னிரெண்டு உயிரெழுத்துக்கள் தமிழில்; பதினெட்டு கண்கள் - பதினெட்டு மெய்யெழுத்துக்கள் ஆறு முகங்கள் - வல்லினம், மெல்லினம்,இடையினம் ஒவ்வொன்றிலும் ஆறு எழுத்துக்கள் - வேலாயுதம் -ஆயுத எழுத்து. உயிர் எழுத்து, மெய்யெழுத்து இரண்டும் எம் பெருமானின் இணையடிகளாகத் திகழ்கின்றன. முதல் தமிழ்ச் சங்கத்தில் புலவன் : ஓங்காரத்தின் பொருளைத் தமிழில் தந்தைக்கு உபதேசித்தவன்; அகத்தியருக்குத் தமிழ் கற்பித்த குருநாதன்; சொல்லற



சும்மா இரு "என்று அருணகிரிக்கு உபதேசித்தவன்; 'திகடச் சக்கரம் செம்முகம் ஐந்துளான்' என்று கந்தபுராணத்திற்கு அடியெடுத்துக் கொடுத்தவன்; ஊமைப் பிள்ளையாயிருந்த குமர குருபரனுக்குப் பேச்சாற்றல் தந்து, கவிபாடும் புலமையும் தந்து கந்தர் கலிவெண்பா பாடக் கருணை செய்த வள்ளல்.

**வைதாரையும் வாழ வைக்கும் அருள் வள்ளல்!**
**மொயி தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்**
**வைதாரையும் அங்கு வாழ வைப்போன் என்றும்,**
**இதமொழி பகரினும் மதமொழி பகரினும் ஏழைக்கிரங்கும் பெருமாளே!**



என்றும் போற்றுகின்றார் அருணகிரிநாதர் முற்பிறவியின் நற்பயனாய் முருகப் பெருமான் அருணகிரிநாதருக்கு காட்சிபளித்து. அவருடைய நாவில் பிரணவ மந்திரத்தை எழுதி, பாடும் திறத்தை வயலூரில் வழங்கினார்.

## குறை தீர்க்கும் குணம் உண்டு

**தெய்வத்திரு பழ. நாகப்பன் (குகனடிப்பொடி)**



**வேலைத் தந்திடுக வினையை வீழ்த்திடுக**
**காலைத் தந்திடுக கருணை பொழிந்திடுக**
**கோலைத் தந்திடுக கொடுமை களைந்திடுக**
**பாலைத் தந்திடுக பாவத்தை ஒழித்திடுக**
**தேனைத் தந்திடுக தேட்டைப் பெருக்கிடுக**
**சீலந் தந்திடுக சிந்தை நிறைந்திடுக**
**மாலை தந்திடுக மாயை அழித்திடுக**
**வாளைத் தந்திடுக வாழ்வைச் சிறப்பிடுக**
**ஆணை தந்திடுக ஆறுதலை அளித்திடுக**
**அடியை தந்திடுக அருளைப் பொழிந்திடுக.**



உ
சிவமயம்
கோலாலம்பூர் உறை கோலாகல முருகன்.



## ஓம் சரவணபவ ஓம் சரவணபவ ஓம் சரவணபவ முருகா

செந்தூலிலிருந்தாலும் திருச்செந்தூரிலிருந்தாலும்
கந்தா முருகா என அழைத்தால் கனிவா ய்
சொந்தமெனக் கொண்டாடும் செட்டிமக்களுக்கு
வந்தருள வேண்டும் வள்ளி மணவாளா

ஈயவளம் செழித்தோங்கும் செந்தூல் முருகா
ஈழநாட்டில் ஈசன் மகனுக்கு எண்ணற்ற
ஆலயங்கள்
கதிர்காம கந்தன் நல்லூர் கந்தசுவாமி
பர்மா ரங்கூனில் ஆறறையில் ஆறுமுகனுக்கு சிறப்பு மிகு ஆலயமாம்
கடாரத்தில் கந்னுக்கு கவின்மிகு கோயில்
முத்துநகர் முதல் கூவார் நகர்வரை முத்தான முத்தையனுக்கு குடில்கள் பலவே
அத்தனையும் நம் முன்னோர்கள் அமைத்தவையே

பவுர்ணமி சித்திரையில் ஜாவி
தெலுக்கிந்தான்
விசாகம் வைகாசியில்
வாலப்பூர், ஈயநகர் ஈப்போ
பூரமாம் ஆடியில் குளிர்மிகு தைப்பிங்
திருக்கார்த்திகையிலோ பத்துபாகாட், கூவார்
பூசமாம் தையில் முத்துநகர் தண்ணீர்மலை
மாசியில் மகத்தில்
அலோர்ஸ்டார், மலாக்கா சன்னாசி மலை
உத்திரமாம் பங்குனியில் சுங்கை ரம்பை, கோலாலம்பூர்
என ஆண்டுதோறும்
விழாக் காணும் அருள்மிகு கந்தனவன்

தமையனுக்கு உச்சி (பிள்ளையார்) மலை, கோர்ட்டுமலை
தந்தைக்கோ பனிசூழ் கைலாயமலை, ஜோதிமிகு அண்ணாமலை
மலையப்பன் மாமானுக்கு புஷ்கரணி ஏழுமலை
இங்கே
மலையகத்தே அருள்மிகு தண்ணீர்மலை, பக்திமிகு பத்துமலை
தென்னகத்திலோ எண்ணிலடங்கா குன்றும், மலையும் குமரேசா உனதே

அறுபடை வீடமர்ந்து அருள் தரும் முருகா
கூறும் அடியார் குறை
நீக்கும் குன்றமர் வேலா
ஏறு முகமாய் எம்குடி நாளும் தழைத்திடவே
நல்லருள்தான் புரிந்திடையா பஞ்சாமிர்த பழனியம்பதி வேலா
கன்னியரும் காளையரும் காலத்தே மணமாலை பெற்றிடவே
பன்னிருகையோனே
பரந்தாமான் மருமகனேயுனை
வாழ்த்துகிறோம் மனமார, நெஞ்சார வழங்கிடுவாய் வரங்களையே.

ஓம் சரவணபவ ஓம் சரவணபவ ஓம் சரவணபவ முருகா.



ஆக்கம்
***சி. ராம. பழனியப்பன்***
சினாங்கு (தேவகோட்டை)



# முக்கண் முதல்வனும் மூன்று எண்ணும்

## என். எஸ். நாராயணன், சிங்கப்பூர்



உலக நாயகன், தில்லைக் கூத்தன் சிவபெருமானுக்கு, முக்கண் முதல்வன் என்னும் பெயர். ஆக்கல் தெய்வமாக பிரம்மனையும், காத்தல் தெய்வமாக பெருமாளையும், அழித்து உயிர்களுக்குச் சிவபதவி தரும் தெய்வமாக பரமசிவனையும் ஏற்றிருப்பதே இந்து சமயம். நெற்றிக் கண்ணுடன், மூன்று கண்ணுடையவனாக விளங்குபவன், உலகாளும், வெள்ளிமலைத் தலைவன்.

இந்து மதத்தின் அதீத இறை நம்பிக்கை கொண்டவர்களின் அசையாகக் கொள்கையை நிரூபிப்பது குறிக்கோள் அல்ல. அதனினும் மேலாக, இந்தியர் வாழ்க்கையில் மூன்றென்னும் எண்ணிக்கை, எங்ஙனம் காலங்காலமாகப் பங்காற்றி வந்திருக்கின்றது என்பதை, ஆதாரத்துடன் எடுத்துக்காட்டுவதே நோக்கம்.

முதன்முதலாக எண்கள் கண்டறியப்பட்டது, மெஸோபொட்டேமியாவின் லெமோரிய கலசாரத்தில் என்பது, உலகு ஏற்றுக்கொண்ட உண்மை. காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டு. அதன் பிறகு கிமு 5ஆம் ஆண்டு வாக்கில், இந்தியாவில் அந்த எண்ணில், சில மாற்றம் நிகழ்ந்தது என்றும் கண்டறியப்பட்டிருக்கிறது.

முதலில் தோன்றியன, ஒன்றிலிருந்து ஒன்பது வரையிலான எண்கள். (ஒன்பது எண்களையும் மூன்றால் வகுத்தால், வரும் விடையும் மூன்றே)! மூன்றுதான், முதல் ஒற்றைப்-படை பகா நிலை எண் ( first odd prime number).

உலகுக்குப் பயனளித்த மிக முக்கிய எண், பூஜ்ஜியம் என்னும் இன்மைக்குறி இலக்கம்!

மதத்தை அடிகோலாகக் கொண்டு தத்துவ ஆராய்ச்சி மேற்கொண்டால், அதன் மூன்று கூறுகளாக விளங்குபவை, இறைவன், உயிர், உலகம்.

மனிதப் பிறவியில் தவிர்க்க முடியாதவை, ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலம்.

நானே சிறந்தவன், பிறர் தாழ்ந்தவர் என்னும் ஆணவமும், தீய எண்ணங்களால் ஏற்படும் தீவினை என்னும் கன்மமும், பொய்மையை உண்மையாக நினைத்து மயங்கிக் கிடக்கும் மாயையும், நாம் இறை என்னும் பேரொளியோடு இணையத் தடையாக இருக்கின்றன.

மலம் என்பது கழிவுப்பொருள். அது தங்குமிடத்தில், மனப் புனிதம் கெடும், நோய்கள் கூடும். எனவே நம் உடலுடன், உயிர் வாழுமிடத்தில் மும்மலம் அகற்றப்பட வேண்டும்! மும்மலத்தை ஒழித்தால், பிறப்பற்ற பெருநிலை உருவாகும். அது, நம்மை இறை சொரூபமாக்கிவிடும் என்பது இந்து மத நம்பிக்கை.

'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்பது தமிழரின் அசையா நம்பிக்கை. அந்த எண்ணிலும் எழுத்திலும் கூட, மூன்று, பெரும் பங்கு வகிக்கின்றது.



உலகின் முதல் மொழி தமிழே என்பதில் பொதுவாக ஐயப்பாடில்லை. அலெக்ஸ் கோலியர் என்னும் அமெரிக்க மொழியியல் வல்லுநர், இந்தக் கோளின் முதல்மொழி தமிழாய் இருக்கலாம் என்பதை, பல்லாண்டுக்கு முன்னர் தெரிவித்தார் என்றபோதும், அதை நிரூபிக்க முயற்சிகள் இன்றும் தொடர்கின்றன.

தமிழ்மொழியில், ஆய்த எழுத்து, உயிரெழுத்து வரிசையின் கடைசி எழுத்தாய், மூன்று புள்ளிகளுடன் இடம்பெறுகின்றது. அது முருகவேளின் வேலில் காணப்படும் புள்ளிகளைப் போல இருப்பதால் அது ஆய்த (வேல்) எழுத்து எனக் குறிக்கப்படுகிறது.



மொழி இலக்கணப்படி, எழுத்துகள் உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து என முன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. உடலும் உயிரும் சேர்ந்தால்தான், உடலில் மற்றோர் உயிர் உருவாகும் என்பதைச் சூசகமாகவே இந்தத் தத்துவம் விளக்குகின்றது.

அதனால், உயிரெழுத்தான அ-வும், மெய்யெழுத்தான (புள்ளி வைக்கப்பட்ட) ம்-மும் சேர்ந்தால், மா என்னும் மற்றோர் எழுத்து உருவாகின்றது. அதை, நாம் உயிர்மெய்யெழுத்து எனக் குறிப்பிடுகின்றோம். ஆக, தமிழில், உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூன்று வகையில், பரிணாம வளர்ச்சிக்கொப்பாக, தமிழ் எழுத்திலக்கணம் தொடங்குகிறது.

அதன் பிறகு, எழுத்துகள், வல்லினம், மெல்லினம், இடையினம் என ஆறு எழுத்துக்கள் அடங்கிய மூன்று வகையறாவாகப் பிரிகின்றன. அவையாவன, க, ச, ட, த, ப, ற (வல்லினம்), ங, ஞ, ண, ந, ம, ன (மெல்லினம்), ய, ர, ல, வ, ழ, ள (இடையினம்).

உயிரெழுத்தில், சுட்டெழுத்து என இடம் சுட்டிக்காட்டும் இலக்கு எழுத்துக்கள் மூன்று இருக்கின்றன. அவையாவன, அ, இ, உ

உலகின் முதல் மொழியாம் தமிழ் தன்னகத்தே கொண்ட ஒப்பற்ற சிறப்பு என்னவெனில், இடையினம், மூவகை லகர, ளகர, ழகர உச்சரிப்புகளைக் கொண்டிருப்பது.

உலகில் 'ல' என்பது பெரும்பாலான மொழிகளில் பொதுவான உச்சரிப்பாக இருக்கிறது. 'ல' என்னும் உச்சரிப்பை நம்மவர்கள் ஏராளமானோர் தவறாக உச்சரிப்பதால், அது 'ள' என ஒலிக்கும். தவறுதான். எனினும், 'ள' என்னும் எழுத்தில் நம் மொழியில் நிறையச் சொற்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆயினும், உலக மொழி எதிலும் இல்லாத உச்சரிப்பை தமிழர்கள் பெற்றது, 'ழ' என்னும் உச்சரிப்புடன் ஒலிக்கும் எழுத்தினால்! அது வரம்!. நம் மொழியின் உச்சாணிப் பெருமை என்பதைச் சிரசுயர்த்தி, எக்காளத்துடன் நாம் முழங்கலாம். (உலகின் வேறு இரு மொழிகளில் வேறு வகையான ழகர உச்சரிப்பு இருக்கின்றன. என்றாலும், அம்மொழிகள் தமிழ்மொழி தோன்றிய பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரே வழக்கிற்கு வந்தவை)!.

அது மட்டுமின்றி, மூவகை உச்சரிப்புக்கொண்ட தமிழ்ச் சொற்கள் ஏராளம்.

விலை, விளை, விழை இலை, இளை, இழை.. தலை, தளை, தழை..

எனப் பல சொற்களைப் பட்டியலிடலாம்! இடையினச் சொற்கள் ல, ள, ழ ஆகிய மூன்றுமே, ஒன்றுசேர்ந்து வரும் ஒரு தமிழ்ச்சொல் - "தொழிலாளி" (மற்றொன்று - மொழியியலாளர்கள்).

நமக்குப் பெற்றுத் தந்திருக்கும் மற்ற பெருமைமிகு பிரிவு, இசை.

தமிழர்களுக்கு இசை மும்மூர்த்திகளாக இன்றும், இனி என்றும் விளங்குவோர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் (1767-1835), ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சதர் (1776-1835), ஸ்ரீ சியாமா சாஸ்திரி ஸ்வாமி (1762-1827) ஆகியோரே.

மூவருமே 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிறந்து, 19ம் நூற்றாண்டின் முதற்பகுதியில் மறைந்தும், மறையாச் சூரியன் ஆனார்கள். திருவாரூரில் தோன்றியவர்கள் இருவர், மற்றவர் வைத்தீஸ்வரன் கோவிலில் உதயமானார்.

மூவருமே தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளில் தேர்ச்சி பெற்றவர்கள்.

மூவரும் தடம் சமைத்து, அடிகோலிய மகத்தான இசைச் சாலையில்தான், இதுகாறும், நம்மவர்கள் எண்ணற்றோர், தொடர்ந்து இசைப்பயணம் மேற்கொள்கின்றனர்.



இசை விற்பன்னர்களின் மனம், அறிவு, குரல் ஆகிய மூன்று ஊற்றிலிருந்தது வெளிப்படும் இசையே, மூவகை இசைக்கருவிகள் வழியாக, இன்று வரை இசைக்கப்பட்டு, இறவாப் புகழுடன் வாழ்ந்து, வாழ்வித்து வருகின்றன. இசைக்கருவிகள், தோற்கருவி, துளைக் கருவி, நரம்புத் தந்திக் கருவி என்னும், மூவகைக் கருவிகளே.





சிறப்பு என்னவெனில், தோற்கருவி முழவு எனவும், துளைக் கருவி குழல் எனவும், தந்திக் கருவி யாழ் எனவும், தமிழுக்கே உரிய சிறப்பு எழுத்தான ழகரத்தால் குறிப்பிடப்படுவது!

தமிழில் மிக அதிகமான சொற்கள் மூன்றெழுத்துக்களால் அமையப் பெற்றிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கச் சிறப்பு! மனித வாழ்வுக்கு இன்றியமையாத அறம், பொருள், உறவு ஆகியவற்றுடன் அவை பிணைந்திருக்கின்றன என்பதும் குறிப்பிடத்-தக்கது.

அம்மா, அப்பா, தம்பி, தங்கை, மாமன், அத்தை, தாத்தா, பாட்டி, மனைவி, பணம், நன்மை, உண்மை, நேர்மை, பற்று, கடமை, தமிழ், மொழி, கவிதை, பாடல், அன்பு, பண்பு, காதல், உறவு, மணம், மேன்மை, உழவு, உணவு, அரிசி, உயிர், உடல், மனம், நினைவு, பக்தி, புத்தி, முக்தி, என மூன்றேழுத்துச் சொற்களை அடுக்கிக்கொண்டே போகலாம்.

வானம், நிலம், கடல் ஆகியவை உலக எல்லை. சுவர்க்கம், நரகம், திரிசங்கு ஆகியன, உடலுக்குள் சஞ்சரிக்கும் மனித உயிர் வாழ்வின் இறுதியில், தஞ்சமடையும் தலம்!

மானுடனுக்கு, நீதிமன்றத்தில் நீதி வழங்கப்படுகிறது. நீதி மட்டும், இரட்டைப்பட இன்றி, ஒற்றைப்பட இருத்தல்தான் நியாயம்! எந்தப் போட்டியிலும் கூட, அது தான் வெற்றி நிலை! அதனால்தான் நீதிக்காகப் போராடுவோருக்கு, இரட்டைப் படையின்றி, ஒருவர், அல்லது மூவர் என ஒற்றைப் படை இருக்கும் நீதிக் குழுவே சரியான மனுநீதி வழங்குகிறதோ?

எல்லாம், அவன் செயல்!

இறைவா போற்றி! வாழிய..நலம் ஓங்க!

(எல்லாமும் மூன்றெழுத்து!).

அன்பே சிவம்!



# சுவாமி என்றாலே சுப்பிரமணியர் தான்!

கடவுள் என்பதை சமஸ்கிருதத்தில் 'சுவாமி' என்பர். விநாயகர், சிவன், விஷ்ணு என எல்லா கடவுளரையும் பொதுவாக சுவாமி என குறிப்பிட்டாலும் சமஸ்கிருதத்தில் இச்சொல் சுப்பிரமணியரை மட்டுமே குறிக்கிறது. அமர கோசம் என்னும் புகழ்பெற்ற சமஸ்கிருத அகராதியில் இதற்கான சான்று உள்ளது. 'அமர கோசம்' என்றால் 'அழிவில்லாத பொக்கிஷம்' என்பது பொருள்.

**முருகனுக்கு பெருமாள் பெயர்**

அருணகிரிநாதர் முருகனை 'பெருமாள்' என்று குறிப்பிடுகிறார். அவர் எழுதிய திருப்புகழ் நூலில், ஒவ்வொரு பாடலின் கடைசி வரியிலும், 'பெருமாளே' என்ற சொல் இடம்பெறும். 'பெருமாள்' என்பது திருமாலைக் குறிக்கும் சொல்லாகவே இன்று வரை இருந்து வருகிறது. முருகனை தமிழக மக்கள் திருமாலின் மருமகன் என்பதால் 'மால்மருகன்' என்று அழைப்பர். முருகனை மணந்த இந்திரனின் மகள் தெய்வானை, நம்பி ராஜன் மகள் வள்ளி இருவரும் திருமாலின் மகள்களாக முற்பிறவியில் அமுதவல்லி, சுந்தரவல்லியாக வளர்ந்தனர். பின்னரே முருகனை மணக்கும் பேறு பெற்றனர். சிவ, விஷ்ணு இருவருக்கும் பாலமாக சிவபாலனாகவும், மால் மருகனாகவும் முருகன் விளங்குகிறார்.

**முருகன் கதை கேட்டா 'லாபம்'**

காளிதாசர் எழுதிய காவியங்களில் குமார சம்பவம் புகழ்பெற்றது. வால்மீகி ராமாயணத்தில் இருந்தே காளிதாசர் இந்த சொல்லை எடுத்தாண்டுள்ளார். விஸ்வாமித்திரர் பாலகாண்டத்தில் ராமலட்சுமணருக்கு முருகனின் வரலாற்றை எடுத்துச் சொல்லியதாக ராமாயணம் கூறுகிறது. குமார சம்பவம் என்னும் இப்புனிதமான கதையைக் கேட்டவருக்கு செல்வம் சேரும். கார்த்திகேயனிடம் பக்தி வைத்தவருக்கு இப்பிறவியில் தீர்க்காயுள், மழலைச்செலவம் போன்ற பாக்கியம் உண்டாவதோடு ஸ்கந்த லோகத்தில் வாழும் பாக்கியமும் வாய்க்கும் என்பதே நம்பிக்கை.



# கட்டியம்

**எச்சரிக்கை**

சீர்வள ருங்கதிர் மாமலை மேவிய
செந்தமிழின் வாசா
செந்தமிழின் வாசா - இந்தப்
பாருல கத்தில் அடியவர் போற்றிடும் பாலகுமரேசா!
வானவர் தானவர் மாமுனி வோர்தொழும்
வான்மயில் வாகனனே
வான்மயில் வாகனனே - தொந்தி
யானைமுகனுக் கிளைய பராபரமாகிய வேலவனே!
பச்சை மரகத மேனியுறும் வாலை
பார்வதி பாலகனே
பார்வதி பாலகனே - துய்ய
நச்சர வில்துயில் ராமன் மருமகனாகிய வேலவனே!
அசுரர்கள் தேகம் திரள் திடீரென
அற்று விழத்தானே
அற்று விழத்தானே - அதிவீரமுள்ள
வெற்றி வேல்விட் டெறிந்தவோர் ஆறு முகத்தானே!
கந்தா கடம்பா குகா ஞான சண்முகா
காலாயுதப் பொருளே!
காலாயுதப் பொருளே! - உன்னைவந்து பணிந்த
அடியவர்க்கு வரம் தந்திடும் மெய்ப்பொருளே!

**கட்டியம்**

சண்ட பிரசண்ட வீதண்ட மூதண்டகோ
தண்டபாணிக்கு மருகன்
தத்திமித்தாள மோடொத்து நின்றாடிய
சதாசிவம் பெற்ற முருகன்
தண்டமிழ் நிறைந்திடும் அண்டரும் முனிவரும்
தாள் வணங்கிய வேலவன்
சாலோக சாமீப சாருப சாயுச்ய
சகல மோட்ச அதிகார கர்த்தன்
அகோதைப்படியென்றால்
ஜாங்கரற்கிளைய ஆறுமா முகவன்
ஈஸ்வரி புதல்வன் ஈராறு புயத்தோன்
வள்ளி தெய்வானை மனமகிழ் கொழுநன்
சேவற் கொடியோன் சிகிவா கனத்தோன்
கருணா கடாக்ஷ வீட்சண்ணிய அலங்காரன்
உத்தண்ட மண்டலீகரன்,
மதன மோகன வசீகரன்,
பஞ்ச பாண அவதாரன்,
அஷ்ட ஐஸ்வரிய சம்பன்னன்,
ஷ்ட நிக்ர சிஷ்டபரி பாலன்,
மந்த்ரமகா மாணிக்க மகுடாலங்காரன்
அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகன்,
ஆபத் பாந்தவன் அனாதைரட்சகன்
அனந்தகோடி அண்டங்களும் இருநூற்று
இருபத்து நாலு புவனங்களும்
சப்தசாகரஞ் சூழா நின்ற ஈரேழுபதினாலு லோகமும்
காக்கும் வேலையே கைக்கொண்டு ஏகசக்ராதி
பத்தியஞ் செலுத்தி

ஒப்பற்ற சுந்தரவட்டக் குடையின்
நிழலிருந்தருளப் பெற்ற
சிவசுப்பிரமணியக் கடவுள் அன்னதான முதல்
பற்பல தானங்கள் செய்து இன்றைய தினம்
சிங்கப்பூர் வாழ் அனைவரையும்
அருள் புரிந்தோமென்றும் ஆள்கிறோமென்றும்
தீர்த்தப் பிரசாதம் திருநீறு கொடுத்துப்
பாவையராட பல்லியம் முழங்க,
நாவலர் போற்ற நல்விருதுடனே,
குவலயம் புகழும் சிங்கையம்பதியில்
விண்ணளவோங்க
எண்ணிலா வணிகர் பொன்னினாற் செய்த
புனித மண்டபத்திற்
நவரத்தினமும் நனிபெற இழைத்த,
தமது ரத்தின சிம்மாசனக் கொலுவிற்கு
இதோ எழுந்தருளி வருகிறார்,
வெகுபராக் எச்சரிக்கை.

**உற்சவம் ஆலயத்திற்கு வெளியே வரும் போதும்,**
**ஆலயத்திற்குள் வரும் போது**
**கூறப்படும் "எச்சரிக்கை" கட்டியம் இது.**





# தமிழ் எனது தாய்மொழி

## மேகலை சொக்கலிங்கம்

### தாய்மொழி என்றால் என்ன?

எனக்கு அது என் அம்மா எனக்கு பாலூட்டி, சோறு ஊட்டும் பொழுது, சிறு வயதிலிருந்தே என்னுடன் உரையாடிய மொழி தமிழில் பேச ஆரம்பித்த அந்தக் காலம் முதல், என் வாழ்வில் தமிழ் என்பது வெறும் மொழி மட்டும் அல்ல, என் கலாச்சாரத்தின் ஒரு பகுதியாகி விட்டது. என் தாய்மொழி என்ற உணர்வு, நான் பிறந்த நாளிலிருந்தே என் மனதில் தமிழ் வேரூன்றி நின்றதா என்ற கேள்வி எழும் பொழுது பதில் சொல்ல சற்று கடுமையாகவே உள்ளது.

நான் ஒரு காலகட்டத்தில் முடிந்தவரை, ஆங்கிலத்தில் தான் உரையாட விரும்பினேன். தமிழில் பேசி விட்டால் நம்மை குறைத்து மதிப்பிடுவார்கள் என்று எனக்குள் ஒரு எண்ணம். ஏன் இந்த எண்ணம் என்றால், நமது தமிழ் சமுதாயத்தில் ஓரளவு படித்த அல்லது பணம் படைத்த மக்கள் ஆங்கிலத்தில் தான் உரையாடுவார்கள் என்று ஒரு அனுமானத்தைக் கொண்டிருந்தேன் இன்று, நான் அப்படி நினைப்பதில்லை.

### அதற்குப் பல காரணங்கள்

எனது தாய்மொழி தமிழ் அதனால் மொழியை நன்றாக கற்க வேண்டும் என்ற ஆசை காவியத் தமிழ் தெரியவில்லையெனினும், நடைத் தமிழ்/உரைத் தமிழ் ஆளுமை வேண்டும் என்று எண்ணினேன். இக்கருத்து எல்லாருக்கும் பொருந்தாது இன்று பலரின் தாய்மொழி ஆங்கிலம் - பல தாய்களும் தந்தையரும் குழந்தைகளுடன், ஆங்கிலத்தில் தான் பேசுகிறார்கள்.

தமிழ் என்பது தனித்துவமான மொழி மட்டுமல்ல, அது ஒரு பூர்வீக கலாச்சாரத்துடன் விரிவான பாரம்பரியத்தை கொண்ட மொழியாகும் தமிழில் கவிதைகள், காவியங்கள், இலக்கியங்கள், கலை, இசை, நாடகம், சினிமா என பல துறைகளில் பெருமை சேர்த்துள்ள அந்தச் சிறந்த மொழி, ஒரு காலத்தில் உலகின் பல நாடுகளில் தமிழின் பெருமை நிலைத்து நின்றது. அந்தப் பெருமையை நம்முடைய பூர்விகர்கள் உலகத்துக்குக் கொடுத்தது.

இன்றைய சமுதாயத்தில், தமிழ் பேசும் சமூகத்தின் நிலை சற்று மாறியுள்ளது. நமது அடுத்த தலைமுறைக்கு தமிழை எவ்வாறு கற்றுத் தருவது, எவ்வாறு பராமரிப்பது என்பதே இன்றைய கேள்வியாக இருக்கின்றது. தமிழின் முக்கியத்துவத்தை உணர்ந்து, நம் கலாச்சாரத்தை அதே பாசத்துடன் பராமரித்து, அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லுவதற்கும் நமக்கு தமிழ் ஒரு முக்கிய மொழியாக இருக்க வேண்டும்.



காலத்திற்கு ஏற்ப, நம் சூழ்நிலைக்கு ஏற்ப நாம் நம்மை மாற்றிக்கொள்ள வேண்டும். ஜெர்மனியில், சீனாவில் இருந்து கொண்டு தமிழ்தான் பேசுவேன் என்று சொல்ல முடியாது அந்த நாட்டின் மொழியில் பேச தெரிந்தால் நமது முன்னேற்றத்திற்கு அது வழி வகுக்கும். அதே போல தமிழ் என்பது என் கலாச்சாரத்தின் அடையாளம், அது எங்கு சென்றாலும், எப்போது பேசினாலும், அதன் பெருமை எப்படியும் அழியாது அதே மொழி வழியாக கலாச்சாரத்தை என்னால் பின்பற்ற முடியும் என்பது எனது எண்ணம்.

நான் தமிழில் பேசுவதன் மூலம், என் பிள்ளைகளை அந்த மொழியில் வளர்த்துப் பராமரிப்பதற்கான வழிகாட்டியாக இருக்க முயல்கிறேன் .

எனது தாய்மொழி என்பது எனது வேர். ஒரு மரம் பூத்துப் பரவும்போது, அதன் வேரும் வலுவாக நிலைத்திருப்பது முக்கியம், தமிழும் அதுபோன்றே நான் ஒரு மரம் என்றால், தமிழ் எனது வேர். அந்த வேர் எவ்வளவு வலுப்பெறுகிறதோ, அந்த அளவுக்கு உறுதியுடன் நிலைத்து நிற்கும் இந்த மரம். மரம் நன்றாக வளர்வதற்கு, நமது பல சூழ்நிலைகள் காரணமாக இருந்தாலும், நமது வேரும் வலுவாக இருந்தால், எந்த சூழ்நிலையிலும் நமது மரம் நிலைத்து நின்று விடும்.

தமிழ் எனது தாய்மொழி என்றால், அம்மொழியை நான் ஆர்வத்துடன் வளர்க்க வேண்டும் தமிழ் எனது மொழி, என் அடையாளம், என் கலாச்சாரம் என்ற உணர்வு இன்று என் உள்ளத்திலே இருக்கின்றது.



எனது தமிழ் கடவுள் முருகனை, தண்டாயுதபாணி, குமரன் என்று பல பெயர்களில் அழைக்கின்றேன் என் தாய்மொழியில் அவரை ஆராதனை செய்வதில் எனக்கு ஒரு பெருமிதம். தமிழ் எனது தமிழ் கடவுளுடன் நான் உரையாடும் மொழி என் கடவுளை தமிழில் பாராயணம் செய்யும் போது, நான் குழந்தை ஆகிவிடுகிறேன் . அப்பா அம்மாவிடம் உரையாடுவது போல் ஒரு நினைப்பு - தமிழ் எனது தாய்மொழி அல்லவா? எதைப்பற்றியும் பேசுவேன் எதை வேண்டுமென்றாலும் கொடுக்கும்படி கேட்பேன் அப்பா அம்மாவை போல, 'எவர் எவர் இச்சையில் எவை எவை உற்றது' என்பதை முழுமையாக அறிந்தவர் முருகன் அவர் தன்னுடைய அருளால் அவற்றை வழங்குவார் தமிழ் எனது அடையாளம் என் கலாச்சாரத்தின் ஆணிவேர்! அதனால் தான் தமிழுக்கும் அமுதம் என்று பெயர்.

**மேகலை சொக்கலிங்கம்**

ஆலோர் ஸ்டார்



# The Cosmic Square

*By SP.S.S. Ramasami, Lebuh Ampang, Kuala Lumpur.*

Vastu Shastra is the correct use of space within a living area. Vastu literally means dwelling and shastra means knowledge. The message of Vastu Shastra is that if we build our living space to reflect the positive vibrations of the universe, our soul and physical selves will exist in harmony with the universe and we will be happier and successful.

The shape "Square" is the most powerful symbol in the universe. The entire cosmos or universe is imagined to be square in shape, with side and corners. The Cosmic Square is thought to unite two pairs of opposites- East and West, the directions of sunrise and sunset, and North and South, the directions of cold and heat, in total four main directions. The four cross directional points between these absolutes, NE, NW, SW and SE, express the various inter relationships between heat beginnings and cold endings. The North-South line is called the "Fire Line", the back bone of the universe. The East-West line is called "Water Line" signifies the creative force. Lines going corner to corner is called "Wind Line" associated with energy and movement. Combined these forces form a universal motivating force, Brahma, the creator, at the Centre. The three universal force are "Sattva" positive energy, "Tamas" negative energy and "Rajas" is midway. The Cosmic Square is visualized as a Vedic Diagram and as a map of a body, called the Vastu Purusha. The head at NE, foot at SW and the heart at the centre. Each of the nine directions of the Cosmic Square Diagram is shown below with cross reference to the following items.

1.Deity
2.The five natural elements, called the Pancha Boodthas.
3.The universal forces -Sattva, Tamas and Rajas.
4.Planets, the Navagraha.
5.Navagraha temples in Tamil Nadu.
6.Day of the week.
7.Season.
8.Grains, the Navadhanyam
9.Metal.
10.Gender.
11.Sense.
12.Zodic, the Rasi.
13.Navarathna stones.
14.Symbol and shapes.
15.The most suitable room/ place to put up in a house /dwelling unit in a given direction.
16.Avatar.
17.Colours.
18.Vastu Purusha body part.
19.Heavy Load and weight placing in a dwelling unit.
20.Decor and Appeasement.

The above 20 points has been referred to each of the nine directions here in a table format for quick reference. The decor and appeasement method can be an easy and economical remedy to correct Vastu defects in a given direction in a dwelling unit.

Reference: An Introduction To Vastu, The Hindu tradition of arranging home to improve health and wellbeing by Jonathan Dee, and other references from various books.

# COSMIC SQUARE



### EAST E

The Direction of Health and Vitality. East is youthfulness. The direction of sunrise and male energy. The direction of knowledge, energy and careers. The direction of Indra, the lord of thunderbolt and the King of Vedic Gods. He is a beautiful king with golden skin riding an elephant.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Indra |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Fire + Aether (space) |
| 3 | Three Universal Forces, Trigunas | Sattva + ve energy 50% , Rajas mid energy 50% |
| 4 | Planet, the Navagrahas | Surya |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Sooriyanor Kovil |
| 6 | Day of the week | Sunday |
| 7 | Four seasons | Summer |
| 8 | Grains, the Navadhanyam | Wheat |
| 9 | Metal | Gold |
| 10 | Gender | Male |
| 11 | Sense | Sight + Hearing |
| 12 | Zodiac, Rasi | Aries( Mesha) + Taurus ( Rishsabha ) |
| 13 | Navarathna Stone | Ruby |
| 14 | Shapes and Symbol | Diamond + Triangle, Thunderbolt |
| 15 | Most suitable Room /place in a house in E | Main entry, male child, prayer, study room, living hall, balconies, veranda, porch, bathroom. Sleep head towards East for memory / concentration. |
| 16 | Avathar | Ramachandra, 7th Avathar of Vishnu. |
| 17 | Colours | Sun yellow, white , green, red |
| 18 | Vastu Purusha Body Parts | Neck, shoulders and arm |
| 19 | Load & Weight Placing in E | Same as NE, low land and less weight |

**20 Decor and Appeasements**

Face E for prayers. Appeasements for Fire and Aether and Planet Sun. East to be low and open to receive maximum sun light, the vital life energy. Images of Indra, thunderbolt is a good appease. Indra is related to electricity or anything that provides power and motivational forces. Images of sun, elephants, a thunderbolt and anything suggestive of gold, diamond is good appeasement.

### NORTH EAST NE

The Spiritual Corner. The gate way of God. Direction of Spirituality and Fertility. The Energy enters the living area here. Health, wellbeing and joy. The Eshaniyam

| | | |
|---|---|---|
| 1 | Deity | Ishan, Rudran |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Aether ( space ) & Water |
| 3 | Three Universal Forces, Trigunas | Sattva ( + ve energy ) 100% |
| 4 | Planet, the Navagrahas | Jupiter ( Guru) |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Alangudi |
| 6 | Day of the week | Day-Thursday |
| 7 | Four seasons | Winter, |
| 8 | Grains, the Navadhanyam | Chickpea |
| 9 | Metal | Gold |
| 10 | Gender | Male |
| 11 | Sense | Hearing |
| 12 | Zodiac, Rasi | Aquaries ( Kumbha), Pisces (Meena), Aries (Mesha) |
| 13 | Navarathna Stone | Yellow Sapphire, Pukhraj |
| 14 | Shapes and Symbol | Diamond & Vase of Urn |



| | | |
|---|---|---|
| 15 | Most suitable Room/ place in a house in NE | Best for- Main Door, prayer, meditation, young, sick room, well, sump, landscaping, NO -septic tank, toilet, staircase, kitchen, garage, servant room in NE |
| 16 | Avathar | Vamana, 5th Avathar of Vishnu, dwarf brahmin |
| 17 | Colours | Soft yellow, white, light blue/green, silver, gold |
| 18 | Vastu Purusha Body Parts | Head, eyes, mouth |
| 19 | Load & Weight Placing in NE | More open space, no weight, calm atmosphere |

**20 Decor and Appeasements**

A spacious calm atmosphere should be sought at NE, the direction of maximum positive energy, the Sattva. Appeasements for Aether, Water and Planet Jupiter. To have pleasing sounds, wind chime, musical instruments, where Aether functions well in calm and clean areas. NE must be kept away from heavy furniture and clutters for Prana , the Energy to enter. A picture of space, images of fishes, dolphins for water elements. Books of knowledge is best appeasement in NE.
Diamond shaped items.

## NORTH N

The Direction of Wealth, Prosperity, Health and Career. It is cool. Ensures steady income and financial growth. The Direction of Planet Mercury, pleasant and informative conversations. The direction of Kubera, the wealth God, depictured as an ugly dwarf who dwells in high peaks of Himalayas. He has three legs and 8 teeth. He is shown as gold and precious stones.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Kubera, God of Wealth |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Water + Air |
| 3 | Three Universal Forces, Trigunas | Rajas mid energy 50% + Sattva +ve energy 50% |
| 4 | Planet, the Navagrahas | Mercury ( Budhan ) , |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Thiruvenkadu. |
| 6 | Day of the week | Wednesday |
| 7 | Four seasons | Autum |
| 8 | Grains, the Navadhanyam | Mung bean |
| 9 | Metal | Zinc |
| 10 | Gender | Neutral |
| 11 | Sense | Touch + Hearing |
| 12 | Zodiac, Rasi | Sagittarius (Dhanu), Capricon (Magaram) Aquaries (Kumbam) |
| 13 | Navarathna Stone | Emerald, green |
| 14 | Shapes and Symbol | Cresent + Mongoose, small flesh eating animal |
| 15 | Most suitable Room/ place in a house in N | Entrance, Library, study/home office, cash box / valuables, living area, open space. Never sleep head towards north. |
| 16 | Avathar | Buddha, 9th Avathar of Vishnu |
| 17 | Colours | Green, yellow, amber colours, |
| 18 | Vastu Purusha Body Parts | Shoulder, breast, neck |
| 19 | Load & Weight Placing in N | Lighter than S, more space in N than S |

**20 Decor and Appeasements**

Appease Mercury and Kubera. Image of peaks, gold and wealth, images of Lakshmi, coins in containers, photos of Himalayas. No ancestorial photos in North. Store valuable. Image of Budha.

## NORTH WEST NW

The Relationship Direction ruled by the swift Vayu, the Wind God, who rides a deer with bow and arrow. Indicates movement, restless, forceful, communication, business, masculine and friendship. The place of influence of conception of babies. The breath of Vastu Purusha. A free flow of air needed. Ruled by Moon, watery element. Concepts of renewal & rebirth.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Vayu, the Wind God, Soma, the Moon God |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Air + water ( Transparency, cold, restless, ) |
| 3 | Three Universal Forces, Trigunas | Rajas mid energy 100% |
| 4 | Planet, the Navagrahas | Moon, Chandran |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Thingaloor |
| 6 | Day of the week | Monday |
| 7 | Four seasons | Winter |
| 8 | Grains, the Navadhanyam | Rice |
| 9 | Metal | Silver |
| 10 | Gender | Female |
| 11 | Sense | Touch |
| 12 | Zodiac, Rasi | Scorpia (Virichika), Sagittarius (Dhanu), Capricon (Magaram) |
| 13 | Navarathna Stone | Pearl / moonstone |
| 14 | Shapes and Symbol | Cresent &Antelope (shift deer like animal) |
| 15 | Most suitable Room/ place in a house in NW | Dining, bath, guest rooms, kitchen, toilet, septic tank, parking. No master bedroom. |
| 16 | Avathar | Krishna, 8th Avathar of Vishnu in NW |
| 17 | Colours | Pearl white, light blue, green |
| 18 | Vastu Purusha Body Parts | Knees, elbow, hand, arm, fingers |
| 19 | Load & Weight Placing in NW | Light , heavier than NE. |

**20 Decor and Appeasements.**

Appease Vayu and Moon. Lunar symbols, Cresent. Silvery objects and décor for moon. Pictures of tops of mountain, Vayu. Telephone area, air flow good. Mirror is lunar influence.

## WEST W

The direction of Education. Associated with ocean, rain and water, arts, music and entertainment. The direction of students. God of fate, the mysterious, Karma and male issues. Varuna, the God of water is depictured as riding a sea monster that combine features of crocodile and Ox. The Lord of depth, the secrets of unconscious mind and dreams. The Direction of Saturn, the Shani Bhagavan, the dark Planet, which occupies all dark space.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Varuna, rain God |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Air + water + Earth ( liquid, soft, moving) |
| 3 | Three Universal Forces, Trigunas | Rajas mid energy 50% + Tamas -ve energy 50% |
| 4 | Planet, the Navagrahas | Shani |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Thirunallar |
| 6 | Day of the week | Saturday |
| 7 | Four seasons | All seasons |
| 8 | Grains, the Navadhanyam | Sesame |
| 9 | Metal | Iron |
| 10 | Gender | Neutral |
| 11 | Sense | Taste |
| 12 | Zodiac, Rasi | Virgo (Kanya), Libra (Tulam), Scorpia (Virrichika) |
| 13 | Navarathna Stone | Blue sapphire, neelam |
| 14 | Shapes and Symbol | Sphere, Lasso ( rope to catch cattle with knots ) |



| | | |
|---|---|---|
| 15 | Most suitable Room/ place in a house in W | Living, library, study, dining, kids bedroom, |
| | | toilet, septic tank, terrace overhead tank. |
| | | Sleep head towards West for prosperity |
| 16 | Avathar | Kurma ,Tortoise, 2nd Avathar of Vishnu |
| 17 | Colours | Blue, Light greens |
| 18 | Vastu Purusha Body Parts | Navel, fingers tips, forelegs thigh |
| 19 | Load & Weight Placing in W | Heavy than NE , E less than SW |

**20 Decor and Appeasements.**

Appease Earth, Water & Air, Planet Saturn. Picture of Ocean, marine animals, aquariums, images of Varuna or Roman mercury. Sphere shapes, tasty foods pictures, water falls, white horse, light blue objects, décor are preferred in west. Glass ornament like dolphins.

### SOUTH WEST SW

The Master Direction. SW stores energy as reservoir in a living space, so have no or less opens to arrest energy from leaving away. It has the Earth element for stability, influence, fame. The direction of Goddess Nirriti, the lady of sleep, ghost and demons. The direction of Ragu, snake head.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Nirriti |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Earth ( Heavy, rough, dense, hard, inert ) |
| 3 | Three Universal Forces, Trigunas | Tamas -ve energy 100% |
| 4 | Planet, the Navagrahas | Ragu ( snake head ) |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Thirunageswaram, Keezhperumpallam (Ketu) |
| 6 | Day of the week | No days |
| 7 | Four seasons | No |
| 8 | Grains, the Navadhanyam | Ured beans |
| 9 | Metal | Mixed metals, |
| 10 | Gender | No |
| 11 | Sense | Smell |
| 12 | Zodiac, Rasi | Leo (Simha), Virgo (Kanya), Libra ( Tulam) |
| 13 | Navarathna Stone | Gomedh, cat's eye (Ketu) hessonite (Ragu) |
| 14 | Shapes and Symbol | Square, Dagger ( short stabbing weapon) |
| 15 | Most suitable Room/ place in a house in SW | Best for Master Bedroom, warehouse, terrace overhead tank, garage, heavy items, staircase, tall trees, tallest point of the building, NO well, sump and servant room in SW |
| 16 | Avathar | Varaha, Boar, the 3rd Avathar of Vishnu |
| 17 | Colours | Earthly colours, violet, brown, black |
| 18 | Vastu Purusha Body Parts | Feet, toes, genitals, buttocks |
| 19 | Load & Weight Placing in a SW | Max load + height to suppress Nirriti & Saturn |

**20 Decor and Appeasements.**

To Appease Ragu , Nirriti and Earth. Pleasant smell, healthy plants, flowers, arrangements of pebbles. Square shapes. Large and heavy objects and furniture. Goddess riding on lion image of Nirriti. Purple/ pink colours. Images of night and dark acceptable. Pollutions and bad odour is harmful to earth element.

### SOUTH S

The Direction of Prosperity. Mars, the red Planet. The Direction of Lord Yama Dharmaraja, the death God. Represents mother, health, family life, happiness and influences life & death.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Yama Dharmaraja |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Fire + Earth |
| 3 | Three Universal Forces, Trigunas | Tamas -ve energy 50% Rajas mid energy 50% |
| 4 | Planet, the Navagrahas | Mars, Sevai |



| | | |
|---|---|---|
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Vaitheeswaran Koil |
| 6 | Day of the week | Tuesday |
| 7 | Four seasons | Summer |
| 8 | Grains, the Navadhanyam | Pigeon Pea |
| 9 | Metal | Brass |
| 10 | Gender | Male |
| 11 | Sense | Sight + smell |
| 12 | Zodiac, Rasi | Cancer ( Karaka/Kadaga ) + Leo ( Simha ) |
| 13 | Navarathna Stone | Coral red |
| 14 | Shapes and Symbol | Triangle + Square, Club ( stick with head ) |
| 15 | Most suitable Room/ place in a house in S | Bedroom, bath/toilet, spare room, storage, sleep head towards south for happiness / prosperity |
| 16 | Avathar | Narasimha, Lion, the 4th Avathar of Vishnu |
| 17 | Colours | Red, orange, pink, chrome yellow, light blue |
| 18 | Vastu Purusha Body Parts | Calf, thigh, hips |
| 19 | Load & Weight Placing in S | Higher & heavy than NE, lower than SW |

**20 Decor and Appeasements.**

Appeasements for Planet Mars and Fire + Earth element. Arrangements of pebbles and earth ware. Earth element is associated with smell. Ruled by Lord of Death Yama Dharmaraja, the guardian of past, ethics and values of our ancestors. Images of cow or bull is good appeasement. Best for the photos of family members who passed away in this direction.

## SOUTH EAST SE

The Fire Sector. Agni, the Fire God, most scared of all forces. Potent Energy that represents heating, lighting & electrical equipment. It influences romance, passion and health. Agni is a youthful, vigorous young man, red in colour, with a garland of fruits around his neck with three faces and seven arms, riding a ram, a uncastrated male sheep.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Agni |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Agni |
| 3 | Three Universal Forces, Trigunas | Rajas mid energy 100% |
| 4 | Planet, the Navagrahas Venus | (Sukra) |
| 5 | Navagraha Temples in Tamil Nadu | Kanjanur |
| 6 | Day of the week | Friday |
| 7 | Four seasons | Spring |
| 8 | Grains, the Navadhanyam | Kidney beans |
| 9 | Metal | Silver |
| 10 | Gender | Female |
| 11 | Sense | Sight |
| 12 | Zodiac, Rasi | Taurus (Rishaba), Gemini (Mithuna) Cancer (Karaka/Kadaga) |
| 13 | Navarathna Stone | Diamond, vairam |
| 14 | Shapes and Symbol | Triangle, Fire |
| 15 | Most suitable Room/ place in a house in SE | Best for Kitchen, electrical equipment, items with heat, staircase, face east while cooking. |
| 16 | Avathar | Parasurama, Warrior, 6th Avathar of Vishnu |
| 17 | Colours | Red, yellow, orange, silvery white |
| 18 | Vastu Purusha Body Parts | Elbows, knee, forearms , wrist |
| 19 | Load & Weight Placing in SE | Low floor & weight but higher than NE,low SW |



**20 Decor and Appeasements.**

Appeasements for Fire and planet Venus. Decors in red and yellow. Images of Agni and Venus, Agni riding a ram. Candle lights, any items in shape of triangle, remembering heat, light and fire. Oil burner in triangle shape.

## CENTRE C

The heart of the house is called Brahmasthanam, the place of Lord Brahma. Brahmasthanam is the The Energy Centre of the building. This should be kept empty and open to sky, sun, rain and light. Brahma is a four headed God with white beard. Has four hands holding Lotus, Rudrasha beads, Vedas and Water Pot. In Hinduism Brahma is considered the Lord of Creation and he is responsible for creating everything that exist. Along with Gods Vishnu and Shiva, he is part of the Trimuti, the Hindu Trinity of Gods. Brahma is the source of all Vedas.

| | | |
|---|---|---|
| 1 | Deity | Brahma |
| 2 | Five Natural Elements, the Pancha Boodthas | Aether, the space |
| 3 | Three Universal Forces, Trigunas | Centre of all energy |
| 4 | Planet, the Navagrahas | Brahmaloka |
| 5 | Navagraha Temples | Pushkar, Rajasthan. |
| 6 | Day of the week | |
| 7 | Four seasons | |
| 8 | Grains, the Navadhanyam | |
| 9 | Metal | |
| 10 | Gender | |
| 11 | Sense | |
| 12 | Zodiac, Rasi | Taurus (Rishaba) |
| 13 | Navarathna Stone | Ruby |
| 14 | Shapes and Symbol | Book |
| 15 | Most suitable Room/ place in a house in C | Hall, courtyard, prayer, family area. Free from heavy items. No fire and well. |
| 16 | Avathar | |
| 17 | Colours | Red |
| 18 | Vastu Purusha Body Parts | Heart |
| 19 | Load & Weight Placing in C | Centre empty open to sky |

**20 Decor and Appeasements.**

Red is emblematic of the Creator God Brahma and is related to centre of anything. An image of Swan, the mount of Brahma is a good appeasement. No heavy furniture in centre. Brahma's symbol is lotus, swan, a string of beads, book of uplifting theme. Appease with pleasing music or wind chime. Empty containers have essence of element aether. Centre of all rooms to be empty. To appease use empty bowl on table top in dinning or appease with red decoration or bed spreads in bedroom.



# கோவில்களில் விக்கிரகங்களை கருங்கல்லில் சிலைவைப்பதன் இரகசியம் என்ன?

அனைத்து கோவில்களிலும் விக்கிரகங்களை உலோகத்தால் செய்யாமல், கருங்கல்லால் சிலைசெய்கிறார்கள். இதற்கு முக்கியமான ஒரு காரணம் உண்டு. உலோகத்தின் ஆற்றலை விட கருங்கல்லின் ஆற்றல் பல மடங்கு அதிகமானது.

எந்த சக்தியையும் தன் வசம் இழுத்துக்கொள்ளும் தன்மையுடையது கருங்கள். இதில் நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் என பஞ்ச பூத தன்மைகள் அடங்கியுள்ளது. இது வேறு எந்த உலோகத்திலும் வெளிப்படுவது இல்லை.

**நீர்**

கல்லில் நீர் உள்ளது. எனவே தான் தனது இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறாமலிருக்கிறது. கல்லில் நீருற்று இருப்பதை காணலாம். கர்நாடக மாநிலத்தில், சில கோவில்களில் கல்லில் நீரூற்று வருவதை காணலாம்.

**நிலம்**

பஞ்ச பூதங்களில் தத்துவங்களில் ஒன்றான நிலம் கல்லில் உள்ளது. எனவே தான், கல்லில் செடி கொடிகள் வளர்கின்றன.

**நெருப்பு**

கல்லில் நெருப்பின் அம்சமும் உண்டு. கற்களை உரசினால் தீப்பொறி பறக்கிறதே சான்று.

**காற்று**

கல்லில் காற்று உண்டு. எனவே தான் கல்லில் தேரை கூட உயிர் வாழ்கிறது.

**ஆகாயம்**

ஆகாயத்தைப் போல், வெளியிலிருக்கும் சப்தத்தை தன்னகத்தே ஒடுக்கி பின் வெளியிடும் சக்தி கல்லுக்கு உண்டு.

எனவே தான், கருங்கல்லில் கட்டப்பட்ட கோவில்களில் நாம் கூறுவதை எதிரொலிக்கும் அதிசயம் நடக்கிறது. திருவையாறு ஐயாரப்பன் கோவிலில் நாம் பேசுவது அப்படியே எதிரொலிப்பதை நாம் ஆனந்தமாக கேட்டு மகிழலாம். இக்காரணங்களினால் இறை வடிவங்களை பஞ்ச பூதங்களின் (ஐம்பூதங்களில்) வடிவில் இருக்கும் கருங்கல்லில் வடிவமைத்து வழிபாடு செய்கிறோம்.

அபிஷேகம், அர்ச்சனை, ஆராதனைகள் முறைப்படி செய்யும் போது, ஒரு கோவிலின் பஞ்ச பூதங்களின் தன்மை அதிகரிக்கின்றன. அக்கோவிலில் நாம் வணங்கும் போது நம் உடலில் நல்ல அதிர்வுகள் உண்டாகி, அதன் மூலம் நம் வாழ்வில் நல்ல பலன்கள் ஏற்படுகின்றன. இதுவே கருங்கல்லில் சிலை வடிப்பதன் இரகசியம்.



## கண்ணதாசன் அறவாரியத் தலைவர்
## மாண்புமிகு டத்தோ ஸ்ரீ டாக்டர் எம். சரவணன்



கம்பன் கழக விழா, சேக்கிழார் விழா போன்ற ஆன்மீக இலக்கிய விழாக்களை வெற்றிகரமாய் நடத்தி சாதனை படைத்தவர். பாரதிக்கும் விழா நிகழ்த்தியவர், நூல் வெளியீட்டு விழாவிற்கு தலைமை ஏற்று படைப்பாளர்களை ஊக்குவித்து வருகின்றவர்.

எண்ணற்ற மேடை விற்பனர்களை மலையகத்திற்கு அழைத்து இலக்கியம் படைத்தவர். உள்நாட்டு எழுத்தாளர் பெருமக்களுக்கு அளவில்லாமல் கொடுத்து பெருமைப்படுத்தியவர். "மாசா" பல்கலைக் கழகம் கௌரவ டாக்டர் விருது வழங்கி கௌரவித்தது.

லண்டன் கம்பன் கழகத்தில் "செந்தமிழ்ச் செல்வர்" விருதுக்கு பெருமை சேர்த்தவர்.

63 நாயன்மார்களைக் கொண்டு சேக்கிழார் விழாவினை சிறப்பாக நிகழ்த்தியவர். நாடெங்கும் நடைபெறும் குடமுழுக்கு விழாக்களிலும் சமய விழாக்களிலும் முன்னிற்பவர்.

மகிபாலன் பட்டி "கணியன் பூங்குன்றனார்" விருதினைப் பெற்று அதன் மதிப்பை பெருமைப் படுத்திய பெருந்தகை.

உலகமெங்கும் கம்பன் விழா நடைபெறும் சபையிலெல்லாம் தன் குரல் பதித்தவர். உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு, அயலக தமிழர் மாநாடு போன்ற தமிழ் சான்ற பன்னாட்டு மாநாடுகளில் முழங்கியவர்.

டத்தோஸ்ரீ டாக்டர் மு. சரவணன் தலைமை ஏற்றுள்ள கண்ணதாசன் அறவாரியம் ஆதரவில் இந்த மலர் குடமுழக்கு விழா மலரைத் தயாரித்து அளிப்பதில் பெருமை கொள்கிறது.




## நன்றி மலர்கள்

குரோதி ஆண்டு தைத்திங்கள் 21-ம் நாள் (3.2.2025) மங்கல நாளில் கோலாலம்பூர் செந்தூல் தண்டாயுதபாணி திருக்கோவிலின் ஏழாவது குடமுழுக்கு விழா மலரை கண்ணதாசன் அறவாரியம் நல்லாதரவோடு தயாரிக்கும் பேறு பெற்றோம். கண்ணதாசன் அறவாரியத தலைவர் மாண்புமிகு டத்தோ ஸ்ரீ மு. சரவணனார் பெருங் தன்மைக்குத் தலை வணங்குகிறோம்.

குடமுழுக்கு விழா மலர் வனப்பும் வடிவமும் ஒருங்கே கொண்டு திகழ்வதற்கு மூலகாரணம், அருள்மிகு தண்டாயுதபாணித் தெய்வமே காரணம். காரியக்கார சான்றோர்கள் அறவாரிய உறுப்பினர்கள் கவிக் குயில்கள், வளமை நிறை அறிவென்னும் பொழில்களிடையே மலர்ந்த எழில் மலரை உருவாக்கிய அஞ்சிறைத் தும்பிகளாம், கரு. கார்த்திக், மற்றும் ஆற்றல் மிகு ஆன்றோர்களுக்கும் நன்றி மலர்களைச் சமர்ப்பிக்கிறோம்

இம்மலர் மணக்க இணக்கமுடன் வாழ்த்துறை வழங்கிய நல்லிதயங்களுக்கும் அச்சக சோலை பாஸ்கரன் அவர்கள் மற்றும் ஒத்துழைப்பு நல்கிய நகரத்தார் நன்மக்களுக்கும் மனமார்ந்த நன்றி.

**(மலர்க் குழுவினர்)**

**உங்கள் திருக்கரங்களில் தவழும் இந்த மலரை அச்சிட்டு பெருமை சேர்த்தவர்கள்**
**"மலேசிய கண்ணதாசன் அறவாரியம்"**

